

## நன்றி

இந்நூல் திருமலை - திருப்பதி திருக்கோயில் சமய நூல்கள் வெளியீட்டிற்கு வழங்கும்

நிதியுதவித் திட்டத்தின் கீழ் நிதி பெற்று வெளியிடப் பெற்றுள்ளது

நூலை வெளியிட முழு நிதியினை வழங்கிய திருமலை - திருப்பதி திருக்கோயில் நிர்வாகத்தினருக்கு இதய நன்றி

திருவேங்கடவன் அருள் மலர்ப் பாதங்களில் சமர்ப்பணம்.

# வைணவத் திருத்தலங்களின் வரலாற்றுக் கதைகள்

ந.க.மங்கள முருகேசன்,
எம்.ஏ.,எம்.லிட்.,எம்.எட்.,பிஎச்.டி.
வரலாற்றுப் பேராசிரியர்,
அஞ்சல் வழிக்கல்வி நிறுவனம்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை – 600 005.

தென்றல் பதிப்பகம்,
13/3 பீட்டர் சாலை குடியிருப்பு,
இராயப்பேட்டை,
சென்னை – 600 014

பதிப்பு : 2000

பதிப்புரிமை : திருமதி. ம. இராசம் எம்.ஏ., எம்.பில்., பி.எ
13/3, பீட்டர் சாலை குடியிருப்பு,
இராயப்பேட்டை,
சென்னை – 600 014.

விலை : ரூ.50/– (ரூபாய் ஐம்பது மட்டும்)

வெளியீடு : தென்றல் பதிப்பகம்,
13/3 பீட்டர் சாலை குடியிருப்பு,
இராயப்பேட்டை,
சென்னை – 600 014.
✆ 8524346

அச்சகம் : ஜப்பானிக்கா பிரிண்டிங் மீடியா,
7, ஸ்ரீபுரம் உவது தெரு,
இராயப்பேட்டை,
சென்னை – 600 014.
✆ 8261790

நூல் கிடைக்குமிடங்கள்

1. தென்றல் பதிப்பகம்,
வீட்டுஎண் : 13/3, முதல் மாடி,
பீட்டர் சாலை குடியிருப்பு, (புதுக்கல்லூரி எதிரில்
இராயப்பேட்டை,
சென்னை – 600 014. ✆ 8524346

2. அமுத நிலையம் லிமிடட்,
7, ஸ்ரீபுரம் உவது தெரு,
இராயப்பேட்டை,
சென்னை – 600 014. ✆ 8261343

# முன்னுரை

இந்துச் சமயத்தின் இரு கண்கள் சைவமும், வைணவமும். இவ்விரு சமய நெறிகளும் இந்திய மண்ணின் பண்டைய நெறிகள். சமயம் வரலாற்றுடன் – வரலாற்றுக் கதைகளுடன் பின்னிப் பிணைந்துள்ளது. சைவ சமய நெறியில் வரலாற்றுக் கதைகள் ஏராளமாய் விளங்குவதுபோல் வைணவ சமய நெறியிலும் அத்தகைய வரலாற்றுக் கதைகளைக் காண்கிறோம்.

'108 திவ்ய தேசங்கள்' எனப்பட்ட வைணவத் திருத்தலங்கள் பல வரலாற்றுக் கதைகளைக் கொண்டுள்ளன. வைணவ சமய மெய்யடியார்களின் வாழ்வியலோடு அவை தொடர்பு கொண்டுள்ளன.

வைணவத் திருத்தல வரலாற்றுக் கதைகளை வடித்தெடுக்கும்போது, வாழ்ந்து, சிறந்து உயர்ந்து வைணவம் பரப்பிய ஆசார்யர்கள் எனும் மெய்யடிகள், அவர்தம் சீடர்கள் ஆகியோர் வரலாற்றையும் தொட்டுச் செல்லும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

இந்நூலில் 108 வைணவத் திருத்தலங்கள் தொடர்புடைய வரலாற்றுக் கதைகள் சுவைபடச் சொல்லப்பட்டுள்ளன.

வாழும் வைணவ நெறிக்கு இந்நூல் மேலும் ஓர் அணிகலன் என்றால் மிகையாகாது. அழகுத்தமிழ் மாலை இது. சுவைகுன்றாது பக்திநெறி வழுவிடாது படைத்துள்ள இது பயன் அளிக்க வல்லது.

படியுங்கள், பயன் பெறுங்கள்.

*ந.க. மங்கள முருகேசன்*

*ஆசிரியரின் பிற குறிப்பிடத்தகு சிறப்பு நூல்கள்*

1. இந்திய ஆட்சி அமைப்பு வளர்ச்சி வரலாறு (1972)
2. இந்திய வரலாறு – பகுதி ஒன்று (1973)
3. இந்திய வரலாறு – பகுதி இரண்டு (1973)
4. இந்தியச் சமுதாய வரலாறு (1975)
5. ஹர்ஷரின் காலத்தில் வட இந்தியா (1977)
6. சங்க கால ஆட்சிமுறை (1979)
7. SELF-RESPECT MOVEMENT IN TAMILNADU (1980)
8. தமிழ்நாட்டு வரலாறும் பண்பாடும் – பகுதி ஒன்று (1983)
9. SANGAM AGE (1983)
10. இந்திய வரலாறு கி.பி. 1206 வரை (1984)
11. பல்லவர் ஆட்சிமுறை (1985)
12. சோழர் ஆட்சிமுறை (1985)
13. தமிழ்நாட்டு வரலாறும் பண்பாடும் – பகுதி இரண்டு (1985)
14. வரலாற்றுத் துணுக்குகள் (1985)
15. இந்திய வரலாறு கி.பி. 1206 முதல் கி.பி. 1707 வரை (1986)
16. இந்திய வரலாறு கி.பி. 1707 முதல் கி.பி. 1773 வரை (1986)
17. இந்திய வரலாறு கி.பி. 1773 முதல் இன்று வரை (1986)
18. தமிழ்நாட்டுச் சமுதாயப் பண்பாட்டு வரலாறு (1986)
19. மொழித்திறன் (1986)
20. பாண்டியர் ஆட்சிமுறை (1987)
21. விஜயநகர–நாயக்கர் ஆட்சிமுறை (1987)
22. அரசியல் கோட்பாடுகள் (1987)
23. இங்கிலாந்து வரலாறு (1988)
24. துணுக்கு எழுதுவது எப்படி? (1990)
25. சுயமரியாதை இயக்கம் (1990)
26. ஐரோப்பிய வரலாறு – கி.பி.470 முதல் 1648 வரை (1991)
27. அமெரிக்க வரலாறு (1991)
28. வட இந்திய வரலாறு – ஹர்ஷரின் காலம் வரை (1992)
29. தென்னிந்திய வரலாறு (1992)
30. சீன வரலாறு (1992)
31. ஜப்பான் வரலாறு (1992)
32. கிழக்காசிய வரலாறு (1992)
33. பன்னாட்டு உறவுகளும் சூழ்ச்சித்திறனும் (1993)
34. முகலாயர் வரலாறு (1994)
35. நாகரிக வரலாறு (1994)
36. இந்திய வரலாற்றின் முதன்மைக் கூறுகள் 1707 வரை (1994)
37. இந்திய வரலாற்றின் முதன்மைக் கூறுகள் 1707 முதல் இன்று வரை (1994)
38. பாரதி ஒருவரலாற்றுப் பார்வை (1995)
39. காவிரி நிலா (1995)
40. பாரதி பாடல்கள் பிறந்த வரலாறு (1996)
41. அரேபிய வரலாறு (1996)
42. வரலாற்று முறைமை (1996)
43. நவக்கிரகத் திருத்தலங்கள் (1997)
44. பல்லவர் வரலாறு (1997)
45. சேரர் வரலாறு (1997)
46. பாண்டியர் வரலாறு (1997)
47. நவீன ஆசிய வரலாறு (1997)
48. மொழிப் பயிற்சிகள் (1998)
49. துணுக்கு மலர்கள் (1998)
50. சோழர் வரலாறு (1998)
51. ஐரோப்பிய வரலாறு 1789 முதல் இன்று வரை (1998)
52. ஆலயம் (1999)
53. அழகனின் ஆறுபடை வீடுகள் (1999)
54. திருவேற்காட்டுத் திருத்தல வரலாறு (1999)
55. வைணவத் திருத்தலங்களின் வரலாற்றுக் கதைகள் (2000)

# வைணவத் திருத்தலங்களின் வரலாற்றுக் கதைகள்

## இரண்சோட்ராய்

தக்கோர் என்னும் டங்கபுரத்தில் கோயில் கொண்டு இருப்பவர் துவாரகையில் உள்ள கண்ணனே ஆவார். இது எப்படி? கண்ணன் மீது பக்தி கொண்ட விசயசிம்மன் என்பவரும் அவர் மனைவி கங்காபாய் என்பவரும் துவாரகையில் வாழ்ந்தனர். இராமபக்தர் என்று அழைக்கப்பட்ட அவர் ஆண்டுக்கொரு முறை துவாரகை சென்று கண்ணனைத் தொழத் தவறமாட்டார். விசயசிம்மர் எண்பது வயது ஆன போதிலும் அந்நியமத்தை விடவில்லை.

அவருடைய கனவில் தோன்றி துவாரகநாதன் தன்னை அழைத்துச் செல்லக் கூறினார். இரவில் விசயசிம்மர் துவாரகை சென்றபோது கருவறைக் கதவு திறந்தது. அவர் கண்ணனை எடுத்துக் கொண்டு டங்கபுரம் சென்றார். தம் வீட்டிலேயே எழுந்தருளச் செய்தார்.

துவாரகையில் கண்ணனைக் காணவில்லை என்றதும் பரபரப்பு ஏற்பட்டது. டங்கபுரத்திலிருந்து வந்த விசயசிம்மர் எடுத்துச் சென்றார் எனச் செய்தி அறிந்து விசயசிம்மரைப் பிடிக்க அரசர் ஆட்களை அனுப்பினார்.

துவாரகநாதனிடம் தமக்கு ஏற்பட்ட துன்பத்தை அவர் கூறத் தம்மைப் புஷ்கரணியில் போட்டுவிட்டு அங்கு வரும் வீரர்களுடன் வைகுண்டம் வரச் செய்தார் துவாரகநாதன். ஆனால், விசயசிம்மரைத் துவாரகை வீரர்கள் குத்திக் கொன்றனர். விசயசிம்மரின் மனைவி தம் கணவருக்கு ஈமக்கடன் செய்தாள். புஷ்கரணியில் போடப்பட்ட துவாரகநாதன் வெளியே கிளம்ப மறுத்தார். விசயசிம்மரின் மனைவி கங்காபாயே வெளிக் கொணர்ந்தார்.

வெளி வந்த துவாரகைநாதனைப் பார்த்தால் அவர் திருமேனியெல்லாம் இரத்தக் காயமாக இருந்தது. விசயசிம்மரைக்

குத்திய காயங்களெல்லாம் துவாரகைநாதன் உடம்பில் இருந்தன. துவாரகைநாதனின் எடைக்குத் தங்கம் தரச் சொல்லி எல்லோரும் கங்காபாயை வற்புறுத்த மூக்குத்தியைத் தவிர வேறு எதுவுமில்லாமல் போனதால் துலாக்கோலின் ஒருதட்டில் மூக்குத்தியை வைத்து மற்றொரு தட்டில் துவாரகைநாதனை வைக்க மூக்குத்தித் தட்டு உயர்ந்தது.

எல்லோரும் பெருமாளை வேண்டினர். இதனால், 'ஒருநாளில் ஐந்து நாழிகை மட்டும் துவாரகையில் இருப்பேன், மற்ற நேரமெல்லாம் டங்கபுரத்தில் இருப்பேன்' என்றார் இதனால் அவருக்கு ரன்சோட்ராய் என்ற பெயர் ஏற்பட்டது.



## பொன்பரப்பியில் நாதமுனிகள்

நாதமுனிகள் உய்யக் கொண்டாரைத் தம் வாரிசு என நியமித்து அதனை அனைவருக்கும் அறிவித்த பின் தம் இல்லப் பணிகளில் மூழ்கினார்.

ஒருநாள் வேடன் ஒருவன் தன் மனைவியையும், குரங்கு ஒன்றையும் கூட்டிக் கொண்டு நாதமுனிகளைத் தேடி வந்தான். அவ்வேடுவன், முனிவரைச் சேவித்துச் செல்ல விரும்பி அவருடைய திருமாளிகை வந்தான். ஆனால், முனிக்ள் அப்போது ஊரில் இல்லை. வேடன் அவரைக் காணவியலாமல் மேற்குப் பக்கம் ஏமாற்றத்துடன் திரும்பிச் சென்றான்.

அவர்கள் சென்ற சில நேரத்தில் முனிகள் வீடு திரும்பினார் அவருடைய மகளான சிறுமி வேடுவத் தம்பதிகள் வந்து தேடிவிட்டு, மேற்குத் திசை நோக்கிச் சென்றுவிட்டதைக் கூறினாள். வந்தவன் இராமபிரானே என்று முனிகள் உணர்ந்தார். துணுக்குற்று அவ்வேட்டுவன் சென்ற திசை நோக்கித் தேடி பொன் பரப்பி எனும் ஊர் வரை போய்விட்டார்.

வேட்டுவத் தம்பதிகளைக் காணவில்லை. யாரும் கண்டதாகக் கூறவும் இல்லை. அலைந்த களைப்பும், காண இயலவில்லையே என்ற சோர்வும் ஏற்பட்டு மண் மேல் தடாலென மயங்கி விழுந்தார். தலையில் பலமாக அடிபட்டது.

அவரைச் சீடர்கள் இல்லம் கொணர்ந்தனர். இரண்டொரு நாளாக மயக்கம் தெளியவே இல்லை. ஏகாதசி அன்று அவருடைய

உயிர் பிரிந்தது. பொன் பரப்பியில் அவரை அடக்கம் செய்வித்தனர்.



# விட்ணு விநாயகர்

திருமாலின் நரசிம்ம அரதாரத்திற்குக் க்ருத்துரை கூறியவர் விநாயகப் பெருமான். காசிப் பெருமாளின் இரு மனைவியர்கள் அதிதி, திதி ஆவர். திருமாலே தமக்கு மகனாகப் பிறக்க வேண்டும் எனத் திதி பெருந்தவம் புரிந்து வந்தாள். அதிதியோ, தேவர்களையும், மூவர்களையும் கூடி வலிமையுள்ள மகனை வேண்டினாள். அவள் காசிப முனிவரைக் கூடியதால் இரணியன், இரண்ணியாட்சன் எனும் இரு பிள்ளைகள் பிறந்தார்கள்.

இரணியன் தன்னையே சர்வவல்லமை படைத்த கடவுளாக அனைவரும் போற்றவேண்டும் என்று கட்டளையிட்டான். சிவபெருமானிடம் இரணியன் சாகாவரம் பெற்றிருந்தான். அவனைச் சாய்க்கும் வழி காணத் திருமால் வன்னி மரத்தடியில் விநாயகரை வழிபட்டு வந்தார்.

நரசிம்ம அவதாரம், விநாயகர் கூறிய வழிதான். உயர்திணை, அஃறிணை இரண்டாலும் தனக்குச் சாவு நேரக்கூடாது என வரம் பெற்றிருந்தான் இரணியன். பகலிலும், இரவிலும், உள்ளேயும், வெளியேயும் தனக்கு இறப்பு நேரக்கூடாது என வேண்டியிருந்தான்.

அந்த இரணியனை நரசிம்ம அவதாரம் எடுத்துப் பகலு மில்லாத இரவுமில்லாத அந்த நேரத்தில், இருப்பிடத்தில் உள்ளேயும் வெளியேயும் இல்லாமல், வாயிற்படியில், வானமும் பூமியு மில்லாத மடியில், ஆயுதத்தாலும், சகுத்திரத்திரத்தாலும் இல்லாமல் கூரிய நகங்களால் மார்பினைப் பிளந்து குருதியைத் தரையில் சிந்தவிட்டாமல் உறிஞ்சிக் குடித்து, உயிரைக் குடிக்கத் திருமாலுக்கு வழிகாட்டியவர் விநாயகர். அவ்விநாயகர் விட்ணு விநாயகர் எனப்பட்டார்.



# வாமன கணேசர்

நூறு அசுவமேத யாகங்கள் செய்து மாவலிச் சக்கரவர்த்தி இந்திரனைப் போலச் சகல இன்பங்களைத் துய்க்க எண்ணினார்.

அவர் அவ்வாறே தொண்ணூற்றொன்பது யாகங்கள் முடித்தார். கடைசி யாகம் ஒன்றுதான் முடிய வேண்டும். தேவேந்திரனும் தேவர்களும் முனிவர்களும் யாகம் முடிவதை எண்ணிக் கதிகலங்கிப் போயினர். திருமாலிடம் எல்லோரும் ஓடி முறையிட்டனர்.

காசிப முனிவரின் மனைவி அதிதியின் தவப்பயனாக அவள் வயிற்றில் திருமால் பாலகனாகக் குள்ள உருவம் கொண்டு வாமனனாக அவதாரம் செய்தார்.

விநாயகப் பெருமானின் திருவருளை வேண்டி மாவலி சடாட்சர மந்திரத்தை உச்சரித்தார். சடாட்சரமந்திரத்தைக் காசிப முனிவர் ஓதினார்.

மாவலிச் சக்கரவர்த்தி யாகம் செய்யும் இடத்துக்கு விரைந்தார். வாமனர் மாவலியிடம் மூன்றடி மண் வேண்டுமென யாசித்துக் கேட்டார். திருமால்தான் வாமன வடிவில் வந்தவர் என்று குரு சுக்ராச்சாரியார் எச்சரித்தும் அவருடைய பேச்சை மாவலி கேட்கவில்லை. குரு சுக்ராச்சாரி வண்டு வடி வெடுத்துக் கமண்டலத்தை அடைத்தார். குச்சியால் வாமனர் கமண்டலத்தைக் குத்தியதால் சுக்கிரனின் கண் குருடாயிற்று.

குறுமுனியான வாமனன் பேருருவானார். மாவலி, மூன்றாவது அடிக்குத் தன் சிரசைக் காட்டினார். வாமனர் அப்படியே பாதாளலோகத்திற்குத் தள்ளிவிட்டார். விநாயகர் வாமன கணேசர் என அழைக்கப்படுகிறார்.



## திருப்தியா?

அமுதனார் என்பவர் திருவரங்கத்துக் கோயில் அதிகாரி. கோயில் சாவிகள் அவரிடம் இருந்தன. திருவரங்கம் வந்தார் இராமானுசர். ஊர் மக்கள் எல்லோரும் அவரைத் தங்கள் தலைவராக ஏற்றுக் கொண்டனர். ஆனால் அமுதனார் கோயிலை அவரிடம் ஒப்படைக்கவில்லை. திருக்கோயிலை யாரிடமும் தர மனமில்லாதவராய் இருந்தார். யாரும் அமுதனாரிடம் சென்று சாவிகளைத் தரும்படி சொல்லவும் முடியவில்லை.

இந்நிலையில் அமுதனாரின் அம்மா இராமானுசரிடம் மிகுந்த பக்தி கொண்டார். அந்த அம்மையார் இறக்கும்போது

"என் ஈமச் சடங்குகளில் இரமானுசருடைய சீடர்களுக்குக் காலலம்பிச் சாதம் போடு. அப்போதுதான் என் ஆத்மா சாந்தியடையும்" என்று சொல்லிக் கண் மூடிவிட்டார்.

எனவே, அமுதனாரும் இராமானுசரிடம் அவருடைய சீடர்களை அனுப்பும்படி வேண்டினார். இராமனுசரின் சீடர் கூரத்தாழ்வார் இவ்வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டார். சிராரர்த்தங்களில் பிராமணர்கள் உண்டபின் 'திருப்தியா?' என்று சிரார்த்தம் செய்பவர் கேட்பார். பிராமணார்த்தமாகச் சாப்பிட்டவர் 'திருப்தி' என்று பதில் சொன்னாலே சிரார்த்தம் பலிதமாகும், ஆன்மா நிறைவு அடையும் என்பது நம்பிக்கை.

எனவே, கூரத்தாழ்வார் சாப்பிட்டு முடித்ததும் அமுதனாரும் வழக்கப்படி, 'திருப்தியா' என்று கேட்க, 'இல்லை' என்றார் கூரத்தாழ்வார். "இன்னும் என்ன வேண்டும்" என்று கேட்டார் அமுதனார்.

"திருவரங்கத்துத் திருக்கோவிலின் சாவிகள் வேண்டும்." என்றார் கூரத்தாழ்வார். அமுதனார் மறுக்காமல் சாவிகளை எடுத்து வந்து கூரத்தாழ்வாரிடம் கொடுக்க, அவர் அவற்றைத் தம் குரு இராமனுசரிடம் கொடுத்து வணங்கினார். இவ்வாறு திருவரங்கம் கோயில் இராமானுசரிடம் வந்தது.



## நாலாயிரத் திவ்யப்பிரபந்தம்

ஆழ்வார்கள் அருளிச் செய்தன திவ்வியப்பிரபந்தமாகின்றன. நாதமுனிகள் நாலாயிரத்தை முறைப்படுத்தியது எப்படி? பிரபந்தம் என்ற வடசொல் வடமொழியில் போலவே தமிழிலும் தனி நூலைக் குறிப்பது. நாதமுனிக்குக் கிடைத்தவற்றுள் பிரபந்தங்களாக இருந்தவை பதினேழு. ஒவ்வொருவரும் செய்த பதிகங்களின் தொகுதியை ஒரு பிரபந்தமாகக் கொள்ளலாம்.

மொத்தப் பாடல்கள் 3776தான். இரண்டு திருமடல்களில் வரும் கண்ணிகளைத் தனிப்பாடல்களாகக் கொண்டால் மட்டுமே நாலாயிரம் ஆகிறது. பாடல் தொகை நூலின் பெயரில் இடம்பெறுவது தமிழ் வழக்கு. அகநானூறு, கார்நாற்பது, களவழி நாற்பது, முத்தொள்ளாயிரம் ஆகியன எடுத்துக்காட்டுகள். எனவே, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் எனப் பெயரிட்டார்.

திருவாய்மொழி (1102) முன்பே ஆயிரமாக இருந்தது. அது ஒரு தனித்திருமுறை, திருமங்கை மன்னர் அருளிய ஆறு பிரபந்தங்களுள் ஆசுவகைத் திருமொழிகள் ஆயிரம் (1084) எனவே இவையும் ஒரு திருமுறை. தனிப்பாடல்கள் 817. இவை ஆயிரம் ஆகாவிடினும் ஒரு தனித் தொகுதியாயின. எஞ்சியுள்ள 997 பாடல்கள் ஒரு திருமுறையாயின.

நம்மாழ்வார் திருவாய் மொழியைக் கடைசியில் அருளியதால் அது கடைசிப் பிரபந்தமாயிற்று. நாலாயிரம் பாடல்களுக்கும் நாத முனிகள் தகுந்த ராகம் அமைத்தார். மதுரகவிகள் திருவாய்மொழிக்கு மட்டும் இராகம் அமைத்திருந்தார். தம் மருமக்கள் உதவியுடன் அப்பணியையும் முடித்தார்.



## ஆண்டானும் அரசரும்

திருக்கண்ணமங்கை ஆண்டானை அரசர் ஒருவர் காணவந்தார். அரசர் வந்தபோது ஆண்டான் நிட்டையில் இருந்தார். அதனால் பின்னர்க் காணலாம் என்று அரசர் திரும்பிவிட்டார். அந்த ஆரவாரத்தில் நிட்டை கலைந்து கண்ணைத் திறந்து ஆண்டான் பார்த்தபோது, அரசர், தம் அரசியர் கூட்டத்தின் நடுவே கோலாகலமாகத் தூரத்தில் சென்று கொண்டிருந்தார்.

பார்த்த ஆண்டானுக்கு அவர்கள் அரசனும், அரச கூட்டமுமாகத் தெரியவில்லை. அவர்கள் கோபிகைகள் கூட்டமும், கண்ணபிரானுமாய்க் காட்சியளித்தனர். அதைக் கண்ட ஆண்டான் அரசர் இருந்த திசை நோக்கித் தொழுதார். உடன் எழுந்து அவர்களை நோக்கி விரைவாக நடந்தார். அரண்மனை வரை கூடச் சென்றுவிட்டார்.

அப்போது அங்கு வந்த சீடர்கள் திரும்பி வந்து ஆசார்யர் ஆண்டானைக் காணாமல் தவித்தனர். பின்னர் விசாரித்து அறிந்து அவர் சென்ற வழியிலேயே சென்று அரண்மனை வாயிலில் அவரைக் கண்டனர்.

அவரிடம், 'இப்படிச் செய்தல்தகுமா? மானிடனான அரசனையும், அரச குடும்பத்தினரையும், தாங்கள் வணங்கலாமா" என்று வருந்திக் கூறினர்.

"மெய்தான் நீங்கள் உரைப்பது. தன் பெண்டிரோடு வந்த அரசனைக் கண்டபோது என் மனத்தில் கோபிகைகளுடன் கொஞ்சி விளையாடும் கண்ணனாகக் கண்டேன். அதனால் மனம் பேதலித்து விட்டேன்" என்று கூறிச் சீடர்களுடன் திரும்பினார்.



# குருவாயூரப்பன் கையில் மோதிரம்

மலையாளக் கவிஞர் பூந்தானம் குருவாயூரப்பன்பால் மிகுந்த பக்தி கொண்டவர். அவர் தினமும் நெடுந்தொலைவு காட்டுவழியே நடந்து வந்து குருவாயூரப்பனைத் தரிசித்து விட்டுத் திரும்பிச் செல்வது வழக்கம். ஒருமுறை அவர் அவ்வாறு குருவாயூரப்பனைத் தரிசித்து விட்டுக் காட்டு வழியில் சென்று கொண்டிருந்தார்.

அவ்வாறு திரும்பிச் செல்கையில், அவரைத் திருடர்கள் சிலர் வழி மறித்தனர். அப்போது, தம்மைக் காப்பாற்றும்படித் தாம் வழிபடும் குருவாயூரப்பனிடத்து, மனமுருகி வேண்டினார். குருவாயூரப்பனிடம் அவர் வேண்டிய சிறிது நேரத்தில் அவ்வழியாக வந்த வழிப்போக்கர் ஒருவர் பூந்தானத்தைத் திருடர்களிடமிருந்து காப்பாற்றினார்.

திருடர்களிடமிருந்து தம்மைக் காத்த வழிப்போக்கருக்குப் பூந்தானம், தம் மோதிரத்தை அளித்தார். மறுநாள் குருவாயூரப்பன் ஆலயம் சென்று அங்குக் குருவாயூரப்பனை நிர்மால்ய தரிசனம் செய்தார். அப்போது அவருக்கு வியப்பு ஒன்று ஏற்பட்டது. தம்மைக் காப்பாற்றிய வழிப்போக்கருக்குத் தாம் அளித்த மோதிரம் குருவாயூரப்பனின் கையில் இருப்பதைக் கண்டார்.

அப்போதுதான் தம்மை மானிட வடிவில் வந்து காப்பாற்றியவன் அந்தக் குருவாயூரப்பனே என்று பூந்தானம் உண்மையை உணர்ந்தார்.



# தாய்மொழி வேண்டியவர்

மேலபத்தூர் நாராயண பட்டத்திரி வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர் கவிஞர் பூந்தானம் ஆவார். அவர் குருவாயூரப்பன் மீது மிகுந்த பக்தியுடையவர் எனக் கண்டோம். அவர் 'ஞானப்பானை' என்னும் மலையாள நூலை எழுதினார். தாம் எழுதிய நூலைச் சரிபார்த்துத் தரும்படி பட்டத்திரியிடம் வேண்டினார்.

நாராயண பட்டத்திரி மலையாள மொழியை விட வடமொழியைப் பெரிதும் மதிப்பவர். மலையாள மொழியில் எழுதிய பூந்தானத்தின் நூலைப் பட்டத்திரி தொட்டுப் பார்க்காமலே, சமசுகிருதத்தில் எழுதப்படாத எந்தப் பக்தி நூலையும் நான் மதிக்கவே தயாராய் இல்லை'' என்று கூறி ஒதுக்கிவிட்டார்.

அப்படிச் சொல்லித் தாய்மொழியை ஒதுக்கியதால் நாராயண பட்டத்திரிக்கு ஒரு சுலோகங்கூட இயற்ற இயலாமல் போய்விட்டது. அதனால் மனம் வருந்திய அவர் குருவாயூரப்பனிடம் தம் இயலாமைக்குக் காரணம் கேட்டார்.

குருவாயூரப்பன் ''நீ கவிஞர் பூந்தானத்தை இகழ்ந்ததன் பலன் தான் இது. உன் அறிவைவிடப் பூந்தானத்தின் அடக்கமும் அன்பும் நிறைந்த மலையாளக் கவிதைகளே எனக்குப் பிரியமானவை'' என்றாராம். அதுமுதல் அவர் பூந்தானத்தின் கவிதைகளைப் பாடிக் கண்ணனைப் பூசித்தார்.



# மச்சத்தைத் தொட்டு உண்

நாராயணீயம் என்னும் நூலை எழுதியவர் மேலே குறிப்பிட்ட மேலபத்தூர் நாராயணபட்டத்திரி. அவர் நம்பூதிரி வகுப்பில் பிறந்தவர். நாராயண பட்டத்திரியை நோய் ஒன்று பற்றியதால் நோய் நீங்கக் கண்ணனைப் பாடும்படி பலர் அவரிடம் அறிவுரை கூறினர். கண்ணனான குருவாயூரப்பனைப் பாடும் முன்னர் கவிஞர் எழுத்தச்சனைச் சந்திக்கச் சென்றார். எழுத்தச்சன் தாழ்ந்த குலம் எனப்பட்ட குலத்தவர். சேரிக்குள் சென்று விசாரித்த போது அவர் கள்ளுக்கடையில் இருப்பதாகக் கூறினர். மீனைக் கடித்து உண்டவாறே கள்ளைக் குடித்துக் கொண்டிருந்தார் எழுத்தச்சன்.

நாராயணபட்டத்திரி "கிருட்டிணனைப் பற்றிப்பாட வேண்டும். எப்படி ஆரம்பிப்பது என்று புரியவில்லை. தாங்கள் தாம் வழிகாட்ட வேண்டும்" என்று எழுத்தச்சனிடம் வேண்டினார்.

எழுத்தச்சன் தலையை ஆட்டியவாறு, பளிச்சென்று, "மச்சத்தைத் தொட்டு உண்" என்றார். சுற்றியிருந்தவர்கள் திகைத்தனர். ஆனால் பட்டத்திரி மட்டும் அவர் என்ன சொல்கிறார் என்று புரிந்து கொண்டார். "தங்களுடைய அறிவுரைப் படி மச்சாவதாரத்தில் தொடங்கிப் பாடுகிறேன்" என்று கூறிப் பாடத் தொடங்கினார். அவ்வாறு அவர் பாடிய, காவியமே நாராயணீயம்.

பட்டத்திரி குருவாயூரப்பன் சந்நிதியில் ஒவ்வொரு லீலையைப் பாடிவிட்டு, "கிருட்டிணா! நான் சொல்வது சரிதானே?" என்று ஒவ்வொருமுறையும் கேட்பாராம். அதற்கெல்லாம் கிருட்டிணன் தலையாட்டினால்தான் அவர் அடுத்த பகுதியைப் பாடமுனைவாராம்.

கண்ணனைத் தம் முதல் வாசகனாக்கித் தம் பாடல் கேட்க வைத்து, 'நாராயணீயம்' பாடிய நாராயண பட்டத்திரியின் நோயும் குணமாகியது.



# ஆனையின் துயர் போக்கிய ஆழி

இந்திரத்யும்னன் எனும் ஓர் அரசன் திருமாலிடம் மிகுந்த பக்தி பூண்டு ஒழுகியவன். ஒருநாள் அவன் வழிபாட்டில் இருந்த வேளையில் அகத்திய முனி வந்தார். வந்த முனிவரை அரசன் கவனிக்கவில்லை. வணங்கவுமில்லை. இதனால் வெகுண்ட அகத்தியர், அரசனை ஆனையாவாய் என்று சபித்துவிட்டார். யானையான அரசன் பொய்கையிலுள்ள அழகிய தாமரைகளைக் கொண்டு தினமும் திருமாலை வழிபட்டு வந்தார்.

தேவலர் என்னும் முனிவர் தண்ணீரில் நின்று தவம் செய்து கொண்டிருந்தார். 'ஹூ ஹூ' என்னும் கந்தருவன் கர்வம் கொண்டு மறைந்திருந்து அவருடைய காலைப் பற்றி இழுத்தான். முனிவர் அவனைச் சபிக்கவே அவன் முதலையானான். ஒரு மடுவில் முதலை வடிவில் தங்கியிருந்தான். மடுவில் மலர்ந்திருந்த தாமரையைப் பறிக்க யானை இறங்கியபோது, முதலை வடிவினன் யானையின் காலைப் பற்றிக் கொண்டான்.

திருமாலைச் சரண் அடைந்த யானை

*"நாராயணா! ஓ மணிவண்ணா கணையாய்*
*வாராய் என் ஆரிடரை நீக்காய்"*

என்று வாரணன் (யானை) அழைக்கக் காரணன் (திருமால்) கருடன் மீதேறிச் சென்று சுதர்சன வாளைக் கொண்டு முதலையைக் கொன்று யானையைக் காத்தார்.

இதனைத் தேசிகரின் 'நவமணிமாலை'யில்

*மையுமாகடலும் மயிலு மாமழையும்*
*மணிகளுங்கு வினையும் கொண்ட மெய்யனே*
*அடியேர் மெய்யனே விண்ணோரீசனே*
*நீசமனத டைந்தேன்.*
*கையி ழாழியு மாய்க் களிறுகாத்தவனே*
*காலனார் தமரெனைக் கவராது*
*ஐயனே வந்தன்றஞ்ச லென்றருள் தென்*
*னயிந்தை மாரமறர்ந்தானே*

என்று காணலாம்..



# அம்பரீசன்

திருமாலிடம் பக்தி பூண்டவர் அம்பரீசன். திருவாழியாழ்வானை அம்பரீசனிடம் திருமால் ஒப்படைத்திருந்தார். அவரும் திருவாழியை முறையோடு அன்போடு வழிபட்டார். அம்பரீசன் துவாதசி விரதம் மேற்கொண்டிருந்தார். ஓராண்டு விரதம் நடைபெற்றது.

விரதம் முடியும் நாள் கடைசி துவாதசியில் தானம் பல செய்தார். அன்னமிட்டு அந்தணர்களை ஆதரித்தார். உணவு உண்ணப் புகுந்தார். துர்வாச முனிவர் வந்தார். முனிவரை உணவு உண்ண வேண்டினார். முனிவர் நீராடச் சென்றார். நீராடச் சென்ற துர்வாசர் வெகு நேரமாகியும் வரவில்லை.

துவாதசி கடந்துவிடும் போல் இருக்கவே, நீராடச் சென்ற முனிவரும் வராததால், அம்பரீசன் ஒரு கையளவு நீரைப் பருகினார். இதனை அறிந்த முனிவர், சீற்றமடைந்தார். தம் தவ வலிமையால் ஒரு கெட்ட தேவதையைத் தோற்றுவித்து அம்பரீசனைக் கொல்ல ஏவினார். அம்பரீசர் சுதர்சனரிடம் சரண் புகுந்தார்.

சுதர்சனர் பேரொளியோடு சென்று அத்தேவதையை எரித்து ஒழித்தார். ஏவிய துர்வாசரையே கெட்ட தேவதை துரத்தியது. துர்வாசர் அலறி ஓடித் திருமாலிடம் சென்று அடைந்தார். திருமால் அம்பரீசரிடம் செல்லுமாறு முனிவரைப் பணித்தார். அம்பரீசர் சுதர்சனரை வேண்டியதால் சுதர்சனர் முனிவரைக் கொல்லாதுவிட்டார்.

அம்பரீசர் சுதர்சனரைத் துதித்துப்பாடினார். இதுவே 'மகா சுதர்சன துதி' எனப்படுகிறது.

*தவமக்னிர் பகவான் சூர்யசு*
*தவம் சோமோ ஜ்யோதி ஷாம்பதி*
*த்வமா பஸ்த்வம் க்ஷிதிவ் யோம்*
*வாயுர் மாத்ரேந்திரி யாணிச*

என்று அத்துதி தொடங்குகிறது.



## சௌரிராசப் பெருமாள்

திருக்கண்ணபுரம் பெருமாள் கோயிலில் பூசை செய்து வந்த அர்ச்சகர் சிரீதரன் என்பவர், தாம் காதல் கொண்ட கன்னிக்குச் சூட்டிய மாலையையே பெருமாளுக்கும் சூட்டினார். இரவிலே சோழ அரசர் சந்நிதிக்கு வந்தார். பெருமாளுக்குச் சூட்டிய மாலையைச் சிரீதரன் சோழ மன்னருக்கு அளித்தார். தமக்கு அளித்த மாலையில் தலைமுடி ஒன்று இருந்ததை மன்னர் கண்டார்.

சிரீதரனை அழைத்து மன்னர் காரணம் கேட்டார். உண்மையைச் சொன்னால் உயிர் போய்விடுமே என்று அஞ்சிப் பெருமாளுக்கு முடி வளர்ந்துள்ளதாகச் சிரீதரன் ஒரு பொய்யைச் சொன்னார். மன்னரும் அப்போது சென்றுவிட்டுப் பெருமாளுக்குத் தலையில் முடியுள்ளதா என்று சோதிக்கக் காலையில் வருவதாகச் சொல்லிச் சென்றார். சிரீதரன் மாட்டிக் கொண்டோமே எனத் தவித்தார்.

மறுநாள் காலையில் மன்னர் வந்து பெருமாளைச் சோதித்து போது பெருமாள் தலையில் இரண்டு மூன்று கேசங்கள் நீண்டு வளர்ந்து இருப்பதையும் கண்டார்.

அதன் பிறகாவது மன்னன்விட்டுச் சென்றிருக்க வேண்டும். மன்னவனோ, பெருமாள் சிலைமேலுள்ள கேசத்தை,

உண்மையிலேயே வளர்ந்துள்ளதா என்று சோதிக்க ஒருமுடியை இழுத்தபோது, அதனின்றும் தெறித்த குருதித் துளிகள் மன்னரின் முகத்தில் தெளித்தன. தம் தவறு உணர்ந்த மன்னவரும் வருந்தினார்.

அதுமுதல் சௌரிராசன் என்னும் திருநாமம் கொண்டுத் திருக்கண்ணபுரம் பெருமாளை விளித்தனர். இன்றும் அவர் சௌரிராசனாகவே விளங்குகிறார்.



# இராணி மங்கம்மாள் கட்டிய பெருமாள் கோயில்

மதுரைக்கு அரசியாய் விளங்கிய மங்கம்மாள் அமைத்த பெருமாள் திருக்கோவில் ஒன்று ஆடுதுறையில் உள்ளது. இக்கோயில் எழுந்ததைப் பற்றிக் கிடைத்த வரலாற்றுச் செய்தி இது.

காவிரியில் வெள்ளப் பெருக்கினால் ஆற்றின் கரையில் அமைந்து இருந்த கோயில் அழிந்து மண்மேடாயிற்று. மூலவர், தாயார், இதரக் கோயில் சின்னங்கள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன. மீன் பிடிக்கச் சென்ற மீனவர் சிலர் வலையில் சிலை முதலானவை பின்னர் சிக்கின. அவற்றைக் கரை சேர்த்துத் தங்கள் இருப்பிடத்தில் வைத்து அவர்கள் வழிபட்டனர்.

இராணி மங்கம்மாளின் கனவில் திருமால் தோன்றி ஆற்றங் கரையில் ஒதுங்கி மீனவர் குடியிருப்பில் தாம் இருப்பதாகவும் தமக்கு ஆலயம் அமைக்குமாறும் கேட்டுக் கொண்டார். மங்கம்மாளும் தம் தளபதி கிருட்டிண இராசாவுடன் வந்து அவ்விடத்தைப் பார்வையிட்டார். மீனவர் தலைவர் இராமன் என்பவர் பெருமாளைக் காட்டினார். அரசி பெருமாளுக்கு ஆடுதுறையில் கோவிலும் அமைத்தார்.

இக்கோயிலில் இராணி மங்கம்மாளுக்குச் சிலை அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் அம்பர்ஷரதம் என்னும் பிரம்மாண்டமான தேர் இருந்தது எனவும், அரசியார் அத்தேரைப் புதுப்பித்தார் எனவும், புழக்கத்தில் இருந்து அது அழிந்துவிட்டது எனவும் கூறுவர்.



## பாடல் கற்க வந்த பெருமாள்

திருக்கண்ணமங்கைத் திருக்கோயிலில் உறையும் கண்ணன் திருஉருவப் பெருமாள் திருமங்கையாழ்வாரிடம் பாடல் கேட்க மண்ணுலகில் அவதரித்தார் என்பது இறையடியார் நம்பிக்கை.

திருக்கண்ணமங்கைத் திருத்தலத்தின் மீது திருமங்கையாழ்வார் அருளிய பதிகத்தின் கடைசிப் பாவினில், இத்தலத்தின் மேல் தாம் உரைத்த பத்துப் பாக்களைக் கற்றவர்கள் 'விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்' என்று கூறுவதோடு, கண்ணனிடம், 'கண்ணா! நின் தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே' என்றும் பாடினார்.

இதனுடைய பொருள் 'கண்ணனே, நீ கூட இப்பாக்களைக் கற்க நினைத்தால் கற்கலாம்' என்பதே ஆம்! இறைவனையே 'பாடல் கற்றுக் கொள்ள வேண்டுமானால் கற்றுக்கொள்' என்றார்.

'நீ விரும்பினால் கற்றுக் கொள்ளலாம்' என்ற இச்சொல் கேட்டுக் கண்ணனே மாணவராய் வந்து பாடல் கற்றாராம். எப்படி?

பாடலைக் கற்கக் கண்ணன் பெரியவாச்சான் பிள்ளையாகவும், பாடலைக் கற்றுத்தரும்பொருட்டுத் நம்பிள்ளையாக, அவருடைய ஆசானாகத் திருமங்கையும் அவதாரம் செய்தனராம்.

கண்ணன் உரோகிணி நட்சத்திரத்தில் பெரியவாச்சான் பிள்ளையாகவும், கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் நம்பிள்ளையாகத் திருமங்கையும் அவதரித்தனர் என்பர்.



## சாய்ந்த திருக்கோலத்தில் எம்பெருமாள்

திருக்குடந்தைச் சாரங்கபாணிப் பெருமாளின் திருக்கோலம் சாய்ந்த திருக்கோலமாகும். இது எவ்வாறு ஏற்பட்டது?

குடந்தைப் பெருமாளுக்கு ஆராவமுதன் என்னும் பெயர் உண்டு. இவர் ஆழ்வார்கள் அருளிச் செய்த பாக்களைத் தொகுப்பதற்குக் காரணமாக இருந்தமையால் 'ஆராவமுதாழ்வார்' என்னும் பெயரும் கொண்டு விளங்குகிறார். ஆம்! இறைவனும் ஆழ்வார் ஆகிவிட்டார்.

திருமழிசையாழ்வார், பாடுகையில் இப்பெருமானை

'இலங்கைக்கு நடந்த கால்கள் நொந்து களைத்துப் போய் படுத்துள்ளீரோ? வராக வடிவமெடுத்து உலகைத் தாங்கிய களைப்போ?' என்று கேட்டுக் 'கிடந்தவாறு எழுந்திருந்து பேசு கேசவனே' எனப் பாடினார்.

*"நடந்த கால்கள் நொந்ததோ நடுங்கு ஞாலமெனமாய்*
*கிடந்த மெய் குலுங்குவோ விலங்குமால் வரைச்சரம்*
*கடந்த கால் பரப்பிக் காவிரிக்கரைக் குடந்தையுள்*
*கிடந்த வாறெழுந்திருந்து பேசு வாழி கேசவனே"*

இவ்வாறு திருமழிசை பாடியதும் சற்றே எழுகின்ற திருக்கோலத்தில் தோளைச் சாய்த்துப் பெருமாள் எழுந்திருக்க முயல்வதுபோல் காட்சி அளித்தாராம். இன்றும் இதுபோல் சாய்ந்தவாறே எழுந்திருக்க முயலும் திருக்கோலத்தில் பெருமாளைக் காண்கிறோம். இந்த நிலைக்கு 'உத்தனன் சாயி' என்று திருப்பெயர் சூட்டினர்.

பெருமாள் எழத் தொடங்கியதும், 'ஐயோ, வீணாக நம் பெருமாளைச் சிரமப்படுத்திவிட்டோமே' என நினைத்த திருமழிசை ஆழ்வார், எழுந்திருக்க முயன்ற பெருமாளை நோக்கி 'வாழி கேசவனே!' என்று வாழ்த்தி முடித்ததும் அப்படியே சாய்ந்த திருக்கோலத்திலேயே இருந்துவிட்டாராம்.

மெய்யடியார் சொன்ன வண்ணம் எல்லாம் செய்யும் இறைவனை, மனிதன் ஆட்டுவிக்கும் இறைவனை, மனிதரை ஆட்டுவிப்பவன் என்று மாந்தர் கூறிடுதல் வியப்புத்தான்.



## பெரிய உடையார்

வைணவ சம்பிரதாயத்தில் சடாயுவிற்குப் பெரிய உடையார் என்று பெயர். சடாயு சூரியமைந்தன் ஆவார். தசரதருக்குப் பல உதவிகள் செய்து நட்புடன் அவர் விளங்கினார். சம்பராசுரப் போரில் சடாயு அளித்த உதவியை நினைத்த தசரதன் சடாயுவை உயிராகவும், தம்மை உடம்பாகவும் கருதி வந்தார்.

இராம, இலக்குவனரைத் தம் புதல்வர்களாகக் கருதி சடாயு அன்பு செலுத்தியது போலவே, அவர்களும் சடாயுவைப் பெரிய தந்தையாகவே கருதினர்.

திருஞானசம்பந்தர் தம் பாடலில் சடாயுவை

*"ஆதித்தன் மகனன்ன அகன் ஞானத்தவரோடும்*
*போதித்த சடாயென்பான்"* என்றும்
*"மறங்கொண்டங்கி இராவணன் தன் வலி கருதிவந்தானை*
*புறங்கொண்ட சடாயென்பான்"* எனவும் பாடினார்.

சடாயு சீதையின் பொருட்டு இராவணனுடன் போரிட்டு உயிர் துறக்க, இராமன் அவருக்கு இறுதிக்கடன் செய்தார்.

சடாயுவாகிய புள்ளிற்குமோட்சம் அளித்து அதன் உடலுக்குச் செய்ய வேண்டிய கடன்களைச் செய்தமையால் 'புள்ள பூதங்குடி' என்று பூதங்குடி எனும் ஊரை, அழைத்தனர். இது தஞ்சைக்கு அருகில் உள்ளது. திருப்புள்ளம் பூதங்குடி எனவும் அழைக்கப் பெற்றது. சடாயு என்ற வட சொல்லுக்குப்

*'பலமயிர்கள் கோத்துத் திரித்த சடைபோலப் பலவாய்*
*மிக்குத் திரண்ட ஆயுள் உடையவர்'* என்றும்

'சிறகில் உயிரை உடையவர்' என்றும் 'சடை உடையவர்' என்றும் பொருள். இவ்வூரின் சிறப்பை இப்பாடல்காட்டும்.

*விரும்பினவை எய்தும் வினையனைத்தும் தீரும்*
*அரும்பரணவீடும் அடைவீர் - பெரும்பொறி கொல்*
*களம்பூதங்குடி கொள்காயமுடையூர் அடிகள்*
*புள்ளம் பூதங்குடியிற்போம்*



# மணலைப் பொன்னாய் அளந்தவர்

திருமங்கையாழ்வார் திருவரங்கத்து அரங்கநாதன் திருக்கோயில் திருமதில்கட்டும் பணியில் ஈடுபட்டிருந்தார். அப்பணியில் கையில் இருந்த பொருள் எல்லாம் தீர்ந்து போய்விட்டது. இருப்பினும் அத்திருப்பணி நிறைவு பெற்றுவிடவில்லை. எனவே, பொருள் இல்லையே என்று மனங்கலங்கிப் பெருமாளிடமே பொருள் வேண்டினார். பெருமாள், அவரிடம் கொள்ளிடக்கரைக்கு வந்தால் பொருள்தருவதாகச் சொன்னார்.

அவ்வாறே திருமங்கையும் கொள்ளிடக்கரைக்குச் சென்றார். எம்பெருமான் தலைப்பாகை அணிந்து கையில் ஓர் எழுத்தாணி மரக்கால் சகிதமாய் ஒரு வணிகரைப் போன்று அங்கே வந்தாராம்.

இவரைக்கண்ட திருமங்கை, யாரென்று வினவ, அதற்கு அந்த வணிகர், 'உம்பொருட்டு என்னைத் திருவரங்கத்து அழகிய மணவாளனே அனுப்பி வைத்தார்' என்று பதில் சொல்லியிருக்கிறார்.

'அப்படியானால் காலியான மரக்காலுடன் வந்திருக்கிறீர்களே' என்று திருமங்கை கேட்க, அதற்கு அந்த வணிகர் 'இந்த மரக்காலைக் கையில் எடுத்து வேண்டிய பொருளை மனதில் எண்ணி எம்பெருமானே சரண்' என்று மூன்று தடவை சொன்னால் அப்பொருள் சித்திக்கும்' என்று சொல்லியிருக்கிறார்.

'இத்திருமதிலைக் கட்டுபவர்களுக்குக் கூலி கொடுக்க வேண்டும். இந்த மணலை அளந்து போடு' என்று திருமங்கை கூற வணிகர் ஒரு நிபந்தனையுடன் அதற்கு உடன்பட்டிருக்கிறார்.

'சரி, அளந்து போடுகிறேன். ஆனால் இத்திருப்பணியில் உண்மையாக உழைத்தவர்களுக்குப் பொன்னாகவும், ஏமாற்றியவர்களுக்கு இது மணலாகவும் காட்சி தரும்' என்று கூறியிருக்கிறார். சற்று நேரத்தில் பெருமாள் அங்கிருந்து விரைந்து சென்று, மரக்கால், ஓலை, எழுத்தாணியுடன் ஆதனூர்த் திருக்கோயிலில் புகுந்து கொண்டார்.

இன்றும் அவ்வாறே ஆதனூர்ப்பெருமாள் பக்தர்களுக்கு மரக்கால், ஓலை, எழுத்தாணியுடன் அருள்பாலிக்கிறார்.

*'இடரான ஆக்கை இருக்கமுயலார்*
*மடவார்மயக்கின் மயங்கார் – கடவுளர்க்கு*
*நாதனூர் ஆதரியார் நான் எனது என்னார் அமலன்*
*ஆதனூர் எந்தை அடியார்.'*



# இறுதிக் கடன் செய்த பெருமாள்

இறைவன் எத்தனையோ அருட் கொடைகளை, அடியார்களுக்கு வழங்கியவன். ஆனால் அந்த இறைவன் இறந்த தம் அடியவர் பொருட்டு இறுதிக் கடனும் செய்தவர் என்பது இறைவனின் திருச் செயல்களில் ஒன்றாக அமைந்துள்ளது.

திருக்குடந்தை என்னும் கும்பகோணத்தில் வாழ்ந்த லெட்சுமி நாராயணசுவாமி என்னும் அடியார், குடந்தையூர்ச் சாரங்கபாணிப் பெருமானின் இறைபணியில் உண்மைப் பற்றுறுதியுடன் ஈடுபட்டவர். எம்பெருமான் பணியிலேயே காலம் கழித்தார்.

அவருக்கு உறவினர் என்று ஒருவரும் இல்லாது வாழ்ந்து வந்தார். அவர், ஒருநாள் இறைவன் திருவடியை அடைந்தார். அவருக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களை உறவினர் இல்லாமையால் ஊராரே செய்து வைத்தனர்.

மறுநாள் காலையில் வழக்கம்போல் கோயிலைத் திறந்து, கருவறையில் பெருமாளை வழிபட்டபோது கண்ட காட்சி, கண்ட அனைவரையும் திகைக்க வைத்தது.

பெருமாள் ஈரவேட்டியுடனும் இறுதிக்கடன் செய்யும் கோலத்துடனும் அங்கே காட்சியளித்தார். இதனால் ஒவ்வோர் ஆண்டும் அந்த அடியார் இறந்த நாளில் திதிக்குரிய பொருள்களை யெல்லாம் கொண்டுவந்து கோவிலினுள் வைத்துக் கோவிலை மூடிவிடுகின்றனர். அந்த நாளில் பெருமாளே அவருக்கு ஆண்டுதோறும் இறுதிக்கடன் செய்வதாக ஐதீகம்.

*'தானே படைத்துலகைத்தானே அளித்து நீ*
*தானே அழிக்கும் தளச்சியோ – வானில்*
*திருமகுடம் தைக்கச் சிறுகுறளாய் நீண்ட*
*பெரும் குடந்தைக் கிடந்தாய் பேசு*



# மூவாயிரத்து எழுநூற்றாள் வாழியே

*கல்லிருந்தான் தந்தை கலத்தோன் அக்கமலத்*
*தில் இருந்தான் தந்தை அரங்கேசனென்றே தொல்லைமறை*
*உள்ளறையா நின்றமையால் உள்ளமே கள்ளமின்றி*
*வெள்ள றையான் தானே விரும்பு'*

எனப் பாடப்பட்ட ஊர் திருவெள்ளறை.

திருச்சியிலிருந்து துறையூர் செல்லும் பாதையில் பதின்மூன்று கல் தொலைவில் உள்ள ஊர் திருவெள்ளறை. இவ்வூர் ஆலயத்தில் உறையும் தாயார் செண்பகவல்லிக்குப் 'பாங்குடன் மூவாயிரத்து எழுநூற்றாள் வாழியே' என்னும் திருமொழி உள்ளது.

இத்திருமொழி எவ்வாறு உண்டாயிற்று?

சுவேதகிரி, இதசேத்ரம், உத்தமசேத்ரம் என வடமொழியாளர் வழங்கும் திருவெள்ளறையில் சிபிச் சக்கரவர்த்தி தம் படையுடன் தங்கியிருந்தார். அப்போது வராகம் ஒன்றை அவர் கண்டார்.

அது புற்று ஒன்றில் மறைந்துவிட்டது.

இதைக் கண்டு வியப்படைந்த சிபி, அங்கே தவம் மேற்கொண்டிருந்த மார்க்கண்டேயரிடம் இதுகுறித்து வினவினார். சிபியை அப்புற்றுக்குத் திருமஞ்சனம் செய்து வழிபடச் சொன்னார் மார்க்கண்டேயர். அவரும் அவ்வாறே வழிபட்டார்.

திருமால் புற்றிலிருந்து வெளிப்பட்டு 'நின்ற கோலத்தில்' காட்சி கொடுத்தார். இதனை 'சுவேத'வராகத்துருவாய்த் தோன்றினான்' என்று போற்றினார்.

அந்த மார்க்கண்டேயரின் வேண்டுகோளின்படி வடநாட்டில் வாழ்ந்த 3700 வைணவர்களை இங்கே கொண்டு வந்து குடியேற்றிக் கோயிலைக் கட்டிப் பெருமாளைச் சிபி வழிபட்டார். அப்போது அந்த 3700 பேரில் ஒருவர் இறந்து போனார். சிபி மனம் வருந்தினார்.

அடியார் குறை தீர்க்க ஆவன செய்பவராயிற்றே எம்பெருமான். சிபியின் வேதனை போக்க வைணவரின் வேடங்கொண்டு மன்னரிடம் வந்து தன்னையும் சேர்த்தே 3700 எனக் கணக்கிட்டேன் என்று உரைத்தாராம்.

இதனால்தான் திருவெள்ளறைத் திருத்தலத்துத் தாயாருக்கும் 'பாங்குடன் மூவாயிரத்து எழுநூற்றாள் வாழியே' எனும் திருமொழி உண்டாயிற்று.



## ஐந்து தலையால் விளைந்த அவதி

பிரம்மாவிற்கும், சிவபெருமானுக்கும் ஐந்து தலைகள் இருந்தன. நிட்டையில் இருந்த பார்வதி தேவி, அவ்வழியாகச் சென்ற பிரம்மனைத் தவறாகச் சிவபிரான் என்று எண்ணிப் ப்ாதங்களைக் கழுவிப் பணிவிடை செய்தார்.

பிரம்மனோ ஒரு மரியாதையின் பொருட்டே அவ்வாறு அன்னை பார்வதி செய்கிறாள் என்று எண்ணி அந்த வழிபாட்டை ஏற்றுக் கொண்டு விடுகிறார். சிவபிரானுக்கோ இது கண்டு கோபம் பொங்கிற்று. அவ்வழியே வந்த சிவன், ஐந்து தலைகள் தம்மைப்போலவே பிரம்மனுக்கும் இருப்பதினாலேதானே இந்நிலை ஏற்பட்டது என எண்ணினார். பிரம்மனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்தார்.

இதனால் பிரம்மா நான்முகன் ஆனார். சிவனுக்கோ தலையைக் கொய்ததால் பிரம்மஅத்தி தோசம் ஏற்பட்டுவிட்டது. பிரம்மாவின் கபாலமான கொய்த தலை சிவனின் கையில் ஒட்டிக் கொண்டு விட்டது. இத்தோசம் நீங்கவேண்டுமே? அதற்கு என்ன செய்வது? இறைவனானாலும் அவரையும் தோசம் விடாதே!

*சிலமா தவஞ்செய்யும் தீ வேள்வி வேட்டும்*
*பலமா நதியிற் படிந்தும் – உலகில்*
*பரம்ப நூல் கற்றும் பயனில்லை நெஞ்சே*
*கரம்பனூரர் உத்தமன்பேர்கால்*

என அடியார் பாடிய ஊர் கரம்பனூர். திருமாலைத் தோசம் நீங்கச் சிவன் வழிபட்டார். சிவன் இவ்வாறு திருமாலை வழிபட்ட தலங்களில் ஒன்றுதான் கரம்பனூர் என்னும் திருச்சி மாவட்டத்தில் உள்ள உத்தமர் கோயில் என்பர்.

இதுபோல் சிவன் சாபம் தீர்த்த ஊர் ஒன்று உள்ளது. அது திருக்கண்டியூர் ஆகும்.

*"பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை*
*திரிந்துண்ணும் உண்டியான் சாபந்தீர்த்த ஒருவனூர்"*

சாபம் தீர்ந்தது எப்படி? யார் பிச்சையிட்டாலும் சிவன் கையிலுள்ள கபாலம் நிறையாமல் போகவே திருக்கரம்பனூர்ப் பெருமாள் கேட்டுக் கொண்டதற்கு ஏற்ப மகாலட்சுமித் தாயார் கபாலத்தில் பிச்சையிட்டார். அப்போதும் கபாலம் நிறைந்ததேயன்றிக் கையை விட்டு அது நீங்கவில்லை.

பின்னர் சிவபிரான் தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் வழியில் உள்ள திருக்கண்டியூர் வந்து தீர்த்தத்தில் நீராடி எழுந்தார். இப்போதுதான் கபாலம் எனும் மண்டை ஓடு கைவிட்டு நீங்கியது. இவ்வாறு அரன்தோசம் நீங்கியதால் கண்டியூர்ப் பெருமாளுக்கு 'அரசாப விமோசனப் பெருமாள்' என்னும் திருப்- பெயருண்டாயிற்று.

சிவனுக்குக் கண்டீசுவரர் என்னும் ஒரு பெயர் இருப்பதால் கண்டியூர் என்றே இத்தலம் வழங்கப்பெற்றது.

*பேசவரின் தென்னரங்கன் பேரெல்லாம் பேசுகவாய்*
*கேசவனைக் காண்க விழிகேட்க செவி – ஈசனார்*
*உண்டி ஊர்தோறும் உழன்றிரவாமல் தவிர்த்தான்*
*கண்டியூர் கூப்புக என்கை.*



# திருவரங்கத்தில் அரங்கன் பள்ளி கொண்டது எப்படி?

சூரிய குலத்தில் மனுவின் மகனாகப் பிறந்தவன் இட்சுவாகு. அவன் பிரம்மாவைக் குறித்துக் கடும் தவமியற்றினான். தவத்தினை மெச்சிய பிரம்மா அவன் வேண்டிய வரம் தந்தருள, அவன் எதிரில் தோன்றினார். வேண்டிய வரம் தந்தருள வாக்களித்தார்.

பிரம்மலோகத்தில் பிரமன் தினமும் வழிபட்டுவந்த பெருமாளின் விக்ரகமே தனக்கு வேண்டும் என இட்சுவாகு பிரம்மனிடம் கேட்டான். பிரம்மனும் அவ்வாறே இட்சுவாகுவிடம் அதனை வழங்கினார்.

இட்சுவாகுவும் பிரம்மலோகத்துப் பெருமாளை வாங்கி வந்து வழிபட்டு வந்தான். மண்ணுலகில் அயோத்தியில் இராமனாக அவதாரம் எடுத்த பெருமாள் இட்சுவாகுவின் வழித்தோன்றலாய் உருவெடுத்தார். இட்சுவாகு வழிபட்டு வந்த பெருமாளை, அக்குலத்து வாரிசான இராமபிரான் விபீடணனுக்கு வழங்கினார்.

இராமபிரானிடம் பெற்ற திருவுருமான அப்பெருமாளை இலங்கைக்கு கொண்டு சென்று கொண்டிருந்தான் விபீடணன். அவ்வாறு செல்கையில் காவிரியின் கொள்ளிடம் அருகே பெருமாளை ஓர் இடத்தில் கிடத்தி ஓய்வெடுத்தான்.

ஓய்வெடுத்து முடிந்ததும் மீண்டும் பெருமாளை எடுத்துக் கொண்டு செல்ல முயன்றான் விபீடணன். பெருமாளை அவனால் அசைக்க முடியவில்லை. விபீடணனின் கனவில் தோன்றிய பெருமாள் அவன் செல்லக்கூடிய பாதையிலேயே தாம் பள்ளி கொண்டிருப்பதாகவும், அங்கேயே தங்கிவிடப்போவதாகவும் ஆண்டுக் கொருமுறை வந்து தம்மை வழிபட்டுச் செல்லுமாறும் அருளினார். பெருமாள் திருவரங்கத்தில் பள்ளி கொண்டுவிட்டார்.

இந்த நிகழ்ச்சியைத் தொண்டரடிப் பொடியாழ்வார்,

*குடதிசை முடியை வைத்து*
*குணதிசை பாதம் காட்டி*
*வடதிசை பின்பு காட்டி*
*தென்திசை இலங்கைநோக்கி*

என்று குறிப்பிடுகிறார் என்பர்.

குலசேகர ஆழ்வார் பாடுகையில்,

*"கடியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்*
*மாயோனை மணத்தானே பற்றி நின்றென்*
*வாயார என்று கொலோ வாழ்த்தும் நாளே"*

என்று போற்றுகிறார்.

இவர்களுக்கெல்லாம் முன்னரே இளங்கோவடிகள்,

*விரிதிரைக் காவிரி வியன் பெருந்துருத்தி*
*திருவமார்பன் கிடந்த வண்ணம்*

என்று போற்றினார்.

திருவரங்கச் சிறப்பிற்கு ஒரு பாடல்.

*சீர்வந்த உந்தித் திசைமுகனால் அல்லாதுஎன்*
*சோர்வந்த சொல்லில் சுருங்குமோ – ஆர்வம்*
*ஒருவரங்கங்கு ஓயில் உகர்நதவரை ஆள்வரன்*
*திருவரங்கம் கோயில் சிறப்பு*



## பாணரைச் சுமந்தவர்

பெருமாளை அடியார் சுமப்பர். அடியாரைப் பெருமாள் சுமந்தார். எப்படி?

பன்னிரு ஆழ்வார்களில் திருப்பாணாழ்வார் தாழ்ந்த குலம் என்று பிறரால் கருதப் பெற்ற குலத்தில் பிறந்தவர். தாம் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர் என்று கருதப்பட்டதால், திருவரங்கத்தினுள் செல்ல மனம் கூசித் தினமும் தென்காவிரியின் கரையிலிருந்தவாறே திருவரங்கப் பெருமானைப் பாடி வழிபட்டு வந்தார்.

திருவரங்கநாதனுக்குத் திருமஞ்சனத்திற்குக் காவிரியிலிருந்து தினமும் நீர் கொண்டு சென்று கொண்டிருந்தார் லோக சாரங்க முனிவர். அப்போது திருப்பாணாழ்வார் பெருமாளைக் கரையிலிருந்தவாறே வழிபட்டுக் கொண்டிருந்தார். வழியில் நின்று வழிபட்ட திருப்பாணழ்வாரைக் கையைத் தட்டி ஓசை எழுப்பி அப்பால் ஒதுங்கியிருக்கும்படி கூறினார் லோக சாரங்கர்.

பெருமாள் பக்தியில் மூழ்கியிருந்த திருப்பாணாழ்வார் காதுகளில் முனிவர் தம்மை ஒதுங்கும்படிக் கூறியது விழவில்லை. திருப்பாணாழ்வார் தீண்டத்தகாதவர் என்ற உயர்சாதித் திமிர் கொண்ட அந்த லோகசாரங்கன் ஒரு சிறு கல்லை எடுத்து ஆழ்வார் மீது வீசினார். கையில் தொட, கிட்டவரக்

கூடாத தாழ்ந்த குலத்தவர் திருப்பாணாழ்வார் என்னும் இழிந்த நினைப்பு முனிவருக்கு.

முனிவர் எறிந்த கல் பாணர் நெற்றியில் பட்டுக் காயம் ஏற்பட்டுக் குருதி கொட்டியது. எனவே பாணரும் ஒதுங்கி வழி விட்டார். காவிரியில் நீர் கொண்டு தண்ணீர்க் குடத்துடன் திருவரங்கர் முன் வந்து நின்றார் லோகசாரங்கன். அங்கே அவர் கண்ட காட்சி அவரைத் திடுக்கிட வைத்தது.

திருவரங்கப் பெருமானின் நெற்றியிலிருந்து நீர்போல் குருதி கொட்டிக் கொண்டிருந்தது. லோகசாரங்கன் நடுங்கினார். அன்றிரவு லோகசாரங்கன் கனவில் வந்த அரங்கப் பெருமான் திருப்பாணரும் தம் தொண்டரே என அறிவுறுத்தி அவரிழைத்த தவற்றைச் சுட்டிக் காட்டினார்.

மறுநாள் லோகசாரங்கன் தம் தவற்றுக்குப் பரிகாரமாய் திருப்பாணரை வணங்கித் தம் தோள்மீது ஏற்றிச் சுமந்து வந்து திருவரங்கன்முன் விடுத்தார். திருவரங்கனைக் கண் குளிரக் கண்டார். பாணர் கண்டதுமல்லாது கவியும் புனைந்தார். திருவரங்கனின் திருமுகம், கண், வாய், செவி, திருவுந்தி ஆகியவற்றின் பேரழகில் மயங்கினார்.

'அமலனாதிப் பிரான்' எனத் தொடங்கும் பத்துப் பாசுரங்களைப் பாடி வழங்கினார்.

இவ்வரலாற்றைப் பெரிய நம்பிகள் அருளிய தனியன் உரை வடமொழியில் கீழ்க்கண்டவாறு விளக்குகிறது.

*ஆபாத சூட மநுபூய ஹரிம் சயாநம்*
*மத்யேக வேர துஹிதுர் முதிதாந்தராத்ரே*
*அத்ரஷ் ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம்*
*யோ நிஸ்சிரேய மநவை முனிவாஹநஞ்சம*

முனிவர் தோளில் ஏறி வந்து, தம்மைச் சுமக்கச் செய்தமையால் 'முனியை வாகனமாகக் கொண்டவர்' என்னும் பொருளில் முனிவாகனர் என்னும் பெயரும் திருப்பாணாழ்வாருக்கு ஏற்பட்டது.

திருமலை நம்பிகளும் இக்கருத்தையே தாம் அருளிய தனியன் உரையில்,

*காட்டவே கண்ட பாத கமலம் நல்லாடைவுந்தி*
*தோட்டரு முதரபந்தம் திருமார்பு கண்டம் செவ்வாய்*

*வாட்டமில் கண்கள் மேனி முனியேறித்தனிபுகுந்து*
*பாட்டினாற் கண்டு வாழும் பாணர் தாள் பரவினோமே*

என்று பாடி வைத்துள்ளார்.



## "ப்ரணய கலகம்"

திருவரங்கப் பெருமாள் பங்குனி மாதம் நடைபெறும் திருவிழாவில் ஆறாவது நாளில் உறையூர் செல்வார். அங்குச் சென்றுக் கமலவல்லிநாச்சியாரைக் கடிமணம் செய்து கொள்வார்.

பின்னர் ஒன்பதாவது நாளில் தான் திருவரங்கத்திற்குத் திருவரங்க நாச்சியாரைக் காணத் திரும்புவார். உறையூர் சென்று இவ்வாறு கமலவல்லிநாச்சியாரைக் கடிமணம் செய்வதால் கோபம் கொண்ட திருவரங்கநாச்சியார் பெருமாளிடத்து, ஊடல் கொண்டு, 'தம்மைப் பார்க்கக்கூடாது' என்று திருக்கதவைச் சாத்துவார்.

இந்த ஊடலுக்குப் 'பிரணய கலகம்' என்று பெயர். நம்மாழ்வார் வந்து இருவருடைய ஊடலையும் விலக்கச் செய்து அமைதிப்படுத்தி ஒன்று சேர்ப்பார். இந்நிகழ்ச்சிகள் திருவரங்கக் கோயில் பங்குனி உத்திர விழாவாக அமைந்துள்ளன.

இன்றும், இத்திருநாளன்று ஐந்தாவது திருச்சுற்றில் (பிரகாரம்) உள்ள முதன்மை வாயிற்கதவைப் பெருமாள் வருகையில் அடைத்து விடுவர். தாயார் கதவை அடைத்துவிடுவதாக ஐதீகம்.

நம்மாழ்வார் தூது சென்றதன் நினைவாக அரையர்கள் பெருமாளுக்கும், பிராட்டியாருக்கும் நடுவில் இருந்து தூது செல்வார்கள். தவறாமல் பார்க்க வேண்டிய காட்சி இது.

அப்போது பூ, பழம் முதலியவற்றை அரையர்கள் வீசிக் கொள்வதும், ஒருவரோடொருவர் பேசிப் பிணக்குத் தீர்ந்தது என அறிவிப்பதும் நடைபெறும்.

இதன்பின்னர் பெருமாளும் தாயாரும் ஒன்றாகக் காட்சி தருவர். அடுத்தநாளில் ஒரே தேரில் திருவீதி உலா வருவார்கள். இந்தத் தேருக்குக் 'கோரதம்' என்று பெயர்.

திருவரங்கத்து விழாக்களில் சுவையான விழா இது.



## உறங்காப்புளி

திருவரங்கத்துப் பெருமாள் திருக்கோயில் மதில் கட்டும் பணியில் திருமங்கையாழ்வார் பொருள் பெற முயன்று கொண் டிருந்தார். மதில் கட்டும் பணியில் ஈடுபட்டிருந்தவருக்கு அப் பணிக்குப் பொருள் தட்டுப்பாடு ஏற்பட்டது. ஆழ்வார், நாகையில் இருந்த புத்தர் சிலைத் தங்கத்தை எடுத்துக் கொண்டு திருக் கண்ணங்குடி வழியாகத் திருவரங்கம் வந்தார்.

அவ்வாறு திருக்கண்ணங்குடி வந்தவர் களைப்பின் மி குதியால் சாலையோரத்தில் இருந்த புளியமரத்தின் அடியில் படுத்துறங்க எண்ணினார். தங்கத்தை வைத்துக் கொண்டு உறங்குவது எப்படி?

எனவே, புளியமரத்தை ஒட்டியிருந்த வயலில் அத்தங்கத்தைப் புதைத்தார். அப்போது அந்தப் புளியமரத்தைப் பார்த்து, "புளியமரமே, நான் அயர்ந்து தூங்கினாலும் நீ தூங்கிவிடக் கூடாது இத்தங்கத்தை உறங்காமல் விழித்திருந்து பார்த்துக் கொள்" என்று கட்டளையிட்டுச் சற்றுக் கண்ணயர்ந்தவர் நன்கு ஆழ்ந்து உறங்கிவிட்டார்.

மறுநாள் காலைப்பொழுது விடிந்துவிட்டது. திருமங்கை ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார். வயலுக்குச் சொந்தக்காரனும் வந்து வயலை உழ ஏர் பூட்டத் தொடங்கிவிட்டான். உழுதால் தங்கம் வெளிப்பட்டுவிடுமே.

உறங்காமல் விழித்திருந்த புளிய மரம் திருமங்கை ஆழ்வாரை எழுப்பிடத் தன் இலைகளை அவர்மீது உதிர்த்தது . எழுந்த திருமங்கை, தன் கட்டளைப் படி உறங்காமல் விழித்திருந்த புளிய மரத்தை "உறங்காப்புளியே நீ வாழ்க' என்று வாழ்த்தினார். அப் புளிய மரத்திற்கு உறங்காப்புளி என்றே பெயரும் வழங்கியது.



## திருக்கண்ணங்குடியில் கண்ணன்

வடபுலத்தில் கோகுலத்தில் கோபாலனாய்க் குடி கொண்ட கண்ணன், தென்புலத்தில் திருக்கண்ணங்குடி என்று தெய்வீகத் திருத்தலம் அமைத்துக் கொண்ட வரலாறு இது.

வசிட்ட முனிவர் கண்ணன் பக்தியில் திளைத்து வாழ்ந்தவர். தினமும் வெண்ணெய் வைத்துக் கண்ணபிரானை வழிபட்டு நிற்பது வழக்கம். பெருமாள் ஒருநாள் சிறுகுழந்தையாக வடிவெடுத்து வந்த ஆராதனை செய்து கொண்டிருந்த வெண்ணெயை எடுத்து விழுங்கிவிட்டு ஓட்டம் பிடித்தார். கண்ணன் என்று தெரியாமல் ஓடிய சிறுவனைத் துரத்திக் கொண்டு சென்றார் வசிட்டர்.

அப்போது அப்பகுதியில் எண்ணற்ற இருடிகள் தவஞ் செய்து கொண்டிருந்தனர். அப்பகுதி நோக்கிக் கண்ணன் ஓடிவருவதைத் தங்கள் ஞானப்பார்வையால் உணர்ந்த அவர்கள் தங்கள் பக்தியென்னும் பாசக்கயிற்றால் கட்டுண்டு அவரை நிற்கச் செய்தனர்.

அவர்கள் பக்திக்கு இணங்கிநின்ற கண்ணனை ஒரு நிமிட நேரத்தில் ஓடிவந்த வசிட்டன் அவனுடைய திருப்பாதங்களைப் பற்றிக் கொண்டார். அன்பு வலையில் அகப்பட்டு அசைய முடியாதவனாய் கண்ணன் நின்றுவிட்டான். உடனே அங்கே விமானங்களும், கோபுரங்களும் உண்டாகிவிட்டன. பிரம்மனும் தேவர்களும் அங்கே வந்து பிரம்மோற்சவம் நடத்தினர்.

கண்ணன் கட்டுண்டு நின்றபடியால் அவ்வூர் திருக்கண்ணன் குடியாயிற்று. பின்னர் நாளடைவில் திருக்கண்ணங்குடி என மருவியது.



# வரதர் என்னும் திருப்பெயர் விளைத்த அற்புதம்

கணிகண்ணன் என்பவர் தினமும் காஞ்சிபுரத்து வரதராசப் பெருமாளைப் பாடி வந்தார். அப்பகுதியினை ஆண்ட மன்னன் ஒருவன் தன்னையும் பாடும்படி வேண்டினான். கணிகண்ணனோ தன் கவிதை பெருமாளுக்குரியது, மானிடருக்கு அன்று,' என்று கூறினான். அரசன் இதனால் கோபம் அடைந்து கணிகண்ணனை நாடு கடத்த ஆணையிட்டான்.

தம் சீடனான கணிகண்ணனுக்கு நேர்ந்ததைச் செவிமடுத்த திருமழிசையாழ்வார் தாமும் அவனுடன் நாடு கடக்கத் தயாரானார். பெருமாளிடம், கணிகண்ணன் போவதால், தானும் போவதாகவும், உன் பாம்புப் பாயைச் சுருட்டிக்கொள் எனக் கட்டளையிட்டு

இப்பாடலைப் பாடினார்.

*கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி*
*மணிவண்ணா நீ கிடக்க வேண்டா – துணிவுடைய*
*செந்நாப்புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்*
*பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்*

தன் அடியார் சென்றால் பெருமாள் மட்டும் அங்கே இருப்பாரா? பெருமாளும் அவ்விருவரையும் பின் தொடர்ந்தாராம்.

மன்னன் தன் தவறு உணர்ந்து மூவரையுங் கண்டு தெண்டனிட்டு, விழுந்து மன்னிப்புக் கேட்டு மீண்டும் காஞ்சிக்கே எழுந்தருள வேண்டுமென மன்றாடினான். திருமழிசையைக் கணிகண்ணன் பணியவே பெருமாளை உன்னுடைய பாய் விரித்துக் கொள் என்றார் திருமழிசையாழ்வார்.

*கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி*
*மணிவண்ணா நீ கிடக்கவேண்டும் துணிவுடைய*
*செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்*
*பைந்நாகப் பாய் விரித்துக் கொள்.*

என்று பாடக் காஞ்சிக்கு வேகமாகத் திரும்பி வந்து பெருமாள் சயனித்தார். திருமழிசையும், கணிகண்ணனும், பெருமாளும் ஓர் இரவு தம் (உடலை )யாக்கையைக் கிடத்தி இருந்த இடம் 'ஓரிரவுயாக்கை' என அழைக்கப் பெற்றது. பின்னர் ஓரியாக்கை என்று வழங்கப்பட்டு வருகிறது.



# என்னைப் பெற்ற தாயார்

திருநின்றவூரிலே உள்ள பக்தவத்சலப் பெருமாள் திருக்கோவிலில் வாழும் பிராட்டியாருக்கு 'என்னைப் பெற்ற தாயார்' என்னும் திருப்பெயர் உள்ளது. எப்படி இப் பெயர் ஏற்பட்டது?

ஒருமுறை, ஆதிசேடனைத் தாங்கியுள்ள சமுத்திரராசனுடன் திருமகள் கோபம் கொண்டார். அவ்வாறு திருமகள் கோபம் கொண்டதன் காரணம் என்னவென்றே தெரியவில்லை. கோபம் கொண்ட பிராட்டியார் அங்கிருந்து புறப்பட்டுத் திருநின்றவூரில் வந்து நின்றுவிட்டார். சமுத்திரராசர், பெருமாளிடம், முறையிட்டுத் தன்னைக் காத்து இரட்சிக்க வேண்டும் என்றும் 'தேவியை

மீண்டும் எழுந்தருள வேண்டும்' எனவும் வேண்டினார்.

சமுத்திரராசனைப் பெருமாள் 'நீ முன்னே செல், நான் பின்னால் வருகிறேன்' என்று சொல்லியனுப்பினார். சமுத்திரராசன் முன்னே வந்து தன்னை மன்னிக்கும்படியும், 'என்னைப் பெற்ற தாயே' என்றும் தாயாரிடம் வேண்டினார்.

பெருமாளும் அங்கு வந்து சமாதானம் சொன்னார். இருவரும் முதன்முதலாக நிலத்திலேயும் நின்று காட்சியளித்தனார். இருவரும் திருமணக் கோலத்திலேயே காட்சி தந்து அங்கேயே நின்றிலங்க வேண்டுமெனச் சமுத்திரராசன் வேண்டியதால் அவ்வாறே அருள் பாலித்தார் பெருமாள்.

திருநின்றவூரெனவும் பக்தர்களின் உயிருக்குயிராய் விளங்குவதால் பத்ராவிப் பெருமாள் என்றும் பெயர் பெற்றார்.

அதெல்லாம் சரி, பிராட்டியாருக்கு என்னைப் பெற்ற தாயார் என்னும் திருநாமம் ஏற்பட்டது எப்படி என வினா எழலாம். பிணக்குற்றுப் புறப்பட்டு வந்துவிட்ட தாயாரை வந்து வேண்டிய சமுத்திரராசன் என்னவெல்லாம் சொல்லிப் புகழ்ந்து, மன்றாடியும் தாயார் மனந்திரும்பவில்லை. என்னைப் பெற்றதாயல்லவா?' 'தாயே மனந்திரும்பு' என்று தாய்ப் பாசத்தைக் கொட்டியவுடன் தாயார் பிள்ளையின் வேண்டுகோளை ஏற்றாராம்.

அதனால் தாயாரின் திருப்பெயரும் 'என்னைப் பெற்ற தாயார்' என ஆயிற்று.



## திருநந்திபுர விண்ணகரம்

நந்திகேசுவரரான அதிகாரநந்தி சிவனின் ஊர்தியாவார். நந்தீசுவரர் திருமாலைக் காண வைகுந்தம் வந்தார். அவ்வாறு வந்தவர் காவல் புரிந்த துவாரபாலகர்களைக் கேளாது உள்ளே நேரே புக முயன்றார். அவர்கள் நந்திகேசுவரரைத் தடுத்தனர். அவரோ அவர்களைச் சட்டை செய்யாது உள்ளே செல்ல முயன்றார் தம்மை மீறிச் சென்றதால் நந்திதேவரின் உடலில் காரணம் கண்டு பிடிக்க இயலா அளவிற்கு வெப்பம் தகிக்கட்டும் எனத் துவாரபாலகர்கள், சபித்து விட்டனர்.

நந்திதேவர் சிவபிரானிடம் சென்று தம் நிலைமையைக் கூறினார். சாபம் போக்க வழிகாட்டும்படி வேண்டினார். திருமகள்

தவமியற்றிய செண்பகவனத்தில் தவமிருந்து சாபத்தைப் போக்கிக் கொள்ளும்படி வழி காட்டினார் சிவபெருமான்.

நந்தி அவ்வாறே செண்பகவனத்தில் திருமாலை நோக்கிக் கடுந்தவமியற்றினார். தவத்திற்கு மெச்சிய திருமால் நந்தியின்முன் தோன்றிச் சாபம் தீர்த்து வேண்டிய வரம் நல்குவதாகக் கூறினார். அதற்கு நந்திதேவர் தாம் திருமாலை வேண்டித் தவமியற்றிய செண்பகவனத்திற்குத் தம் பெயரே விளங்க வேண்டும் என்னும் தம் அவாவினை வெளிப்படுத்தினார். திருமாலும் அவ்வேண்டுகோளை ஏற்று வரம் அளித்தார்.

செண்பகவனம் என்னும் அத்திருத்தலம் நாதன் கோயில் என்றே அழைக்கப்பட்டு வந்தது. நந்தியின் வேண்டுகோளைப் பெருமாள் ஏற்றதன் விளைவால் செண்பகவனம் எனும் பெயர் மாறித் திருநந்திபுர விண்ணகரம் என அழைக்கப் பெறலாயிற்று.

இத்திருநந்திபுர விண்ணகரம் தஞ்சை மாவட்டத்து வலங்கைமானுக்கு $1^1/_2$ கல் தொலைவில் உள்ளது. சிவ – வைணவக் கலப்பிற்கு இது ஓர் எடுத்துக்காட்டு என்று கூறலாம்.



## ஊறாக் கிணறு

வழிப்பயணமாகச் சென்ற திருமங்கை ஆழ்வார் திருக்கண்ணங்குடியில் ஒருநாள் தங்கினார். அவ்வாறு தங்கியிருந்த போது தாகம் எடுக்கவே, அவ்வூரில் கிணற்றில் நீர் எடுத்துச் சென்று கொண்டிருந்த பெண்களிடம் குடிப்பதற்குத் தமக்கு நீர் அளிக்கும்படி வேண்டினார்.

இவர் யாரென்று தெரிந்து முன்னர் நிலத்திற்கு வாது செய்தது போல், தங்கள் பானைக்கும் வாது செய்து விடுவாரோ என்று எண்ணியோ என்னவோ அப்பெண்மணிகள் நீர் தர மறுத்துவிட்டனர்.

திருமங்கைக்குக் கோபம் ஏற்பட்டுவிட்டது. குடிக்க நீர் தர மறுத்துவிட்டனரே என்னும் ஆத்திர உணர்வும் ஏற்பட்டுவிட்டது.

எனவே, நீர்தர மறுத்ததால் சாபம் ஒன்றும் கொடுத்து விட்டார். இறைவனின் மெய்யடிகள் கோபித்துச் சபித்துவிட்டால்

அது மெய்யாகி விடுமல்லவா? அவரிட்ட சாபம் இதுதான். இவ்வூர்க் கிணறுகளில் என்றும் நீர் ஊறாமல் போகட்டும் என்று சபித்து விட்டார்.

அவர் சபித்தவாறே கிணறுகளில் நீர் ஊற்றுச் சரியாகாமல் போய்விட்டது. இன்றும் திருக்கண்ணங்குடிக் கிணறுகளில் நீர் ஊற்றுச் சரியாக அமைவதில்லை என்றும், அப்படியே நீர் இருந்தாலும் அது உப்பு நீராய்த்தான் உள்ளது என்றும் கூறுகின்றனர்.

ஆயினும் கோயில் மடப்பள்ளிக் கிணற்றில் மட்டும் நல்ல நீர் உள்ளது என்கின்றனர் இந்தச் சாபத்தின் விளைவால் 'ஊறாக்கிணறு திருக்கண்ணங்குடி' என்பது பழமொழியாகிவிட்டது.



# காயாத மகிழ மரம்

திருமங்கை திருக்கண்ணங்குடியில் ஊறாக்கிணறு என்று சபித்துவிட்டு அங்கிருந்து பசி மயக்கத்துடன் புறப்பட்டார். வழியில் அருகிலிருந்த மகிழ மரத்தடியில் ஒய்வு எடுக்க அமர்ந்தார். மகிழ மரத்தின் நிழல், அது தந்த குளுமை ஆழ்வாரை மகிழ்வூட்டியது. பசித்துயர் மறந்தார்.

தம் அடியார் கோபத்தையும் களைப்பால் மயங்கியதையும் பார்த்தார் பெருமாள். அவர் கோபத்தை மட்டும் தீர்த்திட எண்ணாது, பசியையும் தீர்த்திட எண்ணித் தம் தீர்த்தப் பிரசாதத்துடன், வழிப்போக்கன் வடிவில் பசிக்கு உணவும் அளித்தார்.

ஆழ்வார்க்குக் களைப்பும், தாகமும், பசியும் நீங்கியது. உணவும், தீர்த்தப் பிரசாதமும் அளித்திட வந்த பெருமாள் வழிப்போக்கன் வடிவத்திலே வந்தார். வந்தவர் தாம் வணங்கி வழிபாடும் திருமாலே என்பதை ஆழ்வார் உணரவில்லை. வந்தவரும் தம்மை வழிப்போக்கன் என்றே கூறி அடையாளமும் காட்டவில்லை.

தம்மை மகிழ்வித்துக் களைப்பைப் போக்கிய மகிழ மரத்தின்பால் ஆழ்வாருக்கு மன மகிழ்ச்சியே ஏற்பட்டது. மகிழ மரத்தை வாழ்த்தவேண்டும் என்று எண்ணினார். மகிழ மரத்தை வாழ்த்துவது எப்படி? என்று யோசித்தார். மகிழ மரத்தை என்றும் பசுமையாகக் காய்ந்து பட்டுப்போகாது இருக்கவேண்டும் என்னும் கருத்தில்

'காயா மகிழ மரமாக இருக்க' வாழ்த்தினார்.

அம்மகிழ மரம் இன்றும் இருக்கக் காண்கிறோம்.



# ஒரு கண் இழந்த சுக்கிரன்

வாமன அவதாரங்கொண்ட திருமால் மாவல்லிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டார். மாவல்லியும் அதனைத் தாரை வாரத்துக் கொடுக்க முன்வந்தார். மாவல்லி அசுர குலத்தவர். அந்த அசுரர்களின் குருவாக விளங்கியவர் சுக்கிரன்.

திருமால் தம்மை அழிக்கவே வரம் கேட்டார் என்னும் உண்மை தெரியாத மாவல்லிச் சக்கரவர்த்தியும் மூன்றடி மண்ணைத் தாரை வார்த்துக் கொடுக்க முன் வந்ததைத் தடுக்க முடிவு செய்தார் அசுர குருவான சுக்கிரன். எனவே வண்டு உருவம் கொண்டு தாரைச்செம்பின் நீர் விழும் குடத்தை அடைத்துக் கொண்டு தடுக்க முயன்றார்.

வாமனரான திருமால் சுக்கிரனின் சூழ்ச்சியை முறிக்க ஒரு குச்சியால் தடைப்பட்ட தாரைச் செம்பின் குடத்தைக் குத்தினார். உள்ளே வண்டு உருவில் அடைத்த சுக்கிரனின் ஒரு கண்ணை அக்குச்சி குத்திக் குருடாக்கிவிடுகிறது. சுக்கிரன் ஒரு கண்ணிழந்து விடுகிறார்.

இதனைப் பெரியாழ்வார்,

*மிக்கபெரும்புகழ் மாவலிவேள்வியில்*
*தக்கதி தன் றென்று தானம் விலக்கிய*
*சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய*
*சக்கரக் கையனே அச்சோ அச்சோ*
*சங்கமிடந்தானே அச்சோ அச்சோ*

என்று பாடியுள்ளார்.

வெள்ளியங்குடிப் பெருமாளை நோக்கிச் சுக்கிரன் தவமிருந்தார். இழந்த கண்ணைப் பெறச் சுக்கிரன். தவமிருந்த தலம் குடந்தைக்கு அருகில் அமைந்துள்ள வெள்ளியங்குடியே ஆகும்.



# தஞ்சனூர்

தஞ்சைக்கு தஞ்சனூர், தஞ்சையாளி, தண்டகாரண்யம் என மூன்று பெயர்கள் உள்ளன. இம்மூன்று பெயர்களும் எவ்வாறு ஏற்பட்டன என்பதைக் கூறும் புராணக் கதை ஒன்று உள்ளது.

மது எனும் அரசனின் மரபில் தஞ்சகன், தண்டகன், கயமுகன் என்னும் அசுரர் மூவர் தோன்றினர். அம்மூவரும் சிவபெருமானை நோக்கித் தவமியற்றினர். அவர்கள் சாகாவரம் வேண்டியே தவமேற்கொண்டனர். அவ்வாறான இறப்பில்லா வரம் அளிக்கும் வல்லமை திருமாலிடமே உள்ளது எனவும், தம்மால் அவர்களுக்கு இறப்பில்லை என்றும் சிவபெருமான் வரமளித்தார்.

இம்மூவரும் தமக்கு இறப்பில்லை என்பதால் செருக்குற்று முனிவர்களைத் துன்புறுத்தினர். பராசரர் என்னும் முனிவர் தவம் செய்து கொண்டிருந்தார். அவரைத் துன்புறுத்தி அழிக்க முயன்றனர்.

பராசரர் துன்பம் தீர்க்கத் திருமாலை வேண்டினார். திருமால் முனிவரின் துயர் தீர்க்கக் கருடாழ்வாரை அனுப்பினார். அவர் இந்த மூன்று அரக்கர்களுக்கும் துணை நின்ற அரக்கர்களை அழித்தார்.

திருமால் தாமே நேரில் வந்து தம் சக்கராயுதத்தால் முதலில் தஞ்சகனை அழித்தார். தவறுணர்ந்த தஞ்சகன் தன் பெயரால் அவ்வூர் விளங்கவேண்டும் என வேண்டித் தஞ்சனூர் என்று பெயர் பெற்றுத் தஞ்சாவூர் என மாறிற்று.

கயமுகன் என்னும் அரக்கனை நரசிம்ம வடிவெடுத்து அழித்தார். தஞ்சையில் யாளியாகிய நரசிம்ம வடிவில் நின்றதால் தஞ்சையாளியாகியது.

தண்டகன் எனும் மூன்றாம் அரக்கன் பூமியினுள் சென்று மறைந்து கொண்டான். பூமியைக் கீறித் தம் முகக் கோட்டால் அவனுடைய தலையைக் கொய்தார். இவ்வரக்கனின் பெயராலே தண்டகாரண்யம் என வழங்கலாயிற்று.



## காவிரித் தாய் பெற்ற சாபம்

“கங்கையில் புனிதமாய காவிரி” என்பர். அத்தகைய காவிரியும் சாபம் பெற்றதற்கும், சாபம் போக்கிக் கொண்டதற்குமான வரலாறு இது.

அகத்திய மாமுனிவர் பெண்ணான காவிரியை மணக்க விரும்பித் தன்னை மணந்து கொள்ளும்படி விண்ணப்பித்திருக்கிறார். காவிரி இதற்கு மறுத்து விடவே கோபம் கொண்ட அகத்தியர் காவிரியைக் குடம் ஒன்றில் அடைத்துவிட்டார்.

காவிரி அடைப்பட்டிருந்த குடம் தரையில் வைக்கப் பெற்றிருந்தது. காகம் ஒன்று குடத்தைச் சாய்த்துவிட்டோட அடைப்பட்டிருந்த காவிரி வழிந்தோடினாள். இதனால் மீண்டும் சினம் கொண்ட அகத்திய முனி, ‘காவிரி பாய்ந்து அதனால் வளம் பெறும் பகுதியில் உள்ளோர் எல்லோரும் துன்பமடைந்து வறுமையில் உழலட்டும்’ எனச் சபித்தார்.

இவ்வாறு முனிவர் சபித்து விட்டதால், சாபத்தை நீக்கிடத் திருமாலை நோக்கிக் காவிரி தேரழுந்தூரில் கடுந்தவமிருந்தாள். இவ்வாறு சாபம் நீக்கக் காவிரி தவமிருந்ததைப் புலவர் புராணம் எனும் நூல், தேரழுந்தூரைப் பற்றிக் குறிப்பிடுகையில், அவ்வூரின் இரண்டு சிறப்புகளைக் கூறும் வகையில் ‘காவிரி தங்குமூர், கம்பன் பிறந்தவூர்’ எனக் குறிப்பிடுகிறது.

காவிரி தவமியற்றிய தேரமுந்தூர்த் திருத்தலத்து எம்பெருமான் ஆமருவியப்பன், கோசகன், திருவுக்கும் திருவாகிய செல்வன் எனப் பலப் பெயர் கொண்ட தேவாதி ராசன் ஆவார்.

இத்திருத்தலத்தில் தவமியற்றிய வடிவத்தில் காவிரித்தாய் சந்நிதியில் இடம் பெற்றிருக்கிறாள்.



## கோலவில்லி ராமன்

தேவர்களின் சிற்பி விசுவகர்மா. அசுரர்களின் சிற்பி மயன் விசுவகர்மாவிற்கு எண்ணற்ற திவ்ய தேசங்களைக் கட்டிமுடித்த நல்வாய்ப்புக் கிடைத்தது. தனக்கும் அதுபோல வாய்ப்புக்

கிடைக்கவில்லையே என்று மனம் வருந்தினார் மயன். பிரம்மாவை வேண்டிக் கடுந்தவமியற்றினார்.

திருமால் பிரம்மனை நோக்கித் தவமிருந்த மயனின் தவக்கோட்பாட்டை அறிந்து சங்கு சக்ரதாரியாகக் காட்சி கொடுத்தார். மயனோ! 'தான் தரிசிக்க விழைந்த கோலம், இராமனாக எம்பெருமான் வடிவெடுத்த திருக்கோலமேயன்றிச் சங்கு, சக்கரத் திருக்கோலமன்று' என்று கூறினார்.

திருமால், தம் கரத்திலிருந்த சங்கு, சக்கரங்களைக் கருடனுக்கு அளித்துவிட்டுக் கையில் வில் அம்புகளுடன் கோலவில் ராமனாக மயன்முன் தோன்றி நின்றார். இதனால் பெருமாள் கோலவில் ராமன் என்னும் திருப்பெயரும் பெற்றார்.

திருமங்கையாழ்வார் தமக்கும் கோலவில்லி ராமனாகக் காட்சிதர வேண்டும் என வேண்டினார். அவ்விதமே அவருக்கும் காட்சி அளித்தார் திருமால்.

இவ்வாறு கோலவில்லியாக எம்பெருமாள் காட்சியளித்த இடம் ஆடுதுறைக்கு அருகில் உள்ள வெள்ளியங்குடியே என்பது கருத்து. இத்தலத்து உற்சவரான பெருமாளுக்குச் சிருங்காரசுந்தரன் என்னும் திருப்பெயர் உள்ளது.

இங்கு ஒரு சிறப்பு உள்ளது. கருங்கல் தரையில் செவ்வாழை மரம் முளைத்து வருடத்திற்கு ஒரு தார் போட்டுத் தொடர்ந்து வருவது ஓர் அதிசயக் காட்சியாகும்.



## வேல் கொடுத்த ஞானசம்பந்தர்

திருமங்கையாழ்வார் வடதேசப் பயணம் சென்று சீர்காழி வழியாகத் திரும்பி வந்து கொண்டிருந்தார். அவருடைய சீடர்கள் திருமங்கையின் சிறப்புப் பெயர்களை உரக்கக் கூவிக் கொண்டு வந்தனர்.

அப்போது சிவனடியார்கள் திருஞான சம்பந்தர் அங்கு எழுந்தருளியிருப்பதால் அவ்வாறு கூவிக் கொண்டு செல்லக் கூடாது என்று கூறித் தடுத்தனர்.

திருமங்கையின் சீடர்கள் அப்படித்தான் சொல்லிக் கொண்டு செல்வோம் என்று மறுத்துக் கூறினர். இறுதியில்

திருஞானசம்பந்தரும், திருமங்கையும் வாதுக்கு ஆயத்தமாயினர்.

திருமங்கையை நோக்கிய ஞானசம்பந்தன் 'உம்மால் ஒரு குறள் சொல்ல முடியுமா? என்று கேட்டார்.

திருமங்கை,

*ஒரு குறளாய் இருநிலம் மூவடிமண்வேண்டி*
*உலகனைத்தும் ஈரடியா லொடுக்கி – ஒன்றும்*
*தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த*
*தாடாளன் தாளணைவீர் தக்க கீர்த்தி*
*அருமறையின் திறன் நான்கும் வேள்வியைந்தும்*
*அங்கங்கங்கள வைகளாறும் இசைகளேழும்*
*தெருவில் மலிவிழா வளம் சிறக்கும் காழிச்*
*சீராம பிள்ளைகளே சேர்மினீரே*

எனும், ஞானசம்பந்தர் கூறிய குறள் என்னும் வார்த்தையையே கவியின் முதலடியாகக் கொண்டு ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என எண் வரிசையிலும் பாடித் தொடர்ந்து வரும் பத்துப் பாடல்களில் திருமாலின் பத்து அவதாரங்களை விளக்கினார்.

ஞான சம்பந்தர் "நாலு கவிப் பெருமாள் என்பது உமக்கே செல்லும், விருதோதிச் செல்லும், விருந்தோதி செல்லும்" என்று கூறிக் கையிலிருந்த வேலினையும் பரிசாகக் கொடுத்துத் திருமங்கையின் கால்களுக்குத் தண்டை அணிவித்து மகிழ்ந்தார் என்று கூறுவர்.



## தாடாளா வா

காழிச் சீராம விண்ணகரம் என்னும் சீர்காழி திருத்தலத்து இறைவன் பெயர் தாடாளன்.

இத்திருத்தலம் ஒரு சமயம் அழிவுற்றதால் உற்சவரை மட்டும் ஒரு மூதாட்டி தவிட்டுப் பானையில் வைத்துக் காத்து வந்தார். திருமங்கையாழ்வார் சீர்காழி வந்தபோது, அம்மூதாட்டியின் கனவில் வந்த பெருமாள் தன்னைத் திருமங்கையிடம் ஒப்படைக்கும் படி கூறினார். அம்மூதாட்டியும் அவ்வாறே பெருமாளைத் திருமங்கையிடம் ஒப்படைத்தார்.

இதனால் பெருமாளுக்குத் தவிட்டுப் பானைத் தாடாளன் என்னும் பெயர் ஏற்பட்டது.

ஆர்க்காடு நவாபின் ஆட்கள் இப்பெருமாளைத் தூக்கிச் சென்று நவாபின் மகளிடம் கொடுத்தனர். நவாபின் மகள் பெருமாளை வைத்து விளையாடினாள். உற்சவரான பெருமாள் எங்கிருக்கிறார் என்பது தெரியாமலே இருந்தது.

சீர்காழியில் வாழ்ந்த சிதம்பர படையாச்சி என்பவரின் கனவில் வந்த பெருமாள், தாம் இருக்குமிடத்தைத் தெரிவித்தாராம். மதிற்சுவர் அருகே வந்து நவாபின் ஆட்கள் அனைவரும் தூக்கிக் கொண்டிருந்தபோது,

*தாடாளா வா! தாடாளா வா!*
*வெண்ணெய் உண்ட தாடாளா வா!*
*தாடாளா வா! தாடாளா வா!*
*தவிட்டுப்பானைத் தாடாளா வா.*

என்று கூறச் சிதம்பரப் படையாச்சியின் கையில் பெருமாள் சேர்ந்தார். அப்பெருமாளைக் கொண்டு சேர்த்தார்.

இந்நிகழ்ச்சியின் நினைவாக இன்றும் சிதம்பரப் படையாச்சியின் மரபினருக்குச் சீர்காழிக் கோவிலில் தனி மரியாதைகள் தரப்படுகின்றன.



## எம்பார்

கோவிந்தர் என்பவர் இராமானுசரின் சிறிய தாயார் மகன் இவரே குரு யாதவப் பிரகாசர் இராமனுசரைக் கொலை செய்யத் திட்டமிட்டபோது காத்தவர். திருமலையில் திருமலை நம்பிகளுக்குக் கோவிந்தர் தொண்டு செய்து வாழ்ந்து வந்தார்.

இராமனுசர் திருமலை நம்பிகளிடம் இராமாயணம் கேட்கத் திருமலை சென்றார். அங்கே அவர் பாம்புக்கும் அருளும் அருள் உள்ளத்தைக் கண்டார்.

கோவிந்தர் நந்தவனத்தில் களையெடுத்துக் கொண்டிருந்தபோது, ஒரு நாகம் தன் தலையை மேலும் கீழும் புரட்டிக் கொண்டிருப்பதைக் கண்டார். உற்றுப் பார்த்தபோது, அதன் நாக்கில் எப்படியோ பெரிய முள் தைத்திருந்தது.

அந்நாகம் கொடியதே, அதனுடைய நாவுப் பையில் நஞ்சு தங்கியுள்ளதே என்று கலங்காமல், அஞ்சாமல் கோவிந்தர் அதனருகில் சென்று அதனைப் பிடித்து முள்ளை எடுத்து

அதற்கு ஏற்பட்ட துயர் களைந்தார். அதனைத் துன்பத்திலிருந்து விடுபட்டுச் செல்லச் செய்தார்.

இராமானுசர் இதனைக் கண்டு அகமகிழ்ந்து, கோவிந்தரைத் திருமால் நம்பிகளிடமிருந்து தமக்குரிய பரிசாகப் பெற்றுத் திருவரங்கம் வந்தார் 'எம்பார்' எனும் சிறப்புப் பெயர் சூட்டி மகிழ்ந்தார்.



## குடப்பாம்பில் கையிட்ட கோன்

குலசேகராழ்வாருக்குக் 'குடப்பாம்பில் கையிட்ட கோன்' என்னும் பெயர் ஒன்று உள்ளது. எதனால் அவர் அவ்வாறு அழைக்கப் பெற்றார் என்பதன் வரலாறு இது.

இராமரின் பிறந்தநாளாம் இராமநவமி நாளைக் குலசேகராழ்வார் சிறப்பாக நடத்துவார். திருமாலடியார்களுக்குப் பொன் பொருளை வழங்கி அந்த நாளில் சிறப்பிப்பார்.

ஓர் இராம நவமித் திருநாளின்போது இராமபிரானுக்குத் திருமஞ்சனம் நடைபெற்றது. அமைச்சர்கள் ஒரு தவறான செயலைச் செய்து, திருமாலடியார்கள்பால் திருட்டுப் பழி வரும்படிச் செய்யத் திட்டமொன்று தீட்டினார்.

திருமாலின் திருவாபரணங்களை எடுத்து ஒளித்து வைத்துக் கொண்டு அவற்றைத் திருமாலடியார்கள் எடுத்துக் கொண்டதாகப் பழி தூற்றினர்.

அவர்கள் எடுத்துக் கொள்ளவில்லை என அதனைக் குலசேகரர் மறுத்துரைத்தார். அமைச்சர்களின் இச்சதி கண்டு அவர் மனம் புழுங்கினார். "எம்மடியார் அது செய்யார், செய்வாரேல் நன்று செய்வார்" எனக் கூறினார்.

அது மட்டுமல்லாது, ஒரு பாம்பைக் குடத்தில் இட்டு, அதில் கையை நுழைத்துத் திருமாலடியார் அப்பாதகம் செய்தால் தம்மைப் பாம்பு தீண்டட்டும் என்று கூறினார்.

குலசேகரர் அக்குடத்தில் தம் கையை நுழைத்தார். பாம்பு அவரைத் தீண்டவில்லை. அடியார் மீது அவர் கொண்ட நம்பிக்கை வெளிப்பட்டது.

*ஆரம்கெடப்பரனென்பர் கொள்ளாரென்று அவர்களுக்கு*
*வரம்கொடு குடப்பாம்பில் கைவிட்டவன் மாற்றலரை*
*வீரங்கெடுத்த செங்கோல் கொல்லிக் காவலன்*
*வில்லவர்கோமான்*
*சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே*

எனப் புகழப் பெற்றார். அடியார் மீது சுமத்திய வீண்பழி குறித்து அமைச்சர்கள் வருத்தம் தெரிவித்தனர்.



## நீலமேகன் திருமங்கையானார்

ஆழ்வார் திருநகரிக்கு அருகில் குறையலூரில் படைத் தலைவனின் மகனாக நீலமேகன் அல்லது நீலன் என்பவர் பிறந்தார். திருவாலியில் வளர்ந்து வந்த அழகுமங்கை குமுத வல்லியைத் திருமணம் செய்து தரச் சொல்லி நீலமேகன் கேட்டார்.

குமுதவல்லியோ, 'திருவிலச்சினை பெற்றுப் பரமபாகவதரான ஒருவனையே தான் மணம் முடிப்பேன்' என்று கூறிவிட்டாள்.

நீலன் அவ்வாறே பரமபாகவதனாகி மாறி வந்து குமுதவல்லியைத் தன்னை மணமுடிக்கக் கேட்டார். குமுதவல்லியோ 'தனக்கு ஒரு விரமிருப்பதாகவும் அவ்விரதம் முடிந்த பின்னரே திருமணம் செய்ய முடியும்' எனவும் குறிப்பிட்டார்.

"தினமும் ஆயிரம் திருவைணவருக்கு அன்னதானம் செய்ய வேண்டும்' என்பதே தன்னுடைய விரதம்" என்றாள். எனவே அவளுடைய விரதத்தை நிறைவேற்றி வைத்துப் பின் அவளை மணக்க நீலன் முயன்றார். நீலன் அதற்கெனத் தம் பொருள் எல்லாம் செலவழித்தார். இறுதியில் அரசனுக்குக் கட்ட வேண்டிய கப்பம் கட்டப் பணமில்லாமல் போயிற்று. கப்பப்பணம் கட்டாததால் நாச்சியார் கோவிலில் நீலன் சிறை வைக்கப் பெற்றார்.

மூன்று நாள் அன்ன ஆகாரமின்றி இருந்தார்; பெருமாளிடம் மனம் உருகி வேண்டினார். நறையூர்ப் பெருமாள் காஞ்சிபுரம் வேகவதி நதியில் புதைந்துள்ள நிதியை எடுத்துக் கப்பம் செலுத்திச் சிறையிலிருந்து விடுபட ஆணையிட்டார். வேகவதி ஆற்றில் கிடைத்த புதையலைக் கொண்டு கப்பம் செலுத்தினார் நீலன்.

மீண்டும் பொருளின்றிப் போகவே வழிப்பறியில் இறங்கலானார். செல்வச் சிறப்பு வழங்கும் அன்னை, திருமகளாம் இலக்குமி நீலனுக்கு உதவிடும்படித் திருமாலை வேண்டினார்.

தாயார் வேண்டுகோளை ஏற்றுத் திருமாலும், திருமகளும் மணமக்களாய் மாறினர். பூர்ண மகரிடியின் புதல்வியாய்த் தோன்றினாள் இலக்குமி. திருமால் அழகிய மணவாளனாய் ஆலிநகர் வந்தார். திருமகளை அழகிய மணவாளன் மணம் முடித்தார். மணமக்கள் மணம்முடித்துப் பொற்குவியல்களுடன் சென்று கொண்டிருந்தனர்.

பெரிய திருமணக்குழு பொற்குவியல்களுடன் செல்வதைக் கேள்வியுற்றுப் பொருளைக் கொள்ளையிட நீலன் வேதராசபுரம் வந்தார். மணமக்களை வழிமறித்துப் பொருள்களைக் கொள்ளையடித்து அதனைக் கட்டி வைத்து மூட்டையாகத் தூக்க முயன்றபோது அவரால் அதனைத் தூக்க முடியவில்லை.

மணவாளன் தான் ஏதோ மந்திரம் போட்டுக் கொள்ளைப் பொருளைத் தூக்கவியலாமல் செய்து விட்டான் என எண்ணி நீலன் மணவாளனை வெட்ட வாளினை உருவினார்.

அழகிய மணவாளனாய் வந்த பெருமாள், நீலனை அருகில் அழைத்து மந்திரத்தைக் கூறுவதாய்க் கூறிச் செவிகளில் எட்டெழுத்து மந்திரமான 'ஓம் நமோ நாராயணா' வை ஓத ஞானமும், தன் முற்பிறப்பும் நீலனான திருமங்கைக்கு விளங்கியது.

குமுதவல்லி எனும் திருமங்கையினால் திருமால் பக்தியில் திளைத்தமையால் நீலன் திருமங்கையாழ்வார் ஆனார்.

நறையூர், திருநகரி, மங்கை மடம் ஆகியன திருமங்கையின் வாழ்வுடன் தொடர்புடைய திருத்தலங்கள் ஆகும்.



## அண்ணனாய் வந்த பெருமாள்

இறைவனை அம்மையாக, அப்பனாக, ஒப்பில்லா மாமணியாக அழைப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால், பெருமாளை அண்ணனாக உருவகப்படுத்தி அண்ணா என்று அழைப்பது ஒரு புதுமை.

அவ்வாறு 'அண்ணா' எனத் திருமாலை அழகுத் தமிழ்ச் சொல்லால், பாசச் சொல்லால் அழைத்தவர் திருமங்கை

யாழ்வார். பன்னிரு ஆழ்வார்களில் எந்த ஆழ்வாரும் அவ்வாறு பெருமாளை அண்ணனாக விளித்ததில்லை.

திருமங்கையால் அண்ணன் என அழைக்கப் பெற்றவர் திருமலையில் வாழும் வேங்கடவன், அதன் பின்னர் 'திருவெள்ளக்குளம்' என்னும் திருக்கோயில் குடிகொண்ட சீனிவாசப் பெருமாளை அழைத்தார்.

*கண்ணா கடல் போய் திருமேனி கரியாய்*
*நண்ணார் முனை வென்றி கொள்வார் மன்னு நாங்கள்*
*திண்ணா மதின் சூழ் திருவெள்ளைக்குளத்துள்*
*அண்ணா அடியேனிடரைக் களையாமே*

என்று தொடங்குகிறார்

திருவேங்கடத்துப் பெருமாளை முதலில் அண்ணா என்று விளித்துப் பின்னர் திருவெள்ளக் குளம் பெருமாளை மட்டுமே 'அண்ணா' என்றதால் அந்த அண்ணனுக்கு இவர் அண்ணனார். அந்த அண்ணன் குடிகொண்ட கோயில் 'அண்ணன் கோயில்' என்றே அழைக்கப்படுகிறது.

'வேடார் திருவேங்கடமேய விளக்கே' எனத் திருமாலைப் பெருமாளுக்கும் இவருக்கும் உள்ள தொடர்பினைத் திருமங்கை காட்டுகிறார்.

திருவெள்ளக்குளம் அண்ணன் கோயிலில் திருமால் சீனிவாசப் பெருமாளாய் அலர் மேல் மங்கைத் தாயாருடன் காட்சி தருகிறார்.



# திருவயிந்திபுரத்தில் சிவனாய் வந்தவர்

சோழ மன்னர்கள் சைவ, வைணவ நெறி போற்றியவர்களாக விளங்கியுள்ளனர். கோவிந்தராசப் பெருமாளைக் கடலில் எறிந்தார் என்று உறுதி செய்யப்படாத ஒரு செய்தியுடன் தொடர்புடைய ஒரு சோழ மன்னர் தவிர்த்து வேறு எவரும் தீவிர சைவப்பற்றாளராக விளங்கிடவில்லை. அதாவது பிற சமயங்களை வெறுப்பவராக, விளங்கிடவில்லை.

ஆனால், ஒரு சோழ மன்னர் திருவயிந்திபுரம் திருமால் திருக்கோயிலை இடித்துவிடும் நோக்குடன் அவ்வூர் வந்ததாகவும், ஆடு மேய்க்கும் சிறுவர்கள் இத்திருமால் கோயிலைச் சிவன்

கோவில் என்று கூறிவிடவே திரும்பிச் சென்று விட்டார் எனவும் கூறுவர். உற்றுப் பார்த்த சோழனுக்குத் திருமால் சிவனாகக் காட்சி தந்தார் எனக் கூறுவர்.

இவ்வாறான சோழன், ஆடு மேய்க்கும் சிறுவன் முதலிய கற்பனைக் கதைகள் தோன்றியதேன்? அதற்கும் ஒரு காரணம் உள்ளது. இத்திருக் கோயில் விமானத்தின் கீழ்கிழக்குத் திசையில் பெருமாளும், தெற்கில் தட்சிணாமூர்த்தியாகிய சிவனும், மேற்கில் நரசிம்மனும், வடக்கில் பிரம்மாவும் அமர்ந்துள்ளனர்.

இவ்வாறு சிவன், திருமால், நரசிம்மர், பிரம்மா ஆகியோர் விமானத்தில் (கருவறைக்கு மேலுள்ள கோபுரம்) அமைந்திருப்பது எங்கும் காணக் கிடைக்காத காட்சி.



## பல்லிகளான முனிவர்கள்

காஞ்சிபுரம் வரதர் ஆலயத் திருச்சுற்றில் தங்கத்தினாலும், வெள்ளியினாலும் இரண்டு பல்லிகள் இருப்பதைக் காணலாம். இவ்வாறு இத்திருத்தத்தில் பல்லிகள் வடிவம் செதுக்கி வைக்கப் பெற்று இருப்பது ஏன்?

'சுருங்கிபேரா' என்றும் முனிவருக்கு கேமன், கக்லன் என இரு புதல்வர்கள் இருந்தனர். அவர்கள் இருவரும் கௌதம முனிவர் என்பவரிடம் பயின்று வந்தனர். தினமும் அம்முனிவரின் வழிபாட்டிற்கு வேண்டிய பூ, பழம், நீர் கொண்டு வந்து கொடுப்பது அவர்கள் வழக்கம்.

ஒருநாள் முனிவர் பூசைக்கு நீர் எடுத்து வந்து வைத்தனர். அந்நீரை மூடாமல் வைத்துவிட்டனர். அந்நீரில் பல்லி ஒன்று விழுந்து விட்டது. இதனை அறியாது தீர்க்கத்தை எடுத்து முனிவரிடம் வழங்கினர்.

அவ்வாறு வழங்கியபோது, நீரில் இருந்த பல்லி தாவியோடியது. இதைக் கண்ட முனிவர் தம் சீடர்களைச் சினந்து பல்லிகளாய்ப் போகும்படி முனிவர் சபித்தார். சீடர்கள் தவறுணர்ந்து மன்னிக்கும்படி வேண்டினர்.

இந்திரனுடைய யானையாகிய ஐராவதமே மலை வடிவங் கொண்டு வரதனைத் தாங்கி நிற்கிறது. எனவே, இந்திரன் வரதனைத் தரிசிக்க இச்சன்னதியில் நுழையும்போது அவர்களின்

சாபம் அகலும் எனச் சாபம் நீங்கும் வரமளித்தார்.

முனிவரின் புதல்வர்கள் பல்லிகளாய் வந்து அமர்ந்தனர். இந்திரன் இத்தலத்தில் நுழைந்ததும் இவர்களின் சாபமகன்று தங்கள் பழைய உடல் பெற்று வரதரைச் சேவித்து முக்தியடைந்தனர்.

அவர்களின் நினைவாக அவர்கள் முக்தியடைந்ததைக் காட்டும் வகையில் இரு பல்லிகளைக் கல்லில் செதுக்கி வைத்தனர்.



## வரம் தரும் பெருமாள் வரதர் ஆனார்

விண்ணுலகில் ஒரு விவாதம் நடைபெற்றது. மும்மூர்த்திகளான பிரம்மா, திருமால், மூவரும் தங்கள் துணைவியர் இன்றித் தனித்து வேள்வி செய்து வெற்றிபெறவியலுமா? என்பதே அவ்விவாதம்.

பிரம்மா, உலக நன்மைக்காக ஒருவேள்வியைத் தொடங்கி அவ்வாறே தம் துணைவி சரசுவதியின்றி முடித்துக் காட்டுவதாக உரைத்துத் தொடங்கினார். சரசுவதி தேவி அவ்வேள்வியைத் தடுத்து நிறுத்த முயன்றாள். முதலில் அதனைத் தடுக்க அக்னியை அனுப்பினாள். பின்னர் யானைகளை அனுப்பினாள். அரக்கர்கள், காளி என்று வரிசையாகச் சரசுவதி ஒவ்வொருவராக அனுப்பியும் தடைகள் தகர்ந்தனவேயன்றி வேள்விக்குத் தடை ஏற்படவில்லை.

பிரம்மா வேள்வியைத் தொடர்ந்து முடித்தார். யாகத்தில் கிடைக்கும் ‘அவிர்பாகம்’ என்னும் பலனைத் தங்களுக்கு அளிக்கும்படி தேவர்கள் வேண்டினர். பிரம்மாவோ, நாராயணனுக்கன்றி வேறு எவருக்கும் அது உரியது அன்று எனக் கூறிவிட்டார். நாராயணமூர்த்தியான பெருமாள் சங்கு, சக்கரத்துடன் சக்கரபாணியாகத் தோன்றி அவிர் பாகத்தையேற்றுக் கொள்ள வேள்வி முடிந்தது.

பின்னர் பெருமாள் தேவர்களுக்குப்பட்ட அனைவருக்கும் வேண்டும் வரமளித்தார். இவ்வாறு வரமளித்ததால் வரதர் எனப் பெயர் பெற்றார். வரதரைத் தேவலோகத்துள்ள ஐராவதம் என்னும் யானையே மலை வடிவங்கொண்டு தாங்கி நின்றது.

பிரம்மாவின் வேள்வியின் அடிப்படையிலேயே ‘காஞ்சிபுரம்’ எனும் பெயர் காஞ்சிக்கு ஏற்பட்டது. ‘க’ என்றால் பிரம்மா

எனவும், 'அஞ்சிரம்' என்றால் 'வழிபடப் பெறல்' எனவும் ,பொருளாதலால் 'கஞ்சரம்' என்றாகிக் கஞ்சிதபுரியாகிக் காலப்போக்கில் மருவிக் 'காஞ்சிபுரம்' என்றாயிற்று என்பர்.

*பொருளோசை மண்ணாசை பூங்குழலார் போகத்து*
*இருளாசை சிந்தித்து இராதே – அருளாளன்*
*கச்சித்திருப்பதியாம் அத்தியூர்க் கண்ணன்தாள்*
*இச்சித்து இருப்பது யாம் என்று*



## மீண்டும் ஒரு கயேந்திர மோட்சம்

இந்திரனுக்கு எதிரியான முனிவர் மகாசந்தன். இவர் திருமாலைக் குறித்துத் தவமிருந்தார் இந்திரனோ, முனிவர். தமது இந்திர பதவியைப் பெறவே தவமிருக்கிறார் என்று நினைத்துத் தேவலோகப் பெண்டிரை அவருடைய தவத்தைக் கலைக்க அனுப்பினார்.

முனிவரோ அப்பெண்டிரை ஏற்றுக் கொள்ளாது வெறுத்து ஒதுக்கினார். முனிவரின் தவம் கலையாமல் தொடர்ந்து எப்படியும் கலைத்து விடவேண்டுமென்று அவர்களை அழைத்துக் கொண்டு, யானை வடிவங்கொண்டு தன்னோடு யானைக் கூட்டங்களை அழைத்துக் கொண்டு முனிவர் தவமிருக்கும் இடத்திற்கு வந்து காம உணர்வுடன் நிற்க இதைக் கண்ணுற்ற முனிவர் சித்தம் தடுமாறித் தவவலிமையால் தாமும் ஓர் யானையாக மாறினார். தம் நிலை மறந்து பெண்யானைகளுடன் இன்புற்றுத் திரிந்தார்.

இவ்வாறு அலையும்போது ஒருநாள் சாளக் கிரமாத்தில் யானைக் கூட்டங்கள் நீராடின. யானை வடிவெடுத்த முனிவருக்குத் தீர்த்த மகிமையால் தன் முற்பிறவி வரலாறு தெரிந்தது. களிறு வடிவத்தில் பல திவ்யதேசங்கட்கும் சென்று இறைவனை வணங்கி வந்தார். மிருகண்டு முனிவர் என்பவ்ரிடம் நிலையைச் சொல்லித்தன் நிலைக்கு விமோசனம் வேண்டினார். அவர் காஞ்சி சென்று வரதனைத் தரிசிக்க வழி காட்டினார்.

காஞ்சி வந்த யானை வடிவ முனிவர் வரதப் பெருமாளுக்குத் தினமும் மலர் பறித்துச் சமர்ப்பித்து வழிப்பட்டார். இவ்வாறு தொடர்ந்து நடைபெற்றது. ஒரு சமயம் நெடுந்தொலைவு சென்ற யானை குளத்தில் இறங்கி அங்கிருந்த மலர்களைப் பறிக்க,

அக்குளத்து முதலை யானையின் காலைக் கவ்வியது. இந்த யானை திருமாலைக் கூவி அழைக்கத் திருமால் வந்து முதலையின் தலையைக் கொய்யச் சாபம் நீங்கியது.

மகா சந்தனுக்குப் பெருமாள் மோட்சம் அளித்தார். பேயாழ்வார் இதனைப் பாடியுள்ளார். அவரும் கயேந்திர மோட்ச நிகழ்ச்சிகளைக் காட்ட வேண்டுமெனப் பெருமாளை வேண்ட அவ்வாறு காட்சி அளித்தார்.



## பாடாது விட்ட தலம்

திருமங்கையாழ்வார் திவ்ய தேசங்களைப்பாடி வருகையில் இதனைக் கண்ட பிராட்டி பெருமாளை எழுப்பி உடனே சென்று திருமங்கையிடம் பாசுரம் பெற்று வருமாறு சொன்னாள். அங்கிருந்து புறப்பட்ட திருமங்கை மாமல்லபுரம் என்னும் திருக்கடல் மல்லை சேர்ந்து விட்டார். திருமங்கையும் தன்னைத் தேடி அங்கு வந்த பெருமாளிடம் இப்பாடலை அளித்தார்.

*ஏற்றினை யிமயத்துளெம் மீசனை*
*இம்மையை மறுமைக்கு மருந்தினை*
*ஆற்றலை அண்டத்தற்புறத் துய்த்திடும்*
*ஐயனைக் கையிலாழி யொன்றேந்திய*
*கூற்றினை குருமாமணிக் குன்றினை*
*நின்றவூர் நின்ற நித்திலத் தொத்தினை*
*காற்றினைப் புனலைச் சென்று நாடிக்*
*கண்ணமங்கையுடன் கண்டு கொண்டேன்.*

பாடல் பெற்று வந்த எம்பெருமானைப் பிராட்டியார், "எல்லாத் தலங்களுக்கும் பத்தும், அதற்கு மேலும் பாடல்கள் இருக்க, நமக்கு இங்கே ஒரு பாடல் மட்டும் தானா?" என்று கேட்டார். எம்பெருமான் மீண்டும் திருமங்கையைத் தேடிக் கடல்மல்லை வர, அவர் அதற்குள் திருக்கண்ணமங்கை சேர்ந்துவிட்டார்.

திருக்கண்ணமங்கைப் பெருமாளைப் பாடிப் பரவுகையில் திருநின்றவூர் பக்தவத்சலர் நிற்பதை ஓரக் கண்ணால் கண்ட திருமங்கையாழ்வார் "நின்றவூர் நித்திலத் தொத்தினை" எனப் பெருமாளையும், அவர் காற்றினும் கடுகி வந்த வேகத்தைக் குறிக்கும் வகையில் "காற்றினைப் புனலை" என்றும் திருக்கண்ணமங்கையில் அவரையும் சேர்த்து மங்களாசாசனம் செய்தார்.

பெருமாள் தன் அடியவரிடம் பாடல் வேண்டிநின்ற இச்செய்தி சுவையான செய்திதான்.



## காஞ்சியிலிருந்து சோளிங்கர் வந்த பெருமாள்

தொட்டாச்சாரியார் என்னும் வைணவ ஆச்சாரியார் ஆண்டுதோறும் காஞ்சியில் நடைபெறும் கருட சேவையினைக் கண்டு களிப்பது வழக்கம். ஓராண்டு உடல் நலிவினால் காஞ்சி செல்ல இயலாது போயிற்று. அப்போது அவர் சோளிங்கர் தக்கான் குளக்கரையிலமர்ந்து காஞ்சி வரதரை எண்ணிக் கருடசேவையைக் காண இயலாது போயிற்றே என மனம் கலங்கி வருந்திக் கொண்டிருந்தார்.

காஞ்சிப் பெருமாள் தன் பக்தர் மனம் கலங்குவது கண்டு கருட வாகனத்தில் காட்சி அளித்தாராம். இதன் நினைவாக இன்றும் காஞ்சியில் பிரம்மோத்சவ மூன்றாம் நாள் காலை கருட வாகனத்தில் பெருமாள் எழுந்தருளும்போது தாமதித்து நின்று தொட்டாசாரியார் சுவாமிகள் சேவை சாதிப்பதாய்க் கற்பூர ஆர்த்தி நடைபெற்று வருகிறது. காஞ்சிக்கும், சோளிங்கருக்கும் இப்படி தொடர்பு.



## ஆற்காடு நவாபு வழங்கிய தங்கத் தொப்பி

ஆற்காடு நவாபு தம் இரண்டு மருமகன்களான சந்தாசாகிபு, படாசாகிபு ஆகியோருக்கு அதிக அளவில் பொன் கொடுக்க எண்ணிப் பல ஆலயங்களில் கொள்ளையிட்டார். திருவெட்டாற்றில் உற்சவரைத் தங்கச் சிலை என நினைத்து கொள்ளையடித்து எடுத்துச் சென்று தம் அரண்மனையில் வைத்தபோது பல துயரங்கள் நிகழ்ந்தன.

இந்நிலையில் இப்பெருமாள் மீது ஆராக்காதல் கொண்ட பக்தன் ஒருவரின் கனவில் தோன்றிய திருமால்தாம் இருக்கும் இடத்தைத் தெரிவித்தார். அப்பக்தன் மீட்டு வருவதற்குள்

திருவெட்டாற்றில் இருந்த மக்கள் அதேபோல் வேறு ஒரு உருவச்சிலையைச் செய்து வழிபடத் தொடங்கினர்.

நவாபிடமிருந்து மீட்டுவந்த சிலையை ஓரிடத்தில் வைத்துச் சுத்தப்படுத்தி நீராட்டி அதை எடுக்க முயற்சிக்கையில் எடுக்க முடியாமல் போகவே அவ்விடத்திலேயே விட்டு விட்டனர். பின்னர் அந்த இடத்திலேயே அதேபோல் சிலை செய்து திருவெட்டாறு கொண்டு சென்றபோது, ஏற்கெனவே ஒரு சிலை இருப்பதைக் கண்டு, கொண்டு வந்த சிலையை மாத்தூர் கொண்டு சென்று வைத்தனர். தாங்கொணாத துயரங்கட்கு ஆட்பட்ட நவாபு தமது தவறுகளை உணர்ந்து அதற்குப் பிராயச்சித்தமாகத் திருவெட்டாற்றில் சன்னதியில் உட்புறத்தே மண்டபம் ஒன்று அமைத்துக் கொடுத்தார். அக் கோவிலுக்கு 388 தோலா எடையுள்ள தங்கத் தொப்பியும், தங்கத் தகடும் வழங்கினார்.



# நம்பாடுவான்

திருக்குறுங்குடிக்கு மேற்கே மகேந்திரகிரி மலையடி வாரத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த நம்பாடுவான் என்னும் பாணன் வாழ்ந்து வந்தார். திருக்குறுங்குடி எம் பெருமான் மீது மிகுந்த பக்தி உடையவர். ஒவ்வோர் ஆண்டும் கார்த்திகை மாதம் சுக்லபட்ச ஏகாதசியன்று விரதம் மேற்கொள்வார். எம்பெருமானைத் தொழுது திரும்புவார்.

அவ்வாறு திரும்புகையில் நம்பாடுவானைக் காட்டில் வழியில் பிரம்மராட்சசன் ஒருவன் பிடித்துக் கொண்டான். தனக்கு உணவாகவேண்டுமென்று கேட்டான். நம்பாடுவான், தான் விரதமிருப்பதால் விரதம் முடித்துப் பொருமாளை வணங்கித் திரும்பி வந்து உணவாகச் சொல்லிச் சத்தியம் செய்து கொடுத்தார்.

தாழ்த்தப்பட்ட இனத்தவர் அந்நாளைய வழக்கப்படி கோயிலுக்குள் செல்லக்கூடாதாகையால் கோயிலுக்கு வெளியிலே இருந்து பெருமாளை வழிபட்டார். இதுவே தன்னுடைய கடைசிப் பயணமாதலால் இக்கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமாளை இனிக் காணவியலாதே என எண்ணி மனம் உருகினார்.

அவ்வாறு அவர் மனம் வேதனைப்பட்ட மாத்திரத்தில் நம்பாடுவானுக்காகக் கோயிலின் கொடிக்கம்பம் வழிவிட்டு

விலகியது. இன்றும் கூடக் கொடிக்கம்பம் அவ்வாறே விலகியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

அவ்வாறு பெருமாளை வழிபட்டுவிட்டுத் திரும்பி வருகையில் வழியில் பெருமாள் இவரைச் சந்திக்கக் கிழப்பெருமாள் வேடத்தில் வந்தார். வழியில் பிரம்ம ராட்சசன் இருப்பதால் அவ்வழியே செல்லவேண்டாம் என்று கிழவனான பெருமாள் தடுத்துக் கூறினார். ஆனால் நம்பாடுவான் பெருமாளை வழிபட்டு விட்டுவந்து உணவாவதாக வாக்களித்து இருப்பதால், கொடுத்த வாக்கைத்தான் மீறப் போவதில்லை என்று சொல்லிச் சென்றார்.

பிரம்மராட்சசனை அடைந்து தான் உணவாக ஆயத்தமாக இருப்பதாகக் கூறினார். பிரம்மராட்சசனோ தனக்குப் பசிக்கவில்லை எனவும், உணவாகும்படிக் கேட்டதற்கு மன்னித்துவிடும்படியும் கூறினான். மேலும், அவர் விரதத்தால் பெற்ற பலனைக் கொடுத்து விடும்படி கேட்டான். நம்பாடுவான் அதற்கு உடன்படவில்லை. பிரம்மராட்சசன் தன்னுடைய பிரம்மராட்சச வடிவம் நீங்க வேண்டுமெனில் அவர் பெற்ற பலனில் கால் பங்காவது அளிக்கும்படி வேண்டினான்.

திருக்குறுங்குடி நம்பியைக் கைசிகம் என்ற பண் கொண்டு உகப்பித்ததாகவும் அதனால் பெற்ற பலனில் பாதியைத் தருவதாகவும் கூறப் பிரம்மராட்சசனின் சாபம் நீங்கியது.



## மோட்சம் பெற்ற நாய்

அரசன் ஒருவன் வேட்டைக்குச் சென்றான். அவ்வாறு சென்றபோது யானைக் கூட்டத்தால் விரட்டப் பெற்று வழி தவறினான். பசியால் வாடித்தவித்தான். அங்குக் குடிலொன்றில் இருந்த அறுசுவை உணவை அங்கு யாரும் இல்லாததால் எடுத்து உண்டான்.

அக்குடிலின் முனிவர் குசானன் என்பவர் ஆவார். திருமால் வழிபாட்டுக்கு வைத்திருந்த உணவு அது. எனவே அம்முனிவர் உணவை உண்டதால் நாயாக மாறி அலையும்படி அரசனைச் சபித்து விட்டார்.

தான் செய்த தவற்றை உணர்ந்து மன்னன் சாப விமோசனம்

வேண்டினான். மிகச் சிறந்த தீர்த்தத்தில் நீராடினால் சாபம் தீரும் எனச் சாபவிமோசனம் முனிவர் கூறினார்.

ஒருநாள் ஒருவன் ஒரு நாயைப் படித்துக் கொண்டு பல நாடுகளுக்குச் சென்று வந்தான். இறுதியில் வானமாமலை வந்து சேர்ந்தபோது சேற்றுத் தாமரை என்னும் தெப்பக்குளத்தில் அவன் நீராடினான். நாயுருவில் இருந்தவனும் நீராட நாயுருவம் மறைந்து அரசனாக நின்றான்.

தன்னை அத்திருத்தலத்திற்கு அழைத்து வந்தவனிடம் தன் வரலாற்றைக் கூறினான். பூமிதேவி தன் அழுக்கு நிலை போக்க இத்தலத்துப் பெருமாளைத் துதித்து நின்ற தலம் ஆகும்.

வானமாமலைப் பெருமாளைக் குறித்துத் தவம் செய்து ஊர்வசியும், திலோத்தமையும் அழிவில்லாததும், பிறப்பற்றதுமான நிலை பெற்றனர்.



## கூப்பிடு தூரம்

இராமனுசர் ஒருநாள் திருப்புளிங்குடி எம்பெருமாளைச் சேவித்து விட்டு வந்தார். வருகையில் கோயிலின் வெளிப்புறத்துத் திருச்சுற்றில் நெல்லைக் காயவைத்துக் கொண்டிருந்த அர்ச்சகர் ஒருவரின் சிறுமியான மகளைக் கண்டார். அவளிடம் குருகூர் இன்னும் எவ்வளவு தொலைவு உள்ளது என வினவினார்.

அது இன்னும் கூப்பிடு தொலைவில் உள்ளதென்பதை அந்தப் பெண்

*"முக்கோலேந்தித் துவராடையணிந்த முதறிவாளர்*
*கூவுதல் வருதல் செய்திடாயென்று குரை கடல் வண்ணன்*
*தன்னை மேவி நன்கமர்ந்த வியன் புனல்பொருநல்*
*வழுதி நாடன் சடகோபன்"*

என்றும் பாசுரத்தினாலே மறைமுகமாகப் பதில் கூறினாள்.

ஆழ்வாரின் பாடல் கேட்டவுடனே ஆழ்வார் மீதுள்ள பேரன்பினால் தரையில் வீழ்ந்து அப்பெண்ணை வணங்கினார் இராமானுசர். அர்ச்சகர் தம் பெண்ணை இராமானுசர் பாதத்தில் விழச் செய்து மன்னிப்பு வேண்டினார். இந்நிகழ்ச்சி நடைபெற்ற இடம் திருப்புளிங்குடி.



## வயலில் கிடந்தென்ன வரப்பில் கிடந்தென்ன

இராமானுசர் திருக்கோளூருக்குப் பயணமாக வந்து சேர்ந்தார். அவ்வூரில் வைணவப் பெண்ணாகத் தென்பட்ட ஒரு பெண்ணை வணங்கினார். அப்பெண்ணை "நீ எங்கு நின்று புறப்பட்டாய்?" என்று கேட்டார். 'அதற்கு விடையாகத் "திருக்கோளூரிலிருந்து விடை கொண்டேன்" என்று அப்பெண் சொன்னாள்.

இராமானுசர் மீண்டும் அவளிடம் "ஒருவர் கூறையெழு வருடத்துக் காய் கிழங்கு சாப்பிட்டு திண்ணமென்னிள மான்புகுமூர் திருக்கோளூரே என்று எல்லோரும் புகும் ஊர் உனக்குப் புறப்படும் ஊராயிற்றா?" என்று வினவினார்.

அதற்கவள் "பல அரிய செயல்கள் முடித்த அடியவர்கள் போல யானேதும் அருஞ்செயல் செய்தேனோ, முசல் புழுக்கை வயலில் கிடந்தென், வரப்பில் கிடந்தென்?" என்று பதில் ஒன்றைப் புத்திசாலித்தனமாகக் கூறினாள்.

இவ்வாறு அவள் பதில் கூறியது கேட்ட இராமானுசர் அவளுடைய அறிவுத்திறம் கண்டு வியந்து அவளில்லத்தில் விருந்துண்டு சென்றார்.



## புளியமரமான இலக்குவன்

ஆழ்வார் திருநகரிப் பெருமாள் கோயிலுனுள் உள்ள புளிய மரம் இராமபிரானின் இளவல் இலக்குவனின் திருஉரு என்று கூறுவர். ஆதிசேடனே புளியமரமாக எழுந்தருளியிருப்பதால் அவ்வூருக்குச் 'சேட சேத்திரம்' என்று பெயர்.

இராமாவதாரம் முடிய மூன்றுநாள் இருக்கையில் பெருமாளைக்காண எமதர்மன் வந்ததும், தம் தம்பியான இலக்குவனிடம் "இனிமேல் யாரையும் உள்ளே அனுப்பாதே" என்று கூறினார்.

இராமாவதாரக் கடைசிச் சில நாழிகையில் ஒருமுறை இராமனைக் கண் குளிரக் கண்டு விடலாமென்று துர்வாச முனிவர் வந்தார். ஆனால் அவருடைய கோப சாபத்திற்கு

ஆளாகி இலக்குவன் யாரையும் அனுப்பாதே என்ற கட்டளையை மீறி அவரை உள்ளே அனுப்பி வைத்தான்.

இதனால் தன் சொல்லை மீறிய இலக்குவனை இராமபிரான் மரமாகும்படிச் சபித்தார். இராமபிரானைப் பிரிந்து தம்மால் இருக்க இயலாது என இலக்குவன் அழுது வேண்டி நின்றார்.

இலக்குவனை ஆரத்தழுவிய இராமபிரான், "இராமாவதாரத்தில் சீதையைக் காட்டில் வாழச் செய்த பாவம் போக்கப் பதினாறு ஆண்டுகள் அசையாப் பிம்பமாய்ப் பிறக்க வேண்டியுள்ளது என்று இலக்குவனிடம் எடுத்து வைத்தார்.

அவர் மடி மீது இருக்க ஆசைப்பட்டுத்தான் அவ்வாறு மரமாக நிற்கச் சொன்னதாகத் தெரிவித்தார். 'தாமிரபரணியின் தென்கரையில் உள்ளவராகச் சேத்திரத்தில் புளிய மரமாக மாறப் போகிறாய்' என்றும், தாம் 'காசி முனிவர், ஆத்மவிதி ஆகியோரின் மகனாகப் பிறந்து ஆதிநாதன் திருத்தலத்தில் தவழ்ந்து புளியமரமான நின் மடிமேல் தவழ்வேன்' என்றும் கூறினார்.

தனது விரலில் இருந்த கணையாழியைக் கழற்றிக் கொடுத்து, "அது எந்த இடத்தில் இலக்குவன் கையைவிட்டு விலகுகிறதோ அந்த இடத்தில் புளியமரமாய் நிற்பாய்" என வாழ்த்தி அனுப்பினார்.

நம்மாழ்வாருக்குப் பிடிக்காத செயல்கள் நடந்தால் இப்புளிய மரத்திலிருந்து நிண நீர் வடிகிறதாம். இராமன் மட்டும் ஆதிசேடன் மடியிலமர்ந்தால் போதுமா? திருத்தலங்கள் பலவற்றில் உள்ள பிற பெருமாள்களும் நினைத்துப் புளிய மரத்தின் இலைகளிலும், கிளைகளிலும் அமர்ந்து "எம்மைப்பாடுக, பாடுக" எனப்பாடல் கேட்டனராம்.



## பதினெட்டாம் படிக் கருப்பணசாமியும் கள்ளழகரும்

அழகர் கோவில் சுந்தரராசப் பெருமாளைத் திருடிச் செல்ல சேரநாட்டு அரசன் ஒருவன் முயன்று அதுமுடியாமல் போகவே, மந்திரம், தந்திரம் ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றவர்களை வைத்து அழகரைக் கொண்டு செல்ல வேண்டுமெனத் திட்ட மிட்டார்.

இதனையறிந்த பட்டர் தக்க ஆட்களைக் கொண்டு பதினெட்டுப்

பேரையும் பிடித்துப் படிக்கொருவராகப் புதைத்து வைத்தார். இந்தப் பதினெட்டுப் பேரின் சக்திக்கு அடங்கி உடன் வந்த காவல் தெய்வம் பெருமாளின் வாசலையும் பதினெட்டுப் படிகளையும் காப்பதாக உறுதி கூறி அதற்குத் தமக்கு அர்த்தசாமப் பூசைப் பிரசாதத்தை வழங்கவேண்டுமெனக் கேட்க அவர்களும் உடன்பட்டனர்.

அக்காவல் தெய்வமே பதினெட்டாம் படிக் கருப்பணசுவாமி யாவார். ஆண்டாள் கூட, இந்தப் பதினெட்டுப் படிகளைக் கண்டு வியந்தார். இப்பகுதி மக்கள் இன்றும் கருப்பண்ணசாமி முன் வைத்துப் பஞ்சாயத்து செய்வர். அழகர் கோவில் பூட்டப்படும்பொழுது சாவியைக் கருப்பண்ணசாமி முன் வைப்பார். மறுநாள் சாவியை எடுத்துச் சென்று திறப்பர். அதேபோல் மீனாட்சி திருமணத்திற்கு அழகர் செல்கையில் நகைப் பட்டியலைப் படிப்பர். திரும்பி வரும்போதும் அவ்வாறே படித்துக் காண்பிப்பார்.

பதினெட்டாம் படிக் கருப்புமுன் பணம் கட்டிச் சத்திய வாக்கு எடுத்தலும் உண்டு.



# திருமந்திரம் விளைந்த திவ்ய தேசம்

*வான்பார்க்கும் பைங்கூழ்போல் வாளா உனதருளே*
*யான்பார்க்க நீ பார்த்து இரங்கினாய் – தேன் பார்ப்பின்*
*ஓசைத் திருக்கோட்டியூரானே! இன்னமும் என்*
*ஆசைத்திருக்கு ஓட்டியாள்*

திருக்கோட்டியூருக்குத் திருமந்திரம் விளைத்த திவ்ய தேசம் என்னும் திருப்பெயர் உள்ளது. இவ்வாறு பெயர் ஏற்பட்டது ஏன்? இராமானுசர் திருவரங்கத்திலிருந்து 17 முறை திருக்கோட்டியூர் நம்பிகளிடம் ஞானம் பெற வந்தார். ஒவ்வொரு முறையும் நம்பிகள் அவருக்கு ஞானவழி காட்டாது திருப்பியனுப்பினர்.

விடாமுயற்சியுடன் அவர் 18ஆவது முறை வந்தபோது அவருடைய விடாமுயற்சியைக் கருதித் திருமந்திர உபதேசம் செய்வித்தார்.

அவ்வாறு உபதேசித்தவர் ஒரு கட்டளையையும் இட்டிருந்தார். அக்கட்டளையாவது அம்மந்திரத்தை அவர் யாருக்கும்

தெரியப்படுத்திக் கூடாது என்பதே. அவ்வாறான குருவின் கட்டளையை மீறினால் நரகம் வாய்க்கும் எனவும் எச்சரித்தார். இதற்கு உடன்பட்டு உபதேசத்தைக் கேட்டுக் கொண்ட இராமானுசர் தாம் பெற்ற இன்பம் வையம் பெறட்டும் என எண்ணிக் குருவின் கட்டளையை மீறினார்.

திருக்கோட்டியூர் சௌமியநாராயணப் பெருமாள் கோவில் கோபுரத்தின் மீது ஏறி நின்று மக்களையெல்லாம் அவர்கள் உய்வடைய மந்திரத்தைக் கூறுவதாகக் கூறி நம்பி உபதேசித்த "ஓம் நமோ நாராயணா" எனும் திருமந்திரத்தை அனைவருக்கும் கூறினார்.

இதனைக் கேட்ட குருவான நம்பி, இராமனுசரிடம் இவ்வாறு குருவின் கட்டளையை மீறிச் செய்தமைக்கு என்ன தண்டனை என்பது தெரியுமா? என்று வினவினார். இராமானுசர் அதற்குரிய தண்டனை என்ன என்று தெரிந்தே செய்ததாகக் கூறினார். "எனக்கு ஒருவனுக்கு நரகம் கிடைத்தாலும் பரவாயில்லை. இம்மந்திரம் தெரிந்து உச்சரிக்கும் அனைத்து உயிர்களுக்கும் மோட்சம் கிட்டுமே" என்று கூறினார்.

இரமானுசரின் உயிர்கள் மீதான காதலை வியந்த நம்பி அவரை, நீர்தான் எம்பெருமானார் என்று கூறிக் கட்டித் தழுவினார். அது முதல் இராமானுசர் எம்பெருமானார் என்று அழைக்கப் பெற்றார். திருக்கோட்டியூர் அட்டாங்கவிமான மூன்றாம் தளத்திலிருந்து கொண்டுதான் இராமானுசர் திருமந்திரத்தை ஊரறிய வெளிப்படுத்தினார். இத்திருக்கோவிலில் இராமானுசர் நம்பி ஆகிய இருவருக்கும் திருவுருவச்சிலை உள்ளது.



# கண்ணன் காலில் கொப்புளங்கள் ஏற்பட்டன

இராதை துவாரகைக்கு வந்தாள். வந்த இராதையை வரவேற்று, பாலும், தேனும் கொடுத்து ருக்மணி உபசரித்தாள்.

அன்றிரவு ருக்மணி கண்ணபிரானின் திருப்பாத பூசை செய்து கொண்டிருந்தார். அப்போது கண்ணபிரானின் பாதங்களைப் பார்த்த ருக்மணி திடுக்கிட்டாள். அத்திருப் பாதங்களில் சூட்டினால் ஏற்பட்ட காயங்கள் கொப்புள வடிவில் காணப்பட்டன.

பெருமாளிடம் இக்கொப்புளங்கள் எப்படி ஏற்பட்டன? என மனம் வருந்திக் கேட்டாள். சிரித்துக் கொண்டே கண்ணன் ருக்மணியிடம் "நீ இராதையை அன்போடு உபசரித்தாய் அல்லவா? அதன் விளைவால் ஏற்பட்ட கொப்புளங்கள் அவை" என்றார்.

ருக்மணிக்கு உண்மை புரியவில்லை. தன்னுடைய உபசரணைக்கும் கொப்புளங்களுக்கும் என்ன தொடர்பு? ஏன் அவ்வாறு கொப்புளங்கள் ஏற்பட்டன என விளக்கும்படி வேண்டினார். பெருமாள், "நீ இராதைக்குப் பால் வழங்கியபோது பால் சூடாக இருந்தது. இராதை அதனைச் சூடாகவே அருந்தினாள். எப்போதும் அவள் தன் இதயக்கமலத்தில் என்னை வைத்து இருக்கிறாள். சூடான பால் அவள் இதயக்கமலத்து வழி இறங்கியபோது அங்குள்ள என் பாதங்களில் சூடுபட்டதால் பாதங்கள் கொப்புளம் கண்டுவிட்டன" என்று பதில் கூறினார்.

"பாலை அருந்திய இராதை அது சூடாக இருந்ததாகக் கூறவில்லையே" என்று ருக்மணி கேட்டபோது "நீ அன்போடு கொடுத்ததால், சூடு இருப்பதைக் கூறாமல் அதனைக் குடித்துவிட்டாள்" என்று பதில் கூறினார்.

பெருமாளிடம் "உம் பாதங்கள் கோமளமானவை. அதைவிடக் கோமளமானதன்றோ இராதையின் இதயம்" என்று ருக்மணி குறிப்பிட்டாளாம்.



# மதுரகவி கண்ட நம்மாழ்வார்

திருக்குருகூரில் கோவிலிலினுள் மதுரகவி நுழைந்தார். அங்குள்ள புளிய மரத்தின் அடியில் செயலற்ற ஒரு பதினாறு வயதுக் குழந்தையான நம்மாழ்வார் எல்லாம் துறந்து, இரவும் பகலுமாக வெயிலிலும் பனியிலும் மழையிலும் தன்னை மறந்த ஞான நிலையில் மூழ்கியிருப்பதைக் கண்டு வியந்தார்.

உடனே மதுரகவி தம் இரண்டு கைகளையும் கொட்டி ஓசையை எழுப்பினார். அந்த ஞானக் குழந்தை அசைந்து கொடுக்கவில்லை. எனவே பெரிய கல்லைத் தூக்கித் தரையில் போட்டுப் பெரிய ஓசையை எழுப்பினார். இந்தப் பேரொலி கேட்ட பின்னர் தாம் நம்மாழ்வாரின் முகமலரில் சலனம் ஏற்பட்டது. பின்னர், நம்மாழ்வாரை நோக்க மதுரகவியாழ்வார்

*செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால்*
*எத்தைத் தின்று எங்குக் கிடக்கும்?*

என 'இறந்து போகும் தன்மையுடைய உடலாகிய தாயின் வயிற்றிலிருந்து மனித வடிவில் பிறந்த சிறிய ஆன்மாவாகிய உயிர் எதை உண்ணுகிறது? எப்படி உயிர் வாழ்கிறது?' என்ற பொருளோடு ஒரு கேள்வியைக் கேட்டார்.

யோக நிலையிலிருந்த நம்மாழ்வார் சட்டென, "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" எனப் பதில் சொன்னார். அதாவது, 'பஞ்ச பூதங்களால் ஆன உடல் எவ்விடம் இருந்தாலும் உள்ளே இருக்கும் ஆன்மா, பரமாத்வாவின் இன்ப சுகங்களை உணவாக உண்டு அனுபவித்துக் கொண்டு பரம்பொருளோடு ஒன்றிக் கிடக்கும்' என்று பதில் கூறினார்.

மதுரகவிக்கு ஒரு நல்லாசான் கிடைத்தார். வணங்கி நின்றார். அங்கே சங்கு சக்ரதாரியாக லட்சுமிப் பிராட்டியுடன் பெருமாள் தோன்றினார். மதுரகவி கண்டு பேறு பெற்றார்.



## குழைக்காதர் பூமாலை

சொக்கநாத நாயக்கர் என்னும் மதுரை நாயக்க மன்னர் மதுரையில் ஆட்சி செலுத்தி வந்தார். அப்போது திருப்பேரையில் குறுநில மன்னராக வடமலையப்பப் பிள்ளையன் என்பவர் ஆட்சி செலுத்தி வந்தார். அப்பொழுது நாராயண தீட்சதர் என்னும் திருமால் பக்தர் அரசுக்கு வரி செலுத்தத் தவறிவிட்டார். வடமலைப்பிள்ளையின் ஆட்கள் அவரை வரி கட்டாததற்காகப் பிடித்துச் சிறை வைத்தனர்.

சிறையிலிருந்தபடியே, திருப்பேரைப் பெருமாள் குழைக்காதர் மேல் அறுபத்தைந்து பாடல்களைத் தீட்சதர் எழுதினார். இதைக் கேள்விப்பட்ட வடமலையப்பப் பிள்ளை தீட்சதரை விடுதலை செய்தார். அவர் செலுத்த வேண்டிய வரியையும் தள்ளுபடி செய்தார்.

குழைக்காதர் பாமாலையின் அறுபத்தைந்தாம் பாடலுக்குப் பிற்பட்ட பாடல்கள் எல்லாம் வெளியில் இருந்து பாடியவை. 65 பாடல்கள் சிறையிலிருந்து பாடியவை.

தீட்சதர் ஒவ்வொரு நாளும் ஆழ்வார் திருநகரியிலிருக்கும் பெருமாளையும் நம்மாழ்வாரையும் சேவித்த பின்னரே உணவு உண்பார். ஆழ்வார் திருநகரியில் கோவில் பட்டரும் காத்திருந்து இவருக்குத் தீர்த்தமும், திருத்துழாயும் வழங்குவார். அவ்வாறு வந்து கொண்டிருந்த தீட்சதர் ஒருநாள் காலையில் இறந்துவிட்டார்.

ஆனால், அதே நாளில் ஆழ்வார் திருநகரியில் நம்மாழ்வார் சந்நிதிக்கு நடந்து சென்றாராம். காலையில் இறந்ததாகக் கேள்விப்பட்ட தீட்சதர் எப்படி உயிரோடு நடக்கப் போகிறார் என்பதைக் காணப் பட்டர் ஓடிவந்தபோது அனைவரும் காணும் வண்ணம் தீட்சதரின் ஆன்மா நம்மாழ்வார் திருவடியில் சேர்ந்தது என்று கூறுகின்றனர்.



## உடையவர் போற்றியவர்

உடையவர் இராமானுசரால் நியமிக்கப் பெற்ற வடுகநம்பி என்பவர் எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளுள் ஒருவர். உடையவரின் திருவடித் தீர்த்தத்தையே அருந்தி 'யதிராசவிபவம்' என்னும் நூலைப் படைத்தவர் என்னும் சிறப்புப் பெற்றவர். உடையவரையே தெய்வமாகக் கொண்டு ஒழுகிய நெறியாளர். பிரசாதத்தைப் பெருமாளுக்கும், இராமானுசருக்கும் ஒன்றாகப் படைத்து வழிபட்டு வந்தார். அது மட்டுமோ? 'உங்கள் தெய்வத்திற்கு என் தெய்வம் (இராமானுசர்) உடையவர் எதில் குறைந்தவர்?' என்று கேட்பாராம்.

அத்தகைய இயல்புடைய வடுகநம்பி (உடையவருக்கு) பருகிடப்பால் காய்ச்சிக் கொண்டிருந்தார். அப்போது வாசலில் திருக்குறுங்குடிப் பெருமாள் பவனி வந்தார். அப்போது உடையவர் வடுகநம்பியைப் பெருமாளைத் தரிசிக்க அழைத்தார். வடுகநம்பி உடையவரிடம் உங்கள் பெருமாளைச் சேவிக்க வந்தால், என் பெருமாளுக்குக் (உடையவருக்கு) காய்ச்சும் பால் பொங்கிவிடுமே?" என்று பதில் சொன்னாராம்.

இறைவனைவிட இறைவனின் மெய்யடியார் மீது மிகுந்த பக்தி கொண்ட வன்தொண்டர் இவர் எனலாம். உடையவரின் பாததீர்த்தத்தைச் சாலிக்கிராமத்தில் வைத்து வழிபட்டுச் சேகரித்துக் கொண்டு வந்து, அடியவர்களுக்குப் பெருஞ் செல்வமாக வழங்கினார்.

பகைவர்கள் உடையவரைக் கொலை செய்யத் திட்ட மிட்டபோது பெருமாள் வடுகநம்பி என்னும் பெயருடன் தோன்றிப் பாறைமீது படுக்க வைத்துக் காத்தார். உயிர் பிழைத்த உடையவரை சிம்மாசனம் ஒன்றில் வைத்து அதில் இருக்கச் செய்து அவர் முன்பு கீழேதான் அமர்ந்து திருமந்திர எட்டெழுத்து ஞானோபதேசம் பெற்று வைணவ நம்பி என்னும் பெயரைப் பெற்றிருக்கின்றார்.



## விட்டகுறை தொட்டகுறை

இராமானுசருக்குக்காலத்தால் மூத்தவர் ஆண்டாள். ஆனால், ஆண்டாளின் சார்பில் ஆண்டாளுக்கு முன் பிறந்த அண்ணன் என்ற மூத்த சகோதரர் முறையில் திருமாலிருஞ் சோலைமலை அழகருக்கு ஆண்டாள் செய்யாமல் விட்டுவிட்டுப் போய்விட்ட குறை தொட்ட குறைகளை முழுமையாகச் செய்ததால் இராமனுசர் ஆண்டாளுக்கு அண்ணன் ஆனார்.

ஆண்டாள் தான் வாழ்ந்த காலத்தில் திருப்பாவையைப் பாடி மார்கழி மாதத்தில் திருப்பாவை நோன்பு நோற்ற பொழுது நோன்பு நிறைவேறும் இருப்பதேழாம் நாளாகிய கூடாரை வெல்லும் சீர்கோவிந்தனின் நாளில் திருமாலிருஞ்சோலைமலை அழகருக்கு நூறு தடா நிறைந்த அளவிற்கு அக்கார அடிசிலை வைத்து நிவேதனம் செய்வதாகவும், அவர் நூறு தடா அக்கார அடிசிலை ஏற்றுக் கொண்டாரானால், பின்னர் இதைப் போல ஒன்று நூறு ஆயிரம் மடங்கு அக்கார அடிசிலை வைத்துச் சமர்ப்பிப்பேன் என்று சொல்லிப் பாசுரத்தைப் பாடினாள்.

*"நூறு நறும் பொழில் மாலிஞ்சோலை நம்பிக்கு*
*நான் நூறு தடாவில் – வெண்ணெய்*
*வாய் நேர்ந்து பராவி வைத்தேன்*
*நூறு தடா நிறைந்த அக்கார அடிசல் சொன்னேன்*
*ஏறுதிருவுடையால் இன்று வந்து இவைஎல்லும் கொலோ?*
*இன்று வந்து இத்தனையும் அமுதுசெய்திடப் பெறில்நான்*
*ஒன்று நூறு ஆயிரமாகக் கொடுத்துப் பின்னும்நாளும்*
*செய்வேன்"*

என்பது ஆண்டாள் பாசுரம். ஆண்டாள் பாசுரத்தில் பாடியபடி அக்கார அடிசில் செய்து வைத்து அழகருக்குச் சமர்ப்பிக்காமல் குறை வைத்துவிட்டுத் திருவரங்கத்தானுடன் ஐக்கியமாகிவிட்டாள்.

எனவே, தம் காலத்தில் அழகர் கோயிலுக்கு வந்தபொழுது அழகருக்கு ஆண்டாள் விட்டுவிட்டுச் சென்ற குறையைத் தெளிவாகத் தெரிந்து தமக்குள்ளாகவே அவர் வருந்தினார்.

பிறகு தாமே ஆண்டாளின் சார்பில் உரிய அதே மார்கழி இருபத்தேழாம் நாளில் நூறுதடா அக்கார அடிசிலை வைத்து அழகருக்கு நிவேதனம் செய்தார். அவ்வாறு எஞ்ஞான்றும் மார்கழி இருபத்தேழில் அழகருக்கு அக்கார அடிசிலை ஆண்டாள் சார்பில் நிவேதனம் செய்ய ஏற்பாடுகள் நிலையாகச் செய்தார்.

'எம் பெருமானே! கள்ளழகரே! என் தங்கை ஆண்டாள் விட்ட குறையைத் தங்கள் கடனை அவர் அண்ணனாகிய நான் நிறைவேற்றுகிறேன். ஏற்றருளுங்கள்'' என்று திருமாலிஞ் சோலைமலை அழகருக்குச் சமர்ப்பித்தார்.

யாராலும் நிறைவேற்றப் படாமல் இருந்த குறை ஆண்டாள் விட்ட குறை முழுமையாக இராமானுசரால் நிறைவேறியது.

அதன்பின் திருவல்லிப்புத்தூருக்கு இராமானுசர் வருகை புரிந்தபோது ஆண்டாளின் சந்நிதியில் சிலை வடிவில் இருந்த ஆண்டாள் ஏழடிமுன்னே அடி எடுத்து நடந்து, உடையவரை எதிர்கொண்டு வரவேற்றுக் கோயில் அண்ணா என்று அண்ணனைத் தழுவி மறைந்தாள்.

'எம் தடமுலைகளால் மானிடரைத் தழுவேன்' என்றவள், அண்ணனாகிய உடையவரைச் சகோதரிப் பாசத்துடன் தழுவினாள். அதனால்தான் ஆண்டாளை வாழ்த்தும்பொழுது 'பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே' என்றும் வாழ்த்தும் மரபு ஏற்பட்டது.

*குறித்தொருவர் கொண்டாடும் கொள்கைத்தோ கோதை*
*நிறத்தவூர் விண்டுசித்தர் நீடூர் பிறப்பிலியூர்*
*தாழ்வில்லிபுத்தூரர் என்று ஐவர்க்குத் தான் இரந்தான்*
*வாழ் வில்லிபுத்தூரர் வளம்*



## திருவாழ்மார்பன்

திருவல்லா என்னும் திருத்தலம் கேரள மாநிலத்தில் உள்ளது. இத்திருத்தலத்தில் சங்கரமங்கலத்தம்மை என்னும் பெயர் கொண்ட கற்புடைப் பெண்மணி வாழ்ந்தாள். ஒவ்வொரு துவாதசியிலும்

கடும் விரதம் மேற்கொண்டு சுத்த பிரமச்சாரி ஒருவருக்குக் கடும் உபவாசம் இருப்பவர்கள் பாரணையை அப்பெண்மணி அளித்து வருவது வழக்கம்.

இவ்வாறு அமுதுபடைக்கும் இவ்வம்மையின் தெய்வத் தொண்டுக்குத் தோலகாசுரன் என்னும் அரக்கன் இடையூறாய் விளங்கினான். பாரணைக்கு வருகின்றவர்களுக்கு அவன் தொல்லை விளைவித்தான். எனவே எந்தப் பிரமச்சாரியும் பாரணைக்கு வரவில்லை.

அந்த அம்மை மனம் வருந்தித் தன் குறையைப் பெருமாளிடம் முறையிட்டார். பெருமாள் பிரமச்சாரி வடிவில் வந்து அமுது ஏற்கத் தொடங்கினார். தம் பக்தியின் வலிமையால் பிரம்மசாரி வடிவினர் பெருமாள்தான் என அப்பெண்மணி கண்டு கொண்டார்.

பிரம்மச்சாரி வடிவப் பெருமாள் தம் மார்பினை மான் தோல் கொண்டு மூடியிருந்தார். அப்பெண்மணி பெருமாளிடம் மார்பை மறைக்கும் தோல் ஆடையின்றிச் சேவை தரும்படி வேண்டினார். மார்பில் பெரிய பிராட்டி உறைவதால் இவ்வாறு வேண்டினார். அவ்வாறே செய்து திருமகளாகிய பெரிய பிராட்டியையும் காட்டச் சேவை தந்தார் பெருமான்.

பாரணை உண்ணும் கோலமோ பிரமச்சரியக் கோலம். மார்பில் இருப்பவளோ மங்கை. மகாலட்சுமி பதிவிரதையின் பாரணையை ஏற்றுத் திருமால் இவ்வாறு சேவை சாதித்த இடம் திருவல்லா ஆகும். இத்திருத்தலத்துப் பெருமான் 'திருவாழ்மார்பன்' எனப்பட்டார். தாயாரின் பெயர் செல்வத் திருக்கொழுந்து நாச்சியார். திருவல்லா கோவிலினுள் பெண்களை அனுமதிப்பதில்லை. ஒரு பதிவிரதை பெருமாள் திருமார்பைத் திறந்து விட்டதால் பிறபத்தினிப் பெண்டிரும் தங்கள் பத்தினித் தன்மையால் பெருமாளை ஆட்டிப் படைத்துவிடக் கூடாது என்பதால் இந்த ஏற்பாடாம்.



## ஆப்பம் திருடிய அழகர்

திருமாலிஞ்சோலை உற்சவமூர்த்தி கள்ளழகர் உலா வருகையில் ஒரு குறிப்பிட்ட இடம் வந்ததும், மேளதாளச் சத்தம், ஆர்ப்பாட்டம், சந்தடி ஏதும் இல்லாமல், அவர் வரும் பல்லக்கைத் தூக்கிக்

கொண்டு ஓட்டமாய் ஓடிச் சிறிது தூரம் அவ்வாறு சென்று பின்னர் தான் பல்லக்கை நிறுத்துவர். அதன்பின் பழைய ஆரவாரம் தொடரும். இதற்குக் காரணம் என்ன?

முன்னர் வீதியில் ஆப்பம் சுட்டு விற்றுக் கொண்டிருந்த பெண்ணிடம் கள்ளழகர் ஆப்பம் வாங்கித் தின்று விட்டு, காசு கொடுக்காமல் திருட்டுத்தனமாக நழுவிவிட்டாராம். அந்தப் பெண் காசு கொடுக்காமல் சென்றவரை எங்கே பிடித்துக் கொள்வாளோ என்று ஓடி விட்டதால், அதே போல் இப்போதும் செய்கின்றனர்.

ஆப்பத்தை எடுத்துக் கொண்டு ஓடி மறைந்து நின்ற கோலக் கள்ளழகர் திருப்பேர்நகரில் சயனக் கோலத்தில் அப்பக்குடத்தானாக விளங்குவதைக் கண்டு பிடித்து மங்களாசாசனம் செய்தார் நம்மாழ்வார்.

இதே பக்திப் பாவத்தில் பெரியாழ்வாரும் திருடிவிட்டு ஓடிப்போன பெருமாளை அடிக்கக் 'கோல் கொண்டுவா' என்றும், 'இங்கே போதராய் வா, வா,' என்றும் மங்களாசாசனம் செய்தார்.



## அரங்கனைப் பாடும் வாயால்

பிள்ளைப் பெருமாளய்யங்கார் அட்டபிரபந்தம் பாடியவர். 'அட்டபிரபந்தம் படித்தவன் அரைப்புலவன்' என்பது பழமொழி அவர் திருவரங்கத்துப் பெருமாள் மீதே ஆழ்ந்த பக்தி கொண்டவர். திருவரங்கன் அன்றி வேறு தெய்வமில்லை யென்னும் ஆழ்ந்த நம்பிக்கையுடைவர். வேறு எந்தப் பெருமாளையும் வழிபடமாட்டேன் என்னும் உறுதி கொண்டவர்.

திருவரங்கன் பால், மாலை, கலம்பகம், அந்தாதி, ஊசல் பாடியவர். திருவேங்கடமுடையான், இவரை ஏழுமலைப் பெருமாள் பேரிலும் பாமாலை தொடுக்கவேண்டும் எனக் கனவில் உரைத்தார். திருவேங்கடத்துப் பெருமாளாயினும், 'அரங்கனைப் பாடிய வாயால் ஒரு குரங்கனைப் பாடேன்' அதாவது குரங்குகள் வதியும் வேங்கடமலையானைப் பாடேன் என்று மறுத்து விட்டாராம்.

திருவேங்கடத்துப் பெருமாள் விடுவாரா? தன்னைப் பாடாத பிள்ளைப் பெருமாளுக்குக் 'கண்டமாலை' என்னும் நோயை உண்டாக்கினார். நோயினால் துன்புற்று, நோய் தணியாமல்

போகவே தாம் திருவேங்கடத்தான் கேட்டும் பாடாமல் போனதால் ஏற்பட்ட விளைவே அது என்பது அவருக்குப் புரிந்தது.

அதன்பின் திருவேங்கடமாலை, திருவேங்கடத்தான் துதி ஆகியவற்றைப் பாடினார். திருவேங்கடவன் அவருக்குக் காட்சி அளித்து ஆட்கொண்டார்.



## ஆதிகேசவன் யார்?

பெருமாளின் திருநாமங்களில் ஒன்று ஆதிகேசவன் என்பது. பல இடங்களில் ஆதிகேசவப் பெருமாள் திருத்தலங்கள் விளங்கிய போதிலும் (ஆதி)கேசவனாய்ப் பெருமாள் காட்சி தந்த இடம் திருவட்டாறு ஆகும். கேசவன் என்னும் நாமம் பெற்றது இவ்வாறுதான்.

கேசி என்னும் அசுரன் தவமியற்றிப் பிரம்மனிடம் வரம் பெற்றுச் சகல வல்லமைகளையும் பெற்றான். இதனால் தேவர்களையும் உலக மக்களையும் துன்புறுத்தினான். அவர்கள் வேண்டுகோளின் பேரில் பெருமாள் அவனுடன் மல்யுத்தம் செய்தார். மல்யுத்தத்தில் கேசியைக் கீழே தள்ளி வீழ்த்தி அவன் மேல் படுத்துவிட்டார்.

கேசியின் மனைவி ஆசூரி என்பவள் தன் கணவனைக் காப்பாற்றும்படி கங்காதேவியிடம் வேண்டினார். கங்கை, தாமிரபரணியுடன் கூடி வெள்ளமாகப் பெருகி ஓடி வந்தாள்.

பெருமாள் பூமாதேவியிடம் தாம் படுத்துள்ள பகுதி மேடாகும்படி செய்யக் கட்டளையிட்டார். கங்கையும், தாமிரபரணியும் மேட்டுப் பகுதியைச் சுற்றி வணங்கியதைப் போல இரண்டாகப் பிரிந்து வட்டமாகச் சென்றன. அடியில் கிடந்த கேசி புனித நதிகள் தொட்டதால் முக்தி பெற்றான். வட்டமாக நதிகள் வளைந்ததால் அத்தலம் திருவட்டாறு ஆகியது.

கேசியை வென்ற பெருமாள் ஆதலால் ஆதிகேசவன் எனும் திருநாமம் பெற்றார். சிவனின் கீழ் முயலகன் போலத் திருவட்டாற்றுப் பெருமாள் கேசியின் மீது புள்ளி கொண்டார்.

எனவே, இவர்தான் முதலாவது ஆதிகேசவன் எனலாம்.



# ஆரா அமுதே

சிதம்பரத்தை அடுத்த காட்டு மன்னார் குடி மன்னார் கோவிலில் நாதமுனிகள் அடிமைத் தொண்டு செய்து வந்தார். ஒருநாள் அக்கோயிலில் அவசரமாக இருவர் வந்து 'ஆரா அமுதே' எனத் தொடங்கும் இப்பாசுரங்களைப் பாடி வழிபட்டனர்.

*ஆராவமுதே! அடியேன் உடலம் நின்பால் அன்பாலே*
*நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே*
*சீரார் செந்நெல் கவரிவீசும் செருநீர் திருக்குடந்தை*
*ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்! கண்டேன், எம்மானே"*

எனத் தொடங்கிய அப்பாடலின் இறுதிப் பாடல் வரிகள் இவ்வாறு அமைந்தன.

*உழலை என்பின் பேய்ச்சி முலை உண்டு அவளை*
*கழல்கள் அவையே சரணாக் கொண்ட குருகூர்ச் சடகோபன்*
*குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும்*
*மழலை தீரவல்லார் காமர்மானேய நோக்கியர்க்கே.*

பாடிய பாசுரங்களில் இறுதியில் காணப்படுகின்ற "ஆயிரத்தில் இப்பத்தும்" என்னும் வார்த்தைகள் வருவதால் அந்த ஆயிரம் பாசுரங்களைப் பற்றி நாதமுனி விசாரித்தார். அவர்களோ, தாங்கள் பாடிய பதினொன்றைத் தவிர வேறொன்றும் அறியோம் என்று கூறிவிட்டனர்.

நாதமுனிகள் அப்பதினொன்றைச் செவியில் கேட்டவுடனே மனனம் செய்து கொண்டு எல்லாப் பாசுரங்களையும் தெரிந்து கொள்ள ஆவல் கொண்டார்.

முதல் பாசுரத்தில் வரும் 'ஆராஅமுதே' என்பதனைக் கொண்டு, ஆரா அமுதப்பெருமானார் ஆலயம் கொண்டுள்ள திருக்குறுங்குடிக்கு வந்தார். அங்கே, பதினோரு பாசுரங்களையும் மனம் உருகப் பாடினார். குடந்தை, திருவரங்கம் சென்று இறுதியில் பாண்டிய நாட்டுக் குருகூரை அடைந்தார்.

அங்கு உள்ளவர்கள் பராங்குசரிடம் சென்று கேட்கும் படிப் பணிக்க, பராங்குசதாசர் மடத்தைத் தேடி கோளூருக்குச் சென்றார். வந்த விபரத்தைப் பராங்குசரிடம் சொல்லி, ஆயிரத்தையும், பிச்சையாக அருள வேண்டினார். அவர் மதுரகவிகளை உபதேசித்த மந்திரங்கள் பதினொன்றும் 12000 முறை உருச்செய்தால் நம்மாழ்வாரே தோன்றி திருவாய்மொழியை

அருளுவார் என்று வழிகாட்டினார். 'கண்ணிநுன் சிறுத்தாம்பினால்' எனும் மதுரகவியின் பாடலைப் பாடினார் பராங்குசர். நாதமுனிக்கு அவை பாடமாயின. மதுரகவியை வணங்கிப் பதினோரு பாடல்களையும் உருப்போடத் தொடங்கினார்.

'கண்ணிநுன் சிறுத்தாம்பினால்' எனும் மதுர கவியின் பாசுரங்களை 12,000 முறை உருப்போட்ட போதும் நம்மாழ்வார் அவர் முன் தோன்றவில்லை. திருவாய்மொழியின் ஆயிரம் பாடல்களைத் தாங்கிய ஏடுகளைப் பராங்குசருக்கு வழங்கினார். பராங்குசரை நாதமுனிக்கு யோக ரகசிய ஞானம் அருளியவர் எனப் பெரிய திருமுடி அடைவு கூறுகின்றது. நம்மாழ்வாரின் மற்றைப் பிரபந்தங்கள், வேறு மூவாயிரம் பாடல்கள் கொண்ட ஏடுகளையும் பராங்குசர் அறிந்து நாதமுனிகளே நாலாயிரம் பாடல்களை இவ்வாறு தொகுத்தார்.



# நம் சடகோபனைப் பாடினையோ?

மாறன், வகுளாபரணர், பராங்குசர், சடகோபர் ஆகியன நம்மாழ்வார் பெற்ற பல பெயர்கள்.

திருக்குருகூரில் அவர் காரியார், உடையநங்கையார் என்பவரின் மகனாகத் தோன்றியவர். திருக்குறுங்குடிப் பெருமாளே நம்மாழ்வாராகத் தோன்றினாரென்பர்.

உலகவியற்கைக்கு மாறாக அழுதல், பாலுண்ணுதல் முதலிய செயல்களற்று இருந்தவரை, கருப்பையில் அறியாமை தீண்டாத கருவைச் சடமென்றும், காற்றுப் பட்டவுடன் அழுதல், அரற்றுதல் செய்ததால் சடகோபர் என்றும் திருநாமம் பெற்றார்.

அத்தகைய சடகோபரை 'நம்மாழ்வார்' எனப் பெருமாளே அழைத்தார் என்பர். கவிச்சக்கரவர்த்தி கம்பன், இராமகாதையைத் திருவரங்கத்தில் திருவரங்கப் பெருமாள் முன் அரங்கேற்றினார்.

கம்பரிடம் "நம் சடகோபனைப் பாடினையோ" என்று பெருமாள் கேட்டதாலே "நம்மாழ்வார்" என்று பெயர் பெற்றார் என்பர்.

நம்மாழ்வாரை அவியவி என்று உடலாகவும் பிற ஆழ்வார்ககளை அவயவங்கள் என்றும் கூறுவது வைணவ மரபு.

நம்மாழ்வார் எம்பெருமானின் திருவழகனாகவே கருதப்படுவதால் திருக்கோயில்களில் திருமாலின் பாதுகை சிறீசடகோபன் என்றும் சிறீசடாரி என்றும் வழங்கப்பெறுகிறது.



## மூவருடன் நாலாமவராய் வந்தவர்

பொய்கை, பூதம், பேய் எனப் பெயர் பெற்ற மூவரும் முதலாழ்வார்கள். இவர்கள் மூவரும் மிருகண்டு என்றும் முனிவரின் குடிலின் இடைகழியில் சந்தித்த சுவையான செய்தி இது.

பொய்கையாழ்வார் திருக்கோவலூரில் உள்ள முனிவரின் இடைகழியில் ஒருநாள் இரவுப் போதில் காலை நீட்டிக் கிடந்து உறங்கினார். அப்போது மழை வேறு பெய்தது. இருளான வேளை இது. அங்கு அவ்வேளையில் பூதத்தாழ்வார் வந்து இடமுள்ளதா? என்று வினவினார்.

பொய்கையார் வந்தவரிடம், "ஐயா ஒருவர் கிடக்காலம். இருவர் இருக்கலாம். வாருங்கள்" என்று கூற இரண்டு பேரும் உட்கார்ந்து கொண்டனர்.

சிறிது நேரத்தில் அங்கு வந்து சேர்ந்தார் பேயாழ்வார். அவரும் இடமுண்டா? என்று வினவினார்.

பூதத்தாழ்வார் 'ஒருவர் கிடக்கலாம். இருவர் இருக்கலாம் மூவர் நிற்கலாம், வாருங்கள்' என்கிறார்.

எனவே மூவரும் நின்று கொள்ளவேண்டியதாயிற்று. மூவரும் நிற்கும் இடத்தில் நான்காவது ஒருவர் வந்து சேர்ந்து கொண்டார். மூவரும் சேர்ந்து நெருங்கிக் கொண்டு இருக்கவேண்டியதாயிற்று. நெருக்கடியான சூழல் உருவாயிற்று.

இவ்வாறு ஏற்பட்ட இடரைப் பாடலாகப் பாடுகிறார் பொய்கையாழ்வார்.

*"வையந்தகளியா வார்கடலே நெய்யாக*
*வெய்ய கதிரோன் விளக்காகச் – செய்ய*
*சுடராழியானடிக்கே சூட்டினேன், சொல்மாலை*
*இடராழி நீங்குகவே யென்று"*

இப்பாடல் வைணவத் தத்துவத்தை எடுத்துரைக்கும் பாடலாகும். உலகை அகலாகவும் கடலை நெய்யாகவும் சூரியனைச் சுடராகவும்

கொண்டு பொய்கையார் ஏற்றிய விளக்கு அது. பூதத்தாழ்வார்

*"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
*இன்புரு சிந்தை இருதிரியா - நன்புருகி*
*ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணர்க்கு*
*ஞானத் தமிழ் புரிந்த நான்"*

என அன்பை விளக்காக்கினார்.

எம்பெருமாளே நெருங்கி நின்றவர் என்று உணர்ந்தனர்.

பேயாழ்வார் இவ்வாறு பாடினார்.

*"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்*
*அருக்கன் அணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்*
*பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்*
*என்னாழி வண்ணன் பாலின்று*



# கள்ளர் பிரான்

திருவைகுண்டத்துப் பெருமாளுக்குக் 'கள்ளர் பிரான்' 'சோரநாதன்' எனத் திருநாமங்கள் உள்ளன. கண்ணனுக்குக் கிருட்டிணனுக்குக் கள்வன் என்னும் அடைமொழி பொருத்தமாகலாம். வைகுந்தவாசனான வைகுந்த நாதனுக்கு எப்படிப் பொருத்தமாகும்?

காலத்தூடகன் எனும் கள்வர் தலைவன் வைகுந்தநாதப் பெருமாளிடத்து அளவிலாப் பக்தி உடையவன். கொள்ளையிடச் சென்று தான் கொள்ளையிட்டுக் கொண்டு வருபவற்றில் பாதியைப் பெருமாளுக்குக் காணிக்கையாக அளித்து வந்தான்.

ஒருமுறை திருவைகுண்டத்தில் உள்ள அரசனுடைய அரண்மனையில் திருடுகையில் பிடிபட்டான். ஆனால் பிடிப்பட்டவன் தப்பிவிட்டுத் திருவைகுண்டத்துப் பெருமாளிடம் சென்று சரண் புகுந்தான்.

வைகுந்தநாதன் தன்னைச் சரண்புகுந்த கள்வர் தலைவன் பொருட்டுக் கள்வனாக உருமாறி, மன்னரிடம், செல்வத்தை அறவழியில் செலவிடாது தவறாகப் பயன்படுத்தியதை இடித்து உரைத்தார். அரசனும் மனம் திருந்தினார்.

இவ்வாறு கள்வனாக மாறி உபதேசித்த பெருமாளைக்

கள்ளர்பிரான், சோரநாதன் என அழைத்தனர்.

திருமாலடியார் திருவாய்மொழியில் 'வஞ்சக் கள்வன்' எனப் பாடியுள்ளார்.

*தார் உடுத்துத் தூசு தலைக்கு அணியும் பேதை இவன்*
*நேர் உடுத்த சிந்தைநிலை அறியேன் - போர் உடுத்த*
*பாவை குந்தம் பண்டு ஓசித்தான் பச்சைத்துழாய் நாரும்*
*சீவைகுந்தம் பாடும் தெளிந்து*



## திருமழிசைப்பிரானும் சிவனும்

சிவபிரானும், உமையும் வானவீதியில் வலம் செல்கையில், திருமழிசைப்பிரான் திருவல்லிக்கேணியில் தவம் செய்து கொண்டிருப்பதைக் கண்டு, உமையவள் வேண்டுகோளின்படி இறங்கி அவரிடம் வரம் வேண்டும்படி வலியுறுத்தினார்.

திருமழிசை தமக்குப் பரமபத வீடு அருளும்படி வேண்டினார். அது திருமால் ஒருவராலேயே அருளத்தக்கது. ஆதலால் வேறுவரம் கேட்கும்படி சிவன் கூறினார். ஆழ்வார், தம்முடைய இறப்பை ஒன்றிரண்டு நாள்கள் ஒத்திப் போட இயலுமா?" என்று கேட்டார். அதுவும் தம்மால் இயலாது என்றான் ஈசன்.

உடனே ஊசி ஒன்றைக் கொடுத்து, "இந்த ஊசி வழியே நூல் சொல்லுமாறாவது அருளுக" என்று ஏளனம் செய்தாராம். அதாவது, இதையாவது செய்ய முடிந்ததே என்பதே ஏளன உரை. திருமழிசை ஏளனம் செய்தது பொறுக்காத சிவன் தம் நெற்றிக் கண்ணைக் காட்டப் பிருகு வமிசத்தவரான ஆழ்வாரும் தம் கால் பெருவிரலிலிருந்ததோர் கண்ணைத் திறந்து கனலைப் பொழிந்தாராம்.

வைகுண்டம் சென்று பெருமாளைக் காலால் எட்டி உதைத்துப் பெருமாளும் அவருடைய காலைக் கழுவுவது போல் கழுவி அந்தக் கண்ணையும் கழுவிவிட்டார்.

சிவபிரான் தம் சடை முடியிலிருந்து கங்கையைப் பொழிந்தும் ஒன்றும் செய்ய இயலவில்லை.

ஆழ்வாரின் பக்திச் சிறப்பைப் பாராட்டிச் சிவத்தம்பதிகள் கைலாயம் சென்றனராம்.



## திருமழிசை என்னும் சித்தர்

சுத்தியாரணன் என்னும் சித்தன் விண் வழியாகச் சென்று கொண்டிருந்தபோது அவன் ஏறி வந்த புலிவடிவத்து வாகனப் பொறி ஆழ்வாரின் இருப்பிடத்திற்கு நேராக வந்தபோது நின்றுவிட்டது. தவநிலையில் அவரைக் கண்டான். ஆழ்வாரின் கந்தலாடையைக் கண்டு பொன்னாடை முதலியன பரிசளித்தான்.

ஆழ்வாரோ தம் சித்து வலிமையால் அச்சித்தனுக்கு அவருக்கு அவன் அறிந்தவற்றை விடச் சிறந்த ஆடை அணிகலன்களை வழங்கினார். ஆழ்வாரின் சித்துத் திறமையை மெச்சிப் பணிந்து சென்றான்.

கொங்கணச்சித்தர் இரும்பைப் பொன் ஆக்கும் குளிகை ஒன்றைத் திருமழிசை ஆழ்வாருக்கு வழங்கினார். திருமழிசை தம் உடலில் உள்ள அழுக்கைத் திரட்டிப் பசும்பொன்னாக்கி அவர் முன் வைத்தாராம். தாம் செய்த சித்தைவிட இது அற்புதம் எனச் சொல்லிக் கொங்கணச் சித்தர் மறைந்து போனார்.



## காவிரியில் கலந்த தமிழ்

திருமழிசையாழ்வார் சைவராய்ப் பிறந்து வைணவராய் மாறியவர். சிவவாக்கியரே அவ்வாறு திருமழிசையாக மாறியவர். பேயாழ்வாரே அவ்வாறு மாற்றியவர் என்று கூறுவர். பாடுகையில் இவ்வுண்மையைச் 'சாக்கியம் கற்றும், சமன் கற்றும் சங்கரன் ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்து, பாக்கியத்தால் செங்கண்மாலைச் சேர்ந்த'தாகப் பாடியுள்ளார்.

பேயாழ்வார் நந்தவனம் அமைத்துப் பெருமாளுக்கு மலர்த் திருப்பணி செய்து கொண்டிருந்தார். சிவ வாக்கியச் சித்தராக இருந்த திருமழிசைப்பிரான் தினமும் இவருடைய நந்தவனப் பக்கம் சென்று கொண்டிருந்தார்.

சிவவாக்கியர் அவ்வாறு செல்கையில் பேயாழ்வார் பல ஓட்டைகள் கொண்டதோர் குடத்தைத் துண்டுக் கயிறுகளை இணைத்துச் செய்த கயிற்றால் கட்டிமுகந்த நீரைச் செடிகளை வேர் மேலாகத் தலை கீழாக நாட்டு வைத்து நீர் ஊற்றி வந்தார்.

இதைக் கண்ணுற்ற சித்தர் நின்று பேயாழ்வாரின் மடமைச் செயல் எண்ணிக் கை கொட்டிச் சிரித்தார். இவ்வாறு ஏளனம் செய்ததன் காரணம் வினவினார். நகைப்பிற்கு உரிய செயலைச் செய்ததால் ஏளனம் செய்ததாகக் கூறினார்.

ஆழ்வாரோ, அமைதியான குரலில் மூடியிட்ட கயிறு சித்தரின் பல சமயத் தத்துவ ஞானத்தை ஒக்குமென்றும், சல்லிக் குடம் எத்தத்துவத்தையும் பற்றிக் கொள்ளாத அவருடைய வலியற்ற மனத்தைப் போன்றது என்றும், செடிகளைத் தலைகீழாக நட்டு வைத்தது சித்தரின் தெளிவற்ற மயக்க நிலையைக் காட்டுவதற்கே எனவும் விளக்கம் அளித்தார்.

சிவவாக்கியர் எதிர்வாது செய்யாது பேயாழ்வாரின் திருவடிகளை வணங்கினார். தமக்கு உறுதிப் பொருளை உணர்த்த வேண்டினார். அவரை ஏற்றுப் பக்திசாரர் எனப் பெயரிட்டு வைணவ சமயக் கோட்பாடுகளை அறிவுறுத்தினார்.

சைவராக விளங்கியபோது எழுதிய பாடல்களை யெல்லாம் காவிரியாற்றில் எறிந்துவிட்டார். நீரின் ஓட்டத்தை எதிர்த்து வந்த சில பொது விளக்கப்பாடல்களைத் திருச்சந்த விருத்தத்தில் வழங்கினார்.



## திருமழிசையின் வேதபாராயணம்

திருமழிசை ஆழ்வார் காஞ்சியிலிருந்து குடந்தைக்குச் செல்லும்போது சிலகாலம் தில்லையில் தங்கினார். ஒருநாள் அந்தணர் ஒருவரின் வீட்டு வழியே சென்றபோது வீட்டினுள் வேதம் ஓதிக் கொண்டிருந்த அந்தணர்கள் இவர் இழிந்த குலத்துதித்தவர் எனக் கருதி இவரைக் கண்டவுடன் வேதம் ஓதாமல் நிறுத்திவிட்டனர்.

இவர் சற்றுத் தள்ளிப் போய் நின்று அவர்களையே சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். அவ்வளவுதான். வேதம் ஓதிக் கொண்டிருந்த அந்தணர்கள் தங்கள் பாராயணத்தைத் தொடர முடியவில்லை. எந்த இடத்தில் பாராயணத்தை விட்டார்களோ அந்த இடத்திலிருந்து தொடர இயலாமல் மறதி ஆட்கொண்டு விட்டது. நிலை குலைந்து போயினர். எவ்வளவு முயன்றும் அவர்களால் தொடர இயலாது போயிற்று.

திருமழிசை ஆழ்வார் சில குறிப்புகள் வாயிலாக அவர்கள் வேதபாராயணத்தில் விட்ட இடத்தை நினைவுறுத்தினார். அவர்களும் மீண்டும் விட்ட இடத்திலிருந்து வேதபாராயணத்தைத் தொடர்ந்தனர். அது மட்டுமல்லாமல் திருமழிசை ஆழ்வாரின் வேத சாத்திர ஞானத்தைக் கண்டு வியந்தனர்.



## பெரும்புலியூரடிகளும் திருமழிசையும்

தில்லையில் பெரும்புலியூரடிகள் என்னும் தீட்சதர் வேள்வி ஒன்று நிகழ்த்திக் கொண்டிருந்தார். அவ்வமயம் தில்லையில் பெரும் மதிப்பும், பணிவன்பும் கொண்ட திருமழிசைப் பிரான் இருந்தார். அடிகள், திருமழிசைப் பிரானிடத்து மதிப்பும், மட்டற்ற மரியாதையும் கொண்டு அவருக்குத் தலைமை வழிபாடு எனப்படும் அதிகார பூசை செய்ய முயன்றார்.

ஆனால் வைதீக மனப்போக்குடைய பார்ப்பனர் தாழ்ந்த குலம் எனக் கருதப் பெற்ற குலத்தவரான திருமழிசைப் பிரானுக்கு அத்தகு வழிபாடு செய்வதை எதிர்த்தனர்.

இவ்வாறான சாதி வெறிமிகுந்த அந்த வைதீக மனப்போக்குடைய பார்ப்பனர்களுக்குப் பாடம் புகட்ட அவர் எண்ணினார். எனவே, அவர்களுக்கு இறைவன் உறைவிடங் கொண்ட தம் உயிர் நிலையைக் காட்டும் படித் திருமாலை வேண்டி இப்பாடலைப் பாடினார்.

*அக்கரங்கள் அக்கரங்கள் என்றுமாவ தென்கொலோ*
*இக்குறும்பை நீக்கி என்னை ஈசனாகவல்லையேல்*
*சக்கரங் கொள் கையனே! சடங்கர் வாயடங்கிட*
*உட்கிடந்த வண்ணமே புறம் பொசிந்து காட்டியே.*

இப்பாடலைப் பாடியதும் திருமாலும் தன் மெய்யடியார் வேண்டியவாறே அவர் மேனியில் தோன்றினார்.



## பெரியாழ்வாரான விட்டுசித்தர்

பாண்டிய மன்னன் வல்லபதேவன் சபையில் ஒருநாள் வேதியர் ஒருவர் “மழைக்காலத்திற்காக மற்றக் காலங்களிலும், இரவுக்காகப் பகலிலும், முதுமைக்காக இளமையிலும், மறுமைக்காக

இம்மையிலும் முயன்று சேர்க்க வேண்டும்" எனப் பொருள்படும் சுலோகம் ஒன்றைக் கூறினார்.

மன்னனுக்கு இச் சுலோகத்தில் மற்றவை யெல்லாம் புரிந்தாலும், 'மறுமைக்காக இம்மையிலும் முயன்று சேர்க்க வேண்டும் என்பது யாது' என்று புரியாமல் தவித்தான்.

தம் குரு செல்வநம்பி என்பவரிடம் இது குறித்து வினவினான். அவர் பிற அறிஞர்களைக் கூட்டி விவாதித்து முயன்று அறியலாம் என்றார். எனவே அறிஞர்கள் சபையை அரசன் கூட்டினான்.

பெரியாழ்வார் கனவில் பெருமாள் தோன்றி மதுரை சென்று பரத்வ நிர்ணயம் செய்து வரும்படி ஆணையிட்டார். ஆனால் ஆழ்வாரோ தாம் வேத சாத்திரம் அதிகம் பயின்றவர் அல்லரே என்று தயங்கினார்.

பெருமாளோ 'நாம் உமக்கு அருள் செய்வோம். தயங்காமல் சென்று வருக' என்று அனுப்பி வைத்தார். மதுரை சென்ற ஆழ்வார் அறிஞர் சபையில், திருமாலே பரம்பொருள் என்னும் கருத்தினை உறுதி செய்தார். அதனை எய்துவதற்கான வழிகளையும் அவர் திறம்பட எடுத்து வைத்தார். மன்னர் கட்டியிருந்த பொற்கிழி ஆழ்வார் எடுத்துக் கொள்ளும்படி தாழ்ந்து வளைந்தது.

மன்னவன் அப்பொற்கிழியை வழங்கிப் பட்டத்து யானை மேல் ஆழ்வாரை அமரவைத்து ஊர்வலமாக மதுரை வீதிகளில் அழைத்துச் சென்றான். கோயில் முன் வந்த ஊர்வலத்தின் முன் கூடலடிகள் வந்து பூர்ண குடும்பத்துடன் கோயில் நிருவாகிகள் ஆலயத்தினுள் அழைத்துச் சென்று பெருமைப்படுத்தினர். திருமால் கருடாழ்வார் மீது அமர்ந்து தோன்றினார். ஆழ்வார் பெருமை கண்ட மன்னன் அவருக்குக் கவரி வீசினான்.

எம்பெருமானுக்குக் கண்ணேறு பட்டுவிடுமென்று பயந்த ஆழ்வார் அவர் பல்லாண்டு வாழவேண்டுமென வேண்டித் திருப்பல்லாண்டு பாடினார். இறைவன் ஆழ்வாருக்குக் காட்சி அளித்த இடம் 'மெய் காட்டிய பொட்டல்' என்று பெயர் பெற்றது.

மதுரை நகரில் 'மேங்காட்டுப் பொட்டல்' என இன்று அழைக்கப் பெறுவதுதான் அன்றைய நாளில் மெய்காட்டும் பொட்டலாக விளங்கிய பகுதியாகும்.

விட்ணு சித்தர் பெரியாழ்வார் எனப் பெயர் மாற்றம் பெற்றார்.



# ஆண்டாள் மணவாளன்

பெண்ணைப் பெற்றவர்கள், தம் பெண்ணை மணம் செய்து கொடுத்துவிட்டால் ஒருபெரும் பொறுப்புத் தீர்ந்தது என எண்ணி மகிழ்வர். அது உலகியல்பு.

ஆனால், பெரியாழ்வாரோ தாம் பேணி வளர்த்த பெண் ஆண்டாள் அரங்கனையே எண்ணி வாழ்ந்து, அவனுக்கே ஐக்கியமானதை எண்ணிப் பேருவகை கொள்ளுதற்கு மாறாக வருத்தம் கொள்கிறார். திருவரங்கத்துப் பெருமான் ஆண்டாளை மணமகன் கோலத்தில் தான் ஏற்றான். இருப்பினும்

*ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்*
*திருமகள் போல் வளர்த்தேன் செங்கண்மால்*

என்று தம் திருமொழியில் பாடினார்.



# ஒரே ஒரு திவ்யதேசத்தைப் பாடியவர்

திருவரங்கத்திலேயே வாழ்ந்து அந்த ஒரே ஒரு திவ்ய தேசத்தைப் பாடியவர் விப்ரநாராயணன் எனப்பட்டவர் ஆவார். திருச்சி மாவட்டப் புள்ளம் பூதங்குடிக்கு அருகிலுள்ள மண்டல் குடியில் முன் குடுமிச் சோழியப் பார்ப்பன குடியில் விசாரதர் என்பவரின் மகனாகப் பிறந்தார்.

திருவரங்கப் பெருமாள் அரங்கனுக்கு அவர் பூமாலை தொடுத்துக் கொடுக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். ஒருநாள் தேவதேவி என்பவளும் அவள் தமக்கையும் உறையூர்ச் சோழன் அவையில் தம் ஆடல் பணியினை முடித்துக் கொண்டு இவருடைய மலர்ச் சோலைப் பக்கமாய் வந்து இளைப்பாறினர்.

அவ்வழியே வந்த விப்ரநாராயணர் அழகிகள் இருவரையும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அவர்கள் இருவருமே இதனால் அதிர்ச்சியும், வியப்பும் அடைந்தனர். தேவதேவி தன்னைத் தன் அழகை ஒரு பொருட்டாகவே கருதாத அவரை மயக்கித் தன் வயப்படுத்துவதாகச் சூள் உரைத்தாள். அதை நிறைவேற்ற அவரிடம் சென்றுப் பணிப்பெண்ணாகத் தன்னை ஏற்கும்படி மன்றாடினாள்.

அவளுடைய சபதம் தெரியாத அவரும் தம்முடைய நந்தவனத் திருப்பணியில் உதவும்படி கூறினார். ஒருநாள் நந்தவனத் திருப்பணியில் அவர் ஈடுபட்டிருந்தபோது மழை பொழிந்தது. மங்கையின் உடல் நனைந்தது. அத்தோற்றத்தில் மயங்கிச் சற்றுநிலை தடுமாறி அவளுடன் கூடி மகிழ்ந்தார். அவள் பொருட்டுப் பொருள் எல்லாம் தொலைத்தார். அவளும் அவரை ஒதுக்கினாள்.

திருமால், அழகிய மணவாளன் என்னும் சிறுவன் வடிவத்தில் கோயிலின் பொன்வட்டியலை விப்ரநாராயணர் கொடுத்தனுப்பியதாகத் தேவதேவியிடம் கொடுத்து விட்டார் அவளும் மகிழ்ந்து ஏற்றாள். கோயில் பொருளைக் காணவில்லை என்றவுடன் அதனைத் திருடிய குற்றத்தினை விப்ரநாராயணர் மேல் சுமத்தி அவரைக் கைது செய்து சிறை வைத்தனர்.

இரவில் அரசன் கனவில் தோன்றி நடந்தவை கூறினார் எம் பெருமாள். அரசனும் அவரை விடுவித்தான். மீண்டும் மாலை தொடுக்கும் பணியினை மேற்கொண்டார். வாழ்நாள் முழுவதும் திருவரங்கத்திலேயே கழித்தார். அந்த ஒரு திருத்தலத்தையே பாடினார். வேறு திருத்தலம் எதனையும் இவர் பாடவில்லை.



## காய்ச்சிய நீரில் உருவானவர்

நம்மாழ்வாரிடம் அவருடைய இறுதிக் காலத்தில் வழிபாட்டுக்கு அர்ச்சா ரூபம் (சிலை) அளிக்க வேண்டும் என்று மதுரகவி வேண்டினார். நம்மாழ்வார் அவரைத் தாமிரபரணி நீரைக் காய்ச்சி அதிலிருந்து செம்பினாலான உருவங்களை உண்டாக்கச் சொன்னார்.

அவ்வாறு காய்ச்சியதும் முதலில் அஞ்சலி செய்யும் கரங்களுடன் திரிதண்டுடன் வந்த உருவத்தினைக் கண்டு வியந்து கேட்க நம்மாழ்வார் 'பொலிக, பொலிக' என்று திருவாய்மொழியில் கூறிய வண்ணம் திருமால் பெருமையைக் கூறியதுடன், வைணவ சமயத்தைப் பெருக்கப் போகின்ற எதிராசன் உருவம் என்று தம் வலது திருவடியை எடுத்துக் காட்டினார்.

அதில் உடையவர் உருவம் காணப் பெற்றதால் அவரை இராமானுசராக வைத்தார். மறுபடியும் நீரைக் காய்ச்சியதும் சின்முத்திரையுடன் சட கோபராம் நம்மாழ்வார் உருவம் கிடைத்தது.

அவ்வுருவில் நம்மாழ்வாரின் உடலிலிருந்து ஒளி பாய்ந்தது. நம்மாழ்வாரின் பூத உடல் மறைந்தது. செம்பினால் ஆன உடல் நிலைத்தது.

அவ்வுருவை நம்மாழ்வாருக்காக அமைக்கப் பெற்ற கோயிலில் வைத்து மதுரகவி யாழ்வார் திருவைகாசித் திருவிசாகத் திருவிழா பத்தும் கண்டருளினார்

*வளந்தழைக்க உண்டால்எல் வாசமணந்தாய் எல்*
*தெளிந்த கலைகள் கற்றாய் என் சீசி குளிர்ந்த பொழில்*
*தண்குரு கூர் வாவிச் சடகோபன் ஊர் எங்கள்*
*வண்குருகூர் எண்ணாத வாய்*



# எச்சிற் பெருமாள்

திருவரங்கத்து அரங்கன் திருக்கோயிலில் அரங்கன் முன்பாகத் திவ்வியப் பிரபந்தங்களை இசையுடன் பாடும் அரையர் ஒருவர் இருந்தார். அவர் வெற்றிலை போடும் பழக்கமுடையவர். தான் வழிபடும் சாளக்கிராமப் பெருமாளைத் தம் வெற்றிலைப் பெட்டியிலேயே எழுந்தருளப் பண்ணியிருந்தார்.

தாம்பூலம் போட்டுக் கொள்ளும் சில நேரங்களில் அடியவர்களிடம் அரங்கன் புகழ் பேசிய வாறே கொட்டைப் பாக்கு என்று நினைத்துச் சாளக்கிராமப் பெருமானை வாயில் போட்டுக் கொண்டுவிடுவார். பற்களால் சிறிது கடித்த பின் தாம் கடித்தது, பாக்கன்று சாளக்கிராமப் பெருமாளே என உணர்ந்து, பதறித் தம் வாயிலிருந்த பெருமாளை எடுத்து நன்னீராட்டி ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களைத் தாளத்துடன் இசைத்துக் கண்ணீர் மல்கப் பணிவன்புடன் மன்னிக்க வேண்டுவார். தம்மை மறந்த நிலையில் இவ்வாறு சாளக்கிராமப் பெருமாளைக் கடிப்பதும், பின் தவறுணர்ந்து கண்ணீர் மல்கச் சேவிப்பதும் அன்றாட நிகழ்ச்சியாயிற்று.

நண்பர் ஒருவர் அவரிடம் இவ்வாறு நாள்தோறும் எச்சிற்படுத்திப் பிழைபடுவதைக் காட்டிலும் யாருக்கேனும்

சாளக்கிராமப் பெருமாளை கொடுத்து விடலாமே என்றார். அரையர் அவருக்கே கொடுத்துவிட்டார். அவரும் அதைத்தாம் வழிபடும் பெருமாளுடன் எழுந்தருளச் செய்து கொண்டார்.

அன்றிரவு அவர் கனவில் பெருமாள் தோன்றி, 'அரையர் திருவாயினை எச்சில்வாய் என்றா கருதினீர் அது ஆழ்வார் பாசுரங்கள் கமழும் வாய். அதுவே எமக்கு உகந்த இடம். எப்பொழுதெல்லாம் ஆழ்வார்கள் அருளிய திரு அமுதுப் பாசுரங்களைக் கேட்க ஆசை எழுகிறதோ அப்பொழுதெல்லாம் கொட்டைப் பாக்காய்த் தட்டுப் பட்டு அந்தப் பேறு பெறுவேன். ஆகவே, என்னை அவரிடம் சேர்த்து விடுக என்றார்.

மறுநாள் காலை அவர் ஓடிவந்து அரையரிடம் பெருமாளை ஒப்படைத்துத் திருவடி வீழ்ந்து பிழை பொறுக்க வேண்டினார்.



# இளையாழ்வார் விட்ட கண்ணீர்

இளையாழ்வார் தம் குரு யாதவப் பிரகாசருக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தார். அப்போது அவர் "தஸ்யயதா கப்யாசம் புண்டரீக மேவ மக்ஷிணி" என்னும் வேதவாக்கியத்திற்குப் பொருள் கூறினார்.

இந்த வாக்கியத்திற்கு "அந்தப் பிரம்மத்துக்குச் சூரியனால் அலர்த்தப்படுகின்ற தாமரை போன்ற கண்கள்" என்பது பொருள். இவ்வாறு பொருள் கூறினால் அந்தப் பிரம்மத்துக்கு உருவம் உண்டென்றும், குணங்கள் உண்டென்றும் பொருள்படும். உண்மையும் அதுதான். ஆனால், அத்வைத சித்தாந்தத்தில் பிரம்மத்துக்கு உருவமும் குணமும் இல்லை.

எனவே யாதவர் பொருளைத் திரித்துக் கூறினார். யாதவர் உண்மைப் பொருளைக் கூறாமல் மேலே கண்ட வாசகத்திற்குப் பிரமத்துக்கு உருவமில்லையாகையால் "பிரம்மத்துக்குக் கண்கள் குரங்கின் பின்புறம் போல இருக்கிறது என வேதம் ஏளனம் செய்கிறது" என்று மாறுபட்ட பொருள் கூறினார்.

இளையாழ்வாருக்கோ இவ்வாறு பொருளைத் திரித்துக் கூறுவதில் உடன்பாடு இல்லை. அவருடைய நெஞ்சம் வேதனையடையவே கண்களில் இருந்து கண்ணீர் சொட்டியது.

அவ்வாறு விட்ட கண்ணீர் யாதவரின் தொடையில் வீழ்ந்தது. அக்கண்ணீர் துயரக் கண்ணீர் ஆதலால் யாதவரை நெருப்பாய்ச் சுட்டது. யாதவர் இளையாழ்வாரை நோக்கிக் கண்களில் நீர் வழிந்ததன் காரணம் வினவினார்.

அதற்கு இளையாழ்வார் (கம்+பிபதி=கபி:) 'கம்' என்றால் நீர், "பிபதி" என்றால் அதைப் பானம் செய்கிறான், கபி: சூரியன் என்பது பொருளாகும் என்றும், கப்யாசம் என்பதற்குச் 'சூரியனால் உலர்த்தப்படும்' தாமரையை ஒத்த கண்கள் எனப் பொருள் செய்தார். இவ்வாறான உண்மைப் பொருள் இருக்க மாறுபட்ட பொருள் கூறி இழிவுபடுத்துவதால் கண்ணீருடன் துக்கம் உண்டாயிற்று என்று விளக்கம் அளித்தார்.



# இளையாழ்வார் விரட்டிய பிரம்ம ராட்சசம்

காஞ்சியை ஆட்சிபுரிந்த அரசன் மகளுக்குப் பிரம்ம ராட்சசு பிடித்தது. அரசன் அதனை ஓட்ட முயன்றான். எத்தனையோ வழிகளில் முயன்றும் அதனை ஓட்ட முடியவில்லை. யாதவப் பிரகாசரை அழைத்த அரசன் அதனை விரட்டிட உதவி செய்யும்படி வேண்டினார்.

யாதவப் பிரகாசர் பிரம்ம ராட்சசனை "நீ இந்தப் பெண்ணை விட்டுப் போ" என்று கூறிவேத மந்திரங்களை உச்சரித்தார். அப்படியும் பிரம்ம ராட்சசம் விட்டு விலகவில்லை.

யாதவப்பிரகாசர், "யார் சொன்னால் நீ இப்பெண்ணை விட்டு நீங்குவாய்" என்று பிரம்ம ராட்சத்தைக் கேட்டார். அதற்குப் பதில் கூறிய அது "உன் மாணவரில் ஒருவராய், நித்ய சூரிகளில் ஒருவராய், சிவந்த மேனியோடு உயர்ந்தவரும், அழகியவருமாய், முழங்கால் அளவு நீண்ட கரங்கள் உடைய இளையாழ்வார் தம் பாதங்களை என் தலைக்கு அணியாய்ச் சேர்த்தால் அப்பெண்ணை விட்டு நீங்குவேன்" என்று பதில் கூறியது.

இளையாழ்வார் அதனை நோக்கி "இங்கு நின்றும் நீங்கிப் போ" என்றார். அது "உம்முடைய பாதங்களை என் தலை மீது வைத்தால் நான் நீங்கிப் போகிறேன்; போவதற்கு

அடையாளமாக எதிரிலிருக்கும் அரச மரக்கிளையை முறித்துக் கொண்டு போவேன்'' என்றது.

இளையாழ்வார் அது கேட்டபடியே செய்ய அரசகுமாரியை விட்டு நீங்கியது.



## ஆளவந்தார் விரும்பிய இளையாழ்வார்

திருவரங்கத்தில் ஆள வந்தார் திருவாய்மொழிக்குப் பொருள் விளக்கம் அளித்து வந்தார். திருவாய்மொழியில் 'இலிங்கத்திட்ட புராணத் தீரும் சமணரும், சாக்கியரும் வலிந்து வாது செய்வீர்களும் மற்றும் நும் தெய்வமாகி நின்றான்'' என்னும் பாசுரத்திற்குப் பொருள் விளக்கம் அருளினார். அப்போது அவர் ''நமக்குப்பின் இதர சமயங்களைக் களைந்து நம் சமயத்தைப் பேணி வளர்ப்பவர் இல்லையே'' என்று வருந்தினார். இளையாழ்வாரே அதற்குத் தகுதியானவர் என்று கருதினார்.

ஆனால் இளையாழ்வார் யாதவப்பிரகாசருடன் அல்லவா இருந்தார்? அவரிடமிருந்து உறவறுத்துத் தம் பக்கம் சேர்ப்பதற்கான வழி என்ன என யோசித்தார். பேரருளாளன் பெருமாளிடம் ''முன் வேண்டியதைப் பயனுடையதாக ஆக்கியருள வேணும்'' என்று வேண்டினார்.

ஆளவந்தாரின் கோரிக்கையைப் பெருமாள் நிறைவேற்றி வைத்தார் எப்படி?

யாதவப் பிரகாசர் 'சர்வம் கல்விதம் ப்ரம்ம' என்பன போன்ற சுருதிகளுக்கு அத்வைத பாரமாக 'ஜீவாத்மாவும், பிரம்மமும் ஒன்றே' என்பதற்கேற்பப் பொருள் கூறினார். இளையாழ்வார் இதைக் கண்டித்தார். ஜீவாத்மா வேறாகவும், பரமாத்மா வேறாகவும் இருந்து சரீர சரீரத் தன்மையால் ஒன்றாயிருக்கும் விசிட்டாத்வைத பாரமாகப் பொருள் விரித்தார்.

இதனைக் கேட்டுச் சினந்த யாதவர், இளையாழ்வாரிடம் ''இனி எம்மிடம் வாசிக்க வேண்டாம். உம் புத்திக்குத் தக்காரிடம்போம்'' என்று கூறிவிட்டார்.

இளையாழ்வார் மிகவும் மகிழ்ச்சியுடன் யாதவரை விட்டு நீங்கி இச்செய்தியைத் தம் அன்னையிடம் கூறினார். அவர் திருக்கச்சி நம்பிகளைச் சேவித்து அவர் சொல்லியபடி செய்து கொள்ளச் சொன்னார். எனவே, திருக்கச்சி நம்பிகளையடைந்து அவர் கட்டளைப்படி சாலைக் கிணற்றுத் தீர்த்தத்தைப் பெருமாளுக்குப் படைத்து வந்தார்.

காஞ்சியிலிருந்து திருவரங்கம் சென்ற வைணவர்கள் ஆளவந்தாரைச் சேவித்தனர். இளையாழ்வார், யாதவப் பிரகாசரிடம் கல்வி தவிர்த்து விட்டார் என்பதனைக் கூறினார். பெரிய நம்பிகளை அழைத்து உடனே சென்று இளையாழ்வாரை அழைத்து வரும்படி கூறினார்.

பெரிய நம்பிகள் காஞ்சிபுரம் சென்றார். இளையாழ்வார் பெருமாளுக்குத் தீர்த்தம் கொண்டு வரும் சாலைக் கிணற்று வழியில் இருந்து ஆசாரியார் அருளிய தோத்திரங்களைப் பாடிக் கொண்டிருந்தார். அவ்வழியே வந்த இளையாழ்வார் செவியில் "பிரஹ்மா சிவஸ் ஸத மக: பரமேஸ்வராட் இத்யே தேவி யஸ்ய மஹீமார்பை விப்ருஷஸ்தே" என்னும் பெருமாளின் சுலோகம் ஒலித்தது.

இதனுடைய பொருள் "எந்த சர்வேசுவரானாகிய நாராயணனே, பிரமன், சிவன் இந்திரன் ஆகிய இவர்களிலும் மேலான மூத்த புருடனுமாகிய இவர்களெல்லாம் உன்னுடைய மகிமையாகிற கடலில் துளிகளாகின்றனரோ" என்பது ஆகும்.

இச்சுலோகத்தால் ஈர்க்கப்பட்டு இதை அருளியவர் யார் என்று நம்பிகளிடம் வினவ அவர் "ஆளவந்தார் அருளியது" என்றவுடன் இளையாழ்வார் அவரைச் சேவிக்க வேண்டும் என்றார்.

பெருமாளிடமும் திருக்கச்சி நம்பிகளிடமும் விடை பெற்றுப் பெரிய நம்பிகளுடன் திருவரங்கம் சென்றார்.

ஆனால், அதற்குள் ஆளவந்தார் மறைந்தார். அவருடைய உடல் கிடத்தப்பட்ட இடம் அடைந்தார்.

அப்போது ஆளவந்தாரின் கைவிரல்களில் மூன்று முடங்கியிருப்பதை இளையாழ்வார் கண்டு "மூன்றும் இவர்க்கும் இப்படியுண்டோ?" என வினவினார்.

"முன்பு இல்லை. இப்போதே உண்டாயிற்று" எனப் பதில் கூறினார்.

இளையாழ்வார் "ஆயினும் வாழும்போது இவர் ஏதேனும் குறையை வெளியிட்டதுண்டோ? எனக் கேட்டார். "வியாசபராசர்களிடத்து உபகாரச் சிந்தனையும் நம்மாழ்வார் பக்கலில் அதிக பிரேமையும், வியாச சூத்திரங்களுக்கு விசிட்டா வைத்துக்கிணங்க விரிவான உரையும் உண்டாக வேணும் என்னும் விருப்பம் அடிக்கடி அருளிச் செய்யக்கேட்டதுண்டு" என்று பதில் கூறினர்.

இளையாழ்வார் அது கேட்டு "இந்தச் சரீரமும் வலிமையுடையதாய் இந்த ஆசார்யருடைய கிருபையும், அடியேனிடம் பரிபூர்ணமாயிருந்து சர்வேசுவரனும் அடியேன் நினைத்தபடி கூட்டுவனாகில், இம்மூன்று குறைகளையும் தீர்க்கக் கடவேன்" என்று உரைத்தார்.

ஆளவந்தாரின் மூன்று திருவிரல்களும் அதன்பின் நிமிர்ந்தன. ஆளவந்தாரைச் சேவித்து அவர் அறிவுரைகளை நேரில் கேட்டுப் பயன் பெறும்பேறு கை கூடாவண்ணம் பெரிய பெருமாள் இப்படிச் செய்தாரே என்று வெறுப்புற்றுத் திருவரங்கப் பெரிய பெருமாளைச் சேவிக்காமலேயே காஞ்சி திரும்பினார்.



## திருக்கச்சி நம்பிகளின் ஆலவட்டப் பணி

திருக்கச்சி நம்பிகள் காஞ்சிப் பெருமாளுக்கு ஆலவட்டம் வீசும் திருப்பணி மேற்கொண்டிருந்தார். அவருடைய பக்தியில் மகிழ்ந்த பெருமாள் அவரோடு நேருக்கு நேர் உரையாடி வந்தாராம்.

அவர் தீர்த்தமாடி வரும்போது ஒருவன் தினமும் தன் உடலிலும் தலையிலும் நம்பிகளின் திருவடி மண்ணைப் பூசி வந்தான்.

இதனையறிந்த அவர் ஒருநாள் அவனை "ஏன் இவ்வாறு செய்கிறாய்?" என்று கேட்டார்.

அவன் "தேவப் பெருமாளோடு பேசும் தேவரீர் திருவடிப் பொடி என்பதால் இவ்வாறு செய்கிறேன்" என்றார். அவன், அவரிடம் "சுவாமி அடியேனுக்கு மோட்சம் உண்டா எனப் பெருமாளிடம் தெரிந்து சொல்லவேண்டும்" என்று சொல்லப்

பெருமாள் "அவனுக்கு மோட்சம் உண்டு" என்று பதில் கூறினார்.

தம் பேற்றைப் பற்றி நம்பிகள் பெருமாளிடம் கேட்டார். "உம் பக்திக்கு எம் அர்ச்சை நிலையைக் குலைத்துக் கொண்டு பேசினோம். பாட்டுக்கும் ஆட்டத்திற்கும் சமமாயிற்று; எனவே பாகவத அபிமானம் பெற்றாலே பேறு பெறலாம்" என்றார் பெருமாள்.

திருக்கச்சி நம்பிகள் பெருமாள் குறிப்பிட்டவாறு பாகவத அபிமானம் பெறத் திருக்கோட்டியூர் நம்பியிடம் மாட்டுக் காரனாகத் தம்மை மறைத்துக் கொண்டு இருந்து வந்தார்.

ஒருநாள் மாட்டை மேய்ச்சலுக்கு அழைத்துப் போனவர் இரவு நெடுநேரமாகியும் வரவில்லை. மழை பெய்தது. திருக்கோட்டியூர் நம்பி மாட்டுக்காரனான திருக்கச்சிநம்பிகளைத் தேடிச் சென்றார்.

அங்கே அவர் கண்ட காட்சி இது. திருக்கச்சி நம்பி தம் ஆடையை மாட்டின் மேல் போர்த்தித் தாமும் அதன்மேல் கவிழ்ந்து படுத்திருந்தார்.

திருக்கோட்டியூர் நம்பி "ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்று நம்பியைக் கேட்டார்.

திருக்கச்சியூரார் "மழையில் நனைந்தால் பசுவிற்குச் சீதளம் பிடித்துப் பாலும் சீதள குணத்தைப் பெறும். அதைப் பருகிடும் தங்களுக்குச் சீதளமாகி நோய் ஏற்படுமே" என்று கருதி இவ்வாறு செய்தேன்" என்றார்.

"நம் பையன்" எனத் திருக்கோட்டியூரார் அவரை அபிமானித்தார். தாம் மாட்டுக்காரனல்லன், திருக்கச்சி நம்பிகளே என்று காட்டி விடைபெற்றுக் காஞ்சியை அடைந்தார்.



## திருக்கச்சி நம்பியின் பக்தி

காஞ்சி வரதராசப் பெருமாள் திருக்கச்சி நம்பிகளின் கையாலே அமுது கொள்ள அவாக் கொண்டார். ஒருநாள் தளிகை அமுது செய்தும் அவசரத்தில் திரையைவிட்டதும் அர்ச்சகரை வெளியே போகச் சொல்லி, நம்பிகளைப் பிரசாதத்தை

எடுத்துத் தரும்படி நியமித்து எல்லாவற்றையும் சாப்பிட்டு முடித்து விட்டார்.

பட்டாச்சாரியர்கள் திரையை நீக்கிப் பார்த்தனர். வெறும் பாத்திரங்களே இருந்தன. "அர்ச்சாமூர்த்தி (சிலை) அமுது செய்திருக்கமுடியாது; நம்பிகள் தாம் எல்லாவற்றையும் உண்டிருப்பார்" என அவர் மேல் அவர்கள் பழி சுமத்தினார்.

நம்பியின் பக்தியை உலகறியச் செய்ய வடக்கே ஒரு தனிகன் கனவிலே பெருமாள் தோன்றித் தமக்கு 1000 தளிகை சர்க்கரைப் பொங்கல் படைக்கும்படி கேட்டுக் கொண்டார். அவனும் அவ்வாறே செய்தான். ஆயிரம் தளிகைகளையும் திரை இட்டுப் பெருமாள் முன் படைத்தனர்.

முன்பு போலவே அர்ச்சகரை வெளியே போகச் செய்து, நம்பியை அத்தளிகைகளை அவர் கையால் எடுத்துத் தரச் செய்து அத்தனை தளிகைகளையும் அமுது செய்து வெறும் கலங்களாக்கித் திரையை நீக்கச் சொன்னபோது வெறுங்கலங்கள் கண்டு அனைவரும் வியந்தனர்.

நம்பிகள் மீது ஐயப்பட்டுப் பழி சுமத்தியதற்கு மன்னிப்பு வேண்டினர். மறுபடியும் திரையிடச் செய்து பாத்திரங்களில் பொங்கல் நிறைந்திருக்கச் செய்தார் பெருமாள். பின் திரை நீக்கச் செய்து அனைவரையும் வியப்பிலாழ்த்தினார்.



## திருக்கச்சி நம்பிகளைப் பிடித்த ஏழரைச் சனி

ஒரு சமயம் ஏழரை ஆண்டுச் சனியின் சம்பந்தம் நம்பிக்கு நேருவதாக இருந்தது. எனவே நம்பியிடம் இந்தப் பிரிவை அவர் சகிக்க வேண்டும் என்றார் எம்பெருமாள்.

'நம்பியோ பிரிவைச் சகியேன்' என்றார். 'ஏழரை மாதங்களாவது அனுபவித்தே ஆக வேண்டும்; பிராப்தகர்மத்தை அநுபவித்தே கழிக்க வேண்டும்,' என்றார். நம்பியோ அதுவும் இயலாது என்று கூறவே 'ஏழரை வாரமாகிலும் கழிக்க வேண்டும்' என்றபோதும் மறுத்துவிட்டார். ஏழரை நாளிகை (3 மணி நேரம்) யாகிலும் அநுபவித்துத்தான் ஆகவேண்டும் என்றும் வேறு வழியில்லை என்றும் பெருமாள் கூறிவிட்டார்.

ஒருநாள் பெருமாளுடைய அணிகலன் ரத்னாகாரம் காணாமல்

போயிற்று. அரச்சகர்கள் நம்பிகள் தாம் எடுத்து இருக்க வேண்டும் என்றனர். அதனால் அதிகாரிகள் நம்பிகளைக் காவலில் வைத்தனர். ஏழரை நாழிகை கழிந்ததும் பெருமாளின் திருமேனியிலேயே மலர்களில் மறைந்து கிடந்த இரத்தினமாலை கிடைத்தது.

அதிகாரிகள் கனவில் கண்ட பெருமாள் "தாமோதரன் நம்பிகளின் ப்ராரப்த கர்மமான ஏழரை ஆண்டுச் சனியை ஏழரை நாளிகை அனுபவிக்கச் செய்யவேண்டுமென மறைத்தேன்" என்றார். நம்பிகளும் விடுதலை ஆனார். நம்பிகள் தேவராட்டகம் என்னும் பிரபந்தத்தை அருளிச் செய்தார். பூவிருந்தவல்லியில் இவருடைய உருவச் சிலையைப் படைத்தனர்.



# அரியக்குடி திருவேங்கடமுடையான்

17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சேவுகன் செட்டியார் என்ற நகரத்தார் பிரிவின் பெருமகன் ஒரு பெரு தன வணிகராக இருந்தார். அவர் கொடை வள்ளல். திருமலைத் திருவேங்கடமுடையான் பால் ஆழ்ந்த பக்தியுடையவர். அடிக்கடி சமாதியடைந்து விடுவார். அந்நிலையில் இவர் மீது பாம்புகள் ஊர்ந்து விளையாடின. பலர் இவரை வழிபட்டுத் தீராத நோய்களைத் தீர்த்தனர். இவருக்குக் காணிக்கை செலுத்தினார்.

ஆண்டு முடிவில் உண்டி காணிக்கைகளை எடுத்துக் கொண்டு திருவேங்கட முடையானிடம் நடந்து சென்று சமர்ப்பித்து வந்தார். வயது முதிர்ந்த நிலையிலும் அக் காணிக்கை செலுத்தினர்.

வயது முதிர்ந்த நிலையில் காணிக்கை உண்டியலைத் தலையில் சுமந்து, திருமலைக்குச் சென்று மலை ஏறும்பொழுது வழியில் மயக்கமுற்று விழுந்துவிட்டார். பின்னர் உணர்வு பெற்றுத் திருமலை சென்று காணிக்கைகளைச் சமர்ப்பித்தார்.

திருவேங்கடவன் அவரிடம் 'இனிமேல் நீ மலை ஏறி வரவேண்டும் என்பதில்லை' என்றார். வழியில் ஓரிரவு தூங்கும்பொழுது எம்பெருமான் கனவில் தோன்றி 'அரியக்குடியில் எவ்விடத்தில் நான்கு பக்கமும் முளை அடித்து மனை முகூர்த்தம் செய்யப்பட்டு நடுவில் உடைத்த தேங்காயும், துளபமும் மஞ்சள் குங்குமம் காண்ப்படுகின்றதோ அவ்விடத்தில் யாம் சாந்நித்யம்

செய்வோர். எமக்கு அங்கு ஒரு சிற்றில் அமைக்க' என்று வாய்மொழிந்து மறைந்தார்.

இறைவன் திருவருளை எண்ணி அவர் வீட்டுக்கு அருகிலேயே திறந்தவெளி செதுக்கப் பெற்று நான்கு புறமும் முளை அடிக்கப்பட்டு நடுவிலே மனை முகூர்த்தம் செய்த தேங்காய் மலர்களைக் கண்டார். அங்குச் சிறுகோவில் கட்ட முடிவு செய்தார். அவர் கண்ட இடத்தில் கருடாழ்வார் வட்டமிட அங்குப் பார்த்தபோது உபய நாச்சியார் மூவருடன் வெளிப்பட்டார். இவ்வாறாக அரியக்குடி வேங்கடவன் கோயில் வளர்ந்தது. பல இலட்சம் ரூபாயில் எழுந்த ஆலயம் அது. காரைக்குடி அருகில் இந்த அரியக்குடி திருவேங்கடமுடையான் ஆலயம் உள்ளது.



# அடியவனாய் வந்த பெருமாள்

திருக்கச்சி நம்பிகள் பெருமாளோடு உரையாடுபவர் எனக் கண்டோம். அவ்வாறு இரவு நெடுநேரம் உரையாடிக் கொண்டிருந்த ஒருநாள் கன மழை பெய்தது. தம் சீடன் வரதனை அழைத்தார். வரதன் வந்து அவருக்குக் காலணியை இட்டுக் கையில் தீவட்டியையும் ஒரு கையில் திரு அனந்தாழ்வானாகிய குடையையும் பிடித்துக் கொண்டு போய் மடத்தில் சேர்த்தான்.

மடத்திற்குச் சென்ற நம்பிக்கு அதிசயம் ஒன்று காத்திருந்தது. அவருடைய சீடன் வரதன் வந்து அவரை அழைத்துச் செல்ல வராமல் தான் தூங்கிவிட்டதாகவும், அவருடன் வரத் தவறியதற்காக மன்னிக்கும்படியும் வேண்டினான். இதைக் கேட்ட நம்பிகள் பெருமாளே வரதன் என்னும் பணியாளனைக் கொண்டு வந்தார் என மனங் கலங்கி வேதனையடைந்தார்.

பின் பகலிலேயும் இவருக்குக் காலணியிடுதல், குடை பிடித்தல் தொண்டைச் செய்தார். இதனால் பெருமாளிடம் வெறுப்புக் கொண்டு, திருமலைக்குச் சென்று ஆலவட்டம் வீச, திருமலைப் பெருமாள் திருமலையில் திரண்டருவி பாயும் இடத்தில் வசிக்கும் எனக்கு இந்த ஆலவட்டம் வேண்டுவதில்லை. அத்திகிரி அருளாளனுக்கே அதனைச் செய்" என்று கூறிவிட்டார்.

பின், திருவரங்கம் அடைந்து அரங்கநாதனுக்கு ஆலவட்டம் வீசப்புக "அப்பெருமாள்" தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையால்

அடிவருரும்படி பள்ளிகொண்டு இருக்கும் எமக்கு இத்தொண்டு விருப்பமில்லை, அத்திகிரி அருளாளனுக்கே உரியது அங்கேயே செய்க'' என்று அரங்கனும் கூறிவிட்டார்.

ஆனாலும், காஞ்சி செல்லாமல் ஆளவந்தார் கூட்டத்தில் சேர்ந்து வாழ்ந்தார்.

அவர் பிரிவைச் சகியாத அத்திகிரியருளாளர் ஆளவந்தார் கனவில் தோன்றி திருக்கச்சி நம்பிகளைத் தம்மிடம் அனுப்பிவைக்கும்படி பணிக்க அவரும் காஞ்சிக்கு அனுப்பி வைத்தார்.



# கூரத்தாழ்வான் எறிந்த பொன்வட்டில்

கூரத்தாழ்வான் என்னும் அந்தணர் காஞ்சிபுரத்திற்கு வடக்கில் இரண்டு கல் தொலைவில் உள்ள கூரக்கிரகாரத்தில் வாழ்ந்தார். கூரேசர் என்றும், கூரநாதர் என்றும் புகழ் பெற்ற இவருடைய துணைவி பெயர் ஆண்டாள். தமது அளவற்ற செல்வத்தை ஏழை எளியவர்களுக்கு வாரி வழங்குவதில் செலவிட்டார். இளமையிலேயிருந்தே இவர் இராமானுசரிடம் மிகவும் மதிப்புக் கொண்டிருந்தார். சிறந்த நினைவாற்றல் மிக்கவர். யாதவப் பிரகாசரை வெல்ல இவர் உதவினார்.

கூரத்தாழ்வார், இராமானுசர் காஞ்சியைவிட்டுத் திருவரங்கம் சென்ற பின்பு செல்வத்திலும் சொத்திலும் இருந்த அக்கரையையும் துறந்துவிட்டார். திருமகளிடம் திருக்கச்சிநம்பி கூரத்தாழ்வானின் பெருமைகளைக் கூறியது கேட்டுத் திருக்கச்சி நம்பியிடம் அவரைக் காண விரும்புவதாகத் திருமகள் தெரிவித்தார்.

கூரத்தாழ்வார் செல்வம் என்னும் குப்பை தன் உள்ளத்தையும், ஆன்மாவையும் மாசுபடுத்தியுள்ளது எனக் கருதி விலையுயர்ந்த ஆடைகளைத் துறந்து கந்தையாடையுடன் திருவரங்கம் நோக்கித் தம் துணைவி ஆண்டாளுடன் சென்றபோது, கணவர் தீர்த்தம் அருந்தும் பொன் வட்டில் ஒன்றை மட்டும் அவள் தன் கையில் எடுத்துக் கொண்டார். காட்டில் வழியில் அஞ்சுவதற்கு ஒன்று மில்லையே என்று ஆண்டாள் கணவரிடம் கேட்டார்.

தம்மிடம் ஒன்றுமில்லை அஞ்சுவதற்கு என்று கூறி, பணமோ செல்வமோ இல்லையென்றால் அஞ்சுவதற்கு ஏதுமில்லை என்று

கூரத்தாழ்வார் பதில் கூறினார்.

ஆண்டாள் இதைக் கேட்டவுடனேயே பொன் வட்டிலை தூர வீசி எறிந்தாள். மறுநாள் அவர்கள் திருவரங்கம் சென் பிட்சையெடுத்து வாழ்ந்தனர். கணவனுக்குப் பணி செய்வே இலட்சியமாக ஆண்டாள் கொண்டார். கிருமிகண்ட சோழனா கண்களை இழந்தார்.



# திருமால் மோவாயில் கற்பூரம்

திருமால் அடியார் அனந்தாழ்வாரின் மனைவி, தோண்டி மண் கூடையைத் தொலைவிட்டு கொட்டிட மெதுவாகச் சென்றா பிறகு அவள் விரைந்து செய்வது கண்டு ஐயமுற்று இ. எப்படி?

அவள் தனக்கு ஒரு பிரம்மசாரி அவ்வாறு விரைந் கொட்ட உதவுதாகக் கூறினார். அனந்தாழ்வார் தம் தொண்டி அழையாத விருந்தினராக வந்து இடையூறு செய்த அச்சிறுவனை ஓடிப் பிடித்து, மண் வெட்டியினால் ஓங்கி அவன் மேவாயி அடித்தார். அந்தச் சிறுவன் பயந்து ஓடினான்.

கோவில் அர்ச்சகர்கள் பார்த்தபோது திருவேங்கடமுடையானி மேவாயில் இருந்து குருதி பெருகியது. பிறகு இதனை அனந்தாழ்வானும் அறிந்தார். அந்த இரத்தக் காயத்தில் கர்ப்பூர அமுத்தியதும் இரத்தம் பெருகுவது நின்றது. இன்று வேங்கடமுடையானின் குழிந்த மேவாயில் பச்சைக் கற்பூர அர்ப்பித்துப் பிறகு அதைப் பக்தர்களுக்குப் பிரசாதமா வழங்குகின்றனர்.



# இராமானுசரின் ஆசார்யர்கள்

இராமானுசர் திருவரங்கத்து மடத்திற்கு வந்த இராமானுச ஆளவந்தாரின் சீடரான பெரியநம்பியைத் தம் ஆசாரியரா ஏற்று அவரிடம் நியாய தத்துவம், கீதார்த்த சங்க்ரகம், சித்தித்ரயம் வியாச சூத்திரங்கள் பாஞ்சாரத்திர ஆகமம் ஆகியவற்றை பயின்றார். பெரிய நம்பி தம் புதல்வர் புண்டரீ காட்சன

இராமானுசரின் சீடராக ஒப்படைத்தார்.

திருக்கோட்டியூர் நம்பியிடத்துத் திரு எட்டெழுத்து மந்திரத்தைப் பொருளுடன் கற்றார். திருக்கோட்டியூர் நம்பி தன் மகன் தெற்காழ்வானைச் சீடராக ஒப்படைத்தார்.

பெரிய நம்பியின் ஆணைப்படி இராமானுசர் திருவரங்கப் பெருமானரையரிடத்துத் திவ்யப் பிரபந்தங்களைப் பயின்றார். திருமாலையாண்டானிடம் நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியின் பொருள் சிறப்பினைக் கற்று உணர்ந்தார். திருவரங்கம் பெருமாளரையரிடம் தர்ம ரகசியங்களைக் கற்றுக் கொண்டார். பெரிய திருமலை நம்பியும் இராமானுசருக்குக் கற்பித்தார்.

பெரியநம்பி, பெரிய திருமலை நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெருமாளரையர் ஆகிய பெரியவர்கள் ஐவருமே ஆளவந்தாரின் அந்தரங்கமான சீடர்கள். அவர்கள் ஒவ்வொருவரிடமும் கற்று இராமானுசர் நல் ஞான மெய்தினார்.

அதன்பின் இராமானுசர் ஆளவந்தாரின் மறு அவதாரமாகவே கருதப்பட்டார். ஆளவந்தார் மேலே கூறப் பெற்ற ஐந்து சீடர்களிடத்தும் ஐந்து பகுதியாக உயிர்த்திருந்தார் என்பர்.

இந்த ஐந்து பகுதிகளும் ஒன்றாகி இராமானுசராக வடிவெடுத்தன. இராமானுசரிடம் குடிகொண்டிருந்த மானுடத்திற்குப்பால் அற்புதச் சக்திகள் குடி கொண்டிருந்தன. நேருக்கு நேரே பரமனைக் கண்டு பேசும் வல்லமை பெற்றிருந்தவர் அவர். உலகத் துன்பத் தீயில் வெந்து கருகிக் கொண்டிருந்த ஆன்மாக்களைப் பரமனின் திருவடிகளில் சேர்ந்து அவர்கள் துயர் நீக்கியவர் அவர். இதனால் தான் அவருக்கு உபயவிபூதியையும் ஆள்பவர் என்பதனால் உடையவர் எனும் பெயர் ஏற்பட்டது.

திருவரங்கத்துப் பெருமாள் இராமானுசரிடத்து மிக்க அன்பும் மதிப்பும் கொண்டு அவரை இம்மையாகிய லீலா விபூதி, மறுமையாகிய நித்ய விபூதி ஆகிய இரண்டுக்கும் உரிமையுடையவராக ஆக்கினார். இரண்டுமே அவர் கட்டுக்குள் இருந்ததால் இராமனுசர் எந்த உயிருக்கும் தம் விருப்பப்படி அவற்றை வழங்கும் வல்லமை வாய்ந்தவராக விளங்கினார்.



# குருவானவர் சீடரான வரலாறு

குரு யாதவப்பிரகாசர் இராமானுசரின் குருவாய் விளங்கினார் என்று கண்டோம். ஆசார்யனான அவர் இராமானுசரிடம் சீடரான வரலாறு இது. யாதவப் பிரகாசரின் தாயார் பேரருளாளனைத் தரிசிக்க வந்தவள் இராமானுசரைக் கண்டு, அவருடைய அருள் முகம், அறிவொளி கண்டு அதிசயித்துத் தம் மகன் யாதவப்பிரகாசர் இந்த மாமனிதருக்குச் சீடனானால் பரம சாந்தியைப் பெறுவான் என்று கருதினாள்.

இராமானுசரைச் சந்திக்க மடத்திற்கு யாதவப்பிரகாசர் சென்றார். இராமனுசர் மிக்க மரியாதையுடன் அவருக்கு இருக்கை அளித்தார். அவரிடம் யாதவர் "குழந்தாய், சகுணப் பிரம்மத்தை! குணங்களுடன் கூடிய பிரம்மம், வழிபடுவது ஒன்று மட்டும் உகந்தது என்று நீகருதுவதாகத் தெரிகிறது. சரி, இதற்கு சாத்திர ஆதாரங்கள் உண்டா?" என வினவினர்.

இதற்கு இராமானுசர், தம் சீடர் கூரத்தாழ்வானிடம் கேட்கும்படி பணிக்கக் கூரத்தாழ்வார் வேதவாக்கியங்கள் புராணம், காவியங்களிலிருந்த ஏராளமான சான்றுகளைச் சொல்லிக் கொண்டே போனபோது யாதவர் பிரமித்துப் போனார். இராமனுசரின் திருவடிகளில் பணிந்தார்.

எவ்வளவோ தடுத்தும் அவருடைய திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு 'தன்னைக் காக்கவேண்டும் எனவும், புகலாக அவரைக் கொள்கிறேன்' என்றும் கூறினார்.

தாயிடம் இசைவு பெற்றுத் தம் பழைய மாணவரிடம் துறவேற்றார். கோவிந்த ஜீயர் என்னும் திருநாமம் பெற்றார். பக்தி வழியில் அவருக்கு இருந்த பழைய வெறுப்பு, புலமையைப் பற்றிய அகந்தைகள் அழிந்தன. கர்வம் இருந்த இடத்தில் பணிவு குடி கொண்டது. அவர் உண்மையான பக்த வைணவரானார்.

தம்முடைய முந்தைய குருவிடம் ஏற்பட்ட மாறுதலை உணர்ந்த இராமானுசர் அவரிடம் "உண்மையான வைணவனுடைய கடமைகளை விளக்கி, வைணவ சமயம் பற்றி ஒரு நல்ல நூலை இயற்ற வேண்டும்" என்று வேண்டினார்.

அவருடைய ஆணைப்படி யாதப் பிரகாசர் சுருக்கமாகவும் ஒப்பற்றதாகவும் யாதிதர்ம சமுச்சயம் என்ற நூலை இயற்றி

ஆசார்யரின் திருவடிகளில் சமர்பித்தார். அப்பொழுது அவருக்கு வயது எண்பது. இந்நூல் அன்றாடக் கடமைகள், பூணூல், குடுமிதிரிதண்டம் ஆகியவற்றைத் தரிசிக்க வேண்டிய முக்கியத்வம் பற்றிக் கூறுகிறது.



## பழையது இல்லையென்ற மனைவி

வேலைக்காரன் ஒருவன் இராமானுசருக்கு எண்ணெய் தேய்த்துவிட்டுக் கொண்டிருந்தான். எலும்பும் தோலுமாய் மெலிவுற்றிருந்த அவனுக்கு இரங்கிய இராமானுசர் தன்னுடைய மனைவியிடம் 'நேற்றையப் பழையது இருந்தால் இந்த ஏழைக்குப் போடு'' என்றார்.

"ஏது பழையது? எதுவும் இல்லையே! இந்தக் காலை வேளையில் நான் எங்கிருந்து சோறு போடட்டும்?'' எனச் சொல்லிவிட்டுக் குளிக்கப் போய்விட்டாள்'' இராமானுசரின் மனைவி.

அவள் குளிக்கப் போனதும் இராமானுசர் சமையலறையில் போய்ப் பார்த்தபோது, பழையது ஏராளமாய் இருந்தது. அது முழுவதையும் அவர் அந்த வேலையாளிடம் கொடுத்து அவனை உண்பித்த பின்பு, எண்ணெய் தேய்த்துவிடச் சொன்னார்.

மனைவியினுடைய இந்த இரண்டாவது நிகழ்ச்சி அவருடைய துறவற வாழ்க்கைக்கு இட்டுச் சென்ற நிகழ்ச்சியாக அமைந்தது.



## திருவரங்கத்துப் பெரிய நம்பியும் இராமானுசரும்

ஆளவந்தார் மறைந்த பின்னர் இராமானுசரை ஆசார்யனாக்கப் பெரியநம்பி முடிவு செய்து காஞ்சி வந்தார். இராமானுசர் தமது வீட்டின் பாதிப் பகுதியைப் பெரிய நம்பி வதியும் படி அளித்தார். அவருடைய வசதிகளைக் குறைவின்றிக் கவனித்துக் கொண்டார். அவர் தம் திருவடிக்கீழ் அமர்ந்து திவ்யப்பிரபந்தங்களைப் பயின்றார்.

இவ்வாறு ஆறு மாதங்கள் கடந்தன. ஒருநாள் பெரிய நம்பியும் இராமானுசரும் வெளியே சென்றிருந்தனர். இராமானுசரின்

மனைவி தஞ்சமாம்பாள் வீட்டில் சமைக்கத் தண்ணீர் எடுத்துவரப் பக்கத்துக் கிணற்றுக்குச் சென்றாள். இதே நேரத்தில் பெரிய நம்பியின் மனைவியும் தண்ணீர் எடுக்க அதே கிணற்றுக்கு வந்தார். இருவரும் தங்கள் குடங்களை இறக்கித் தண்ணீர் நிரம்பியதும் அவற்றைத் தாம்புக் கயிற்றுடன் மேலே இழுத்தபோது, பெரியநம்பியின் மனைவியின் குடத்திலிருந்து சிறிது நீர் தஞ்சமாம்பாள் குடத்தில் விழுந்துவிட்டது.

தஞ்சமாம்மாள் கோபப்பட்டு எரிந்து விழுந்தாள். வார்த்தைகளைக் கொட்டினாள். "நீங்கள் தொட்ட தண்ணீரை நான் எப்படிப் பயன்படுத்த முடியும். இப்படி ஒரு கணவனைக் கட்டிக் கொண்டு நான் உயர்ந்த குலம், சிறந்த ஆசாரம் எல்லாவற்றையுமே இகழ்ந்து நிற்கிறேன்" என்று இழிந்து கூறினாள்.

பெரியநம்பியின் மனைவி மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். எனினும் அவள் உள்ளம் வருந்தி அழலானாள். பெரிய நம்பி செய்தி அறிந்து, திருவரங்கன் விருப்பம் நம்மை இங்கே இருக்கச் செய்யவில்லை என்று எண்ணியவாறு திருவரங்கம் புறப்பட்டுப் போய்விட்டார். இராமானுசரிடத்துக் கூறக்கூட இல்லை. தன் ஆசார்யனை மகிழ்விக்கப் பழம், பூவுடன் இராமானுசர் வந்தபோது திடீரென்று அவர்கள் புறப்பட்ட செய்தி அறிந்தார்.

மனைவியிடம் காரணம் கேட்டபோது நடந்ததை அவள் ஒளிக்காமல் கூறிவிட்டாள். "இராமானுசர் பொங்கி வந்த கோபத்தை அடக்க முடியாமல் 'சீச்சி, பேயே! உன் முகத்தில் விழிப்பது கூடப் பாவம்" என்று கத்திவிட்டுப் பேரருளாளர் கோவிலை நோக்கிச் சென்றார். கணவர் சென்றதும் பிச்சை கேட்டு வந்த பிராமணரையும் கோபத்தில் அவருடைய மனைவி துரத்திவிட்டார்.

பசியோடு வந்தவரைத் தன் மனைவி துரத்தியது கண்டு இராமானுசர் ஒரு முடிவெடுத்தார். அப்பிராமணரிடம் "நான் ஒரு கடிதம் அத்துடன் மஞ்சள் பழம் வெற்றிலை, புதிய ஆடை ஆகியவற்றையும் கொடுக்கிறேன். அவற்றைக் கொண்டுபோய் என் மனைவியிடம் கொடுத்து, அவள் தகப்பனார் உங்களை அனுப்பியிருப்பதாகச் சொல்லுங்கள். பிறகு கட்டாயம் உங்களைச் சிறப்பாகக் கவனித்து விருந்து வைப்பாள்" என்று கூறினார். மாமனாரின் கையெழுத்துடன் கடிதம் எழுதினார். அக்கடிதத்தில் தன் இரண்டாவது மகளுக்குத் திருமணம்

நடைபெற இருப்பதால் தன் மகள் தஞ்சமாம்பாளை அனுப்பி வைக்கும்படி மாமனார் எழுதியதுபோல் எழுதியிருந்தார்.

வீட்டிற்கு வந்த இராமானுசரிடம் தம் தந்தை எழுதிய கடிதத்தைத் தஞ்சமாம்பாள் காண்பித்தார். தாம் வர இயலாது என்றும், அந்தப் பிராமணருடன் பிறந்த வீடு செல்லும்படியும் அவளை அனுப்பி வைத்தார்.

பின் கோவிலுக்குச் சென்று பெருமாளை வணங்கிக் காவியுடுத்தித் திரிதண்டம் எடுத்துக் கொண்டு வேள்வித் தீ மூட்டிப் பெண்ணாசை, பொருளாசை, துறப்பதாக உறுதிபூண்டு துறவியானார். திருக்கச்சி நம்பி துறவியான இராமானுசரை யதிராசரே என்று அழைத்தார். இராமானுசர் யதிராசர் ஆனார்.



## திருக்கச்சி நம்பிக்கு இராமானுசர் படைத்த அமுது

திருக்கச்சி நம்பியை அடிதொழுத இராமானுசர் தம்மை அவருடைய சீடனாக்கிக் கொள்ளச் சொல்லி வணங்கினார். அவரோ, தாம் வேளாளன் ஆகையால் பிராமணனுக்கு உபதேசிக்க, வணக்கத்தை ஏற்றுக் கொள்ள அருகதையற்றவன் என்றார். இராமானுசர் பேரருளாளனுடன் பேசும் நம்பிக்குச் சாதி, குலம் கிடையாது என்பதை ஏற்று, அவரைத் தம் வீட்டில் உணவு கொள்ள அழைத்தார். அவ்வாறு அழைத்ததன் நோக்கம் அவர் உணவுண்டு எஞ்சியதைத்தாம் உண்டு தம் ஆத்மாவைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுதற் பொருட்டேயாம்.

மனைவியிடம் சிறந்த உணவு சமைத்து வைக்கும்படி கூறினார். இராமானுசர் தம் மனைவி தஞ்சம்மாள் அவ்வாறே சமைத்து வைத்தாள். திருக்கச்சி நம்பியை அழைத்துவர இராமானுசர் புறப்பட்டார். இராமானுசரின் நோக்கத்தை அறிந்த நம்பிகள் வேறு வழியாக அவருடைய வீட்டிற்கு வந்து, இராமானுசர் மனைவியிடம்தான் சீக்கிரம் கோவிலுக்குச் செல்ல வேண்டுவதாகச் சொல்லி உணவு பரிமாறச் செய்து உணவருந்தித் தாமே இலையைத் தொலைவில் எறிந்துவிட்டு, உண்ட இடத்தைப் பசுச் சாணத்தால் மெழுகிவிட்டு விடை பெற்றுச் சென்றுவிட்டார்.

தஞ்சமாம்பாள் எஞ்சியிருந்த உணவை வேலைக்காரிக்குக் கொடுத்துவிட்டு சமைத்த பாத்திரங்களைத் துலக்கிக் கணவருக்கும்

புதிதாகச் சமைத்தாள். தன் மனைவி இரண்டாவது தடவையாகக் குளித்துப் புதிதாகச் சமைப்பதைக் கண்டு தஞ்சமாம்பாள் மூலம் செய்த யறிந்ததார் வேளாளனைப் போல் ஒரு மகாத்மாவைத் தன் மனைவி இழிவாக நடத்திவிட்டது கண்டு மனம் வருந்தி தான் பெரும்பாவி என்று கூறியவாறு வீட்டுக்கு வெளியில் இருந்த மரத்தடியில் அமர்ந்தார்.

கோவிலில் திருக்கச்சி நம்பி பெருமாளுக்கு ஆலவட்டத்தை வீசிக் கொண்டு இலக்குவவனுடைய அவதாரமான இராமானுசன் தன்னை அடிபணிவதா, திருமாலையும் அடியார்களையும்தான் வழிபடுவற்கு இருக்கத் தன்னையே வழிபடு பொருளாக ஆக்கினானே இறைவன், என்று திருமலைக்குச் சென்று திருவேங்கடமுடையானைச் சேவித்து வர இசைவு பெற்றுச் சென்றார். அவ்வாறு திருமலை சென்றவரைத் திருமலைப் பெருமாளும், திருவரங்கத்துப் பெருமாளும், திருப்பியனுப்பினர் என்பதை முன்னர்க் கண்டோம்.



## திருக்கச்சி நம்பிகளும் இளையாழ்வாரும் முதல் சந்திப்பு

திருக்கச்சி நம்பிகள் காஞ்சியிலிருந்து தினமும் பூவிருந்தவல்லிக்குச் சென்று அங்குள்ள பெருமாளை வழிபடுவது வழக்கம். திருப்பெரும்புதூர் இவ்விரு ஊர்களுக்கு நடுவேயுள்ளது. எனவே, அவர் தினமும் இராமானுசரின் வீட்டு வழியே செல்வார். அவர் சாதியில் வேளாளர். பரந்தாமனிடம் அவர் கொண்டிருந்த பக்தியின் சிறப்பினால் அந்தணர்களும் அவரை மதித்துப் போற்றினர்.

ஒருநாள் இராமானுசர் தம் ஆசிரியரின் வீட்டிலிருந்து திரும்புகையில் வழியில் நம்பிகளைக் கண்டு, அவருடைய முகத்தில் பொலிந்த தெய்வீக ஒளியில் ஈடுபட்டுப் பழகினார். தம் இல்லத்தில் உணவு அருந்த அழைத்தார். திருக்கச்சிநம்பியும் அழைப்பை மறுக்க இயலாதவரானார்.

விருந்து முடிந்தபின் இராமானுசர் அவரருகில் சென்று பணிவிடையாக அவர் கால்களைப் பிடித்துவிட முன் வந்தார். ஆனால் அவர் அதை ஏற்காமல் நான் வேளாளன், உங்கள்

தொண்டனுக்கு நீங்கள் பணிவிடை செய்வதாவாது'' என்றார்.

இதனால் வருத்தமுற்ற இராமானுசர் உங்களைப் போன்ற பெரியவருக்குப் பணிவிடை செய்ய இயலாதது என் துர்பேறு என்றே கருதுகிறேன். பூணூல் அணிவதனாலா ஒருவன் பிராமணன் ஆகிறான்? பரந்தாமனிடம் பக்தி கொண்டவன் மட்டுமே உண்மையான பிராமணன் ஆவான். திருப்பாணாழ்வார் தாழ்ந்த குலத்தில் பிறந்தவராயினும் அந்தணர்களால் போற்றப் பெறும் பெருமையைப் பெற்றாரே'' என்று சொன்னார்.

நீண்ட ஆன்மீக உரையாடலுக்குப்பின் அன்றிரவு இராமானுசர் இல்லத்திலேயே தங்கி மறுநாள் புறப்பட்டார். இருவரும் அது முதல் நெருங்கிய நட்புக் கொள்வாராயினர்.



## மோதிர விரலினைக் கடித்தவர்

திருமங்கை திருட்டுத் தொழிலில் ஈடுபட்டிருந்த வேளை அது. திருமாலும், திருமகளும் மனித வடிவில் திருமங்கையாழ்வார் வரும் வழியில் அவர் காணுமாறு வந்தனர். இருவரும் தலை முதல் கால் வரையில் மிக்க மதிப்புள்ள ஏராளமான நகைகளை அணிந்திருந்தனர்.

அவர்களைக் கண்ட மங்கைமன்னன் அவர்களைத் தடுத்து நிறுத்தி அணிகலன்களைக் கவர்ந்து கொண்டார். அவர்களும் மகிழ்ந்தே நின்றனர். திருமால் அணிந்திருந்த மோதிரம் மட்டும் எத்தனை முயன்றும் கழட்ட வரவில்லை.

எனவே அதனை மங்கைமன்னன் பல்லால் கடித்துக் கழற்றிக் கொண்டார். எல்லா நகைகளையும் மூட்டையாகக் கட்டி அவர் எடுத்துக் கொள்ள முயன்றபோது அதை எடுத்துச் செல்ல முடியாதபடி அது மிகவும் கனமாக இருந்தது.

அந்த ஆண்மகன் ஏதோ தந்திரம் செய்திருக்கிறான் என்று எண்ணிய திருமங்கை சினத்துடன் "ஏய்! நீ என்ன மந்திரம் போட்டிருக்கிறாய் சொல்'' என்றார்.

"ஆமாம், மந்திரம்தான் போட்டிருக்கிறேன். அதை உனக்குச் சொல்கிறேன்'' என்று கூறிய திருமால் அவரை அணுகி அவர் காதில் திரு எட்டெழுத்து மந்திரத்தை ஓதினார். மந்திரத்தின்

ஆற்றலினாலும் பரந்தாமனின் திருக்கரம்பட்டதனாலும் இவர் உடனே ஆன்ம ஞானம் பெற்றுப் பரம பக்தராக மாறினார்.

கள்வரான திருமங்கை பிரபந்தங்களை உலகுக்கு அருளினார். வாழியரோ மாயோனை வாள் வலியால் மந்திரங் கொள் மங்கையர் 'கோன் தூயோன் சுடர் மானவேல்' என்னும் பெரிய திருமொழித் தனியனும் இந்த நிகழ்ச்சியை வலியுறுத்தும்.



## யமுனைத்துறைவர்

நாதமுனிகளின் பேரன் ஈசுவரமுனியின் மகன் யமுனைத் துறைவர். பன்னிரண்டு வயதில் யமுனைத் துறைவர் மகாபாடிய பட்டரிடம் கல்வி பயின்று கொண்டிருந்தபோது பாண்டிய மன்னனின் அவைப்புலவரான வித்வஜ்ஜன கோலாகலர் என்ற ஆக்கியாழ்வான் பரந்த கல்வியறிவும், தருக்க வாதத்திறனும் கொண்டிருந்தார்.

புலவர்கள் அவைகளில் தம்மை எதிப்பவர்களை அவர் தோல்வியடையச் செய்தார். மன்னன் அவர்பால் பெருமதிப்புக் கொண்டிருந்தார். தோற்றவர்களிடம் ஆண்டுதோறும் கப்பம் பெற்றார். மகாபாஷ்ய பட்டமும் கப்பம் கொடுத்து வந்தார். ஆயினும் கையில் பணமில்லாததால் இரண்டு மூன்று வருடத்துக் கப்பத் தொகை நிலுவையாயிற்று.

யமுனைத் துறைவர் மட்டுமே தனியாக வீற்றிருந்தார். கோலாகலருடைய சீடன் கப்பம் பெற வந்தான். திமிருடன் "எங்கே, உன் குரு?" என்று அவன் கேட்டான். அடக்கமாக வந்து யார் என்று வினவ, வந்தவன் தன் குருவின் பெருமையை விளக்கமாக எடுத்துரைத்தான். யமுனைத் துறைவரின் குருவை நிந்தனையாகப் பேசினான்.

இதனால் கோபம் அடைந்த யமுனைத்துறைவர் "மகா பாடியரின் மட்டமான மாணவர்களுள் ஒருவனான தான் அவரிடம் வாதிட விரும்புவதாகச் சொல்லித் துணிவிருந்தால் முதலில் தன்னை வெல்லட்டும்" என்று கூறினார்.

செய்தி கேட்ட அரசன் "உண்மையிலேயே வாதிட விரும்பினால் அவனை அழைத்து வா" என அழைத்து வரச் சொன்னார்.

அரசனின் ஆணையை யமுனைத் துறைவரிடம் தெரிவித்தபோது அரசவைக்குத் தாம் வரப் பல்லாக்கு அனுப்பவேண்டும் அல்லது கோலாகலரை அனுப்பி வைக்க வேண்டும் என்று கூறினார். எனவே அழகிய விலைமதிப்புடைய பல்லக்கை அனுப்பிவைத்தார் அரசர்.

மகா பாடியபட்டர் செய்தியறிந்து மூர்ச்சையடைந்தார். தம்முடைய மாணவர் பிழைத்துவருவார் என்ற நம்பிக்கையில்லை. அவைப் புலவரை அவமதித்தால் தலையிழக்கும் ஆபத்து உள்ளது என அஞ்சினார். சிறுவன் ஒருவன் அவைப் புலவருடன் வாது செய்யச் செல்வது வியப்பான காட்சியாக இருந்ததால் பலரும் கூடி நின்று வேடிக்கைப் பார்த்தனர்.

இதற்குள் அரசவையில் அரசனுக்கும் அரசிக்குமிடையே இருவரில் யார் வெல்வர் என்பது குறித்து விவாதம் ஏற்பட்டது. கோலாகலரைத் தோல்வியுறச் செய்தால் அரசில் பாதியைக் கொடுப்பதாக அரசனும், தான் தோற்றால் அரசனின் அடிமைக்கு அடிமையாவேன் என்று அரசியும் பந்தயம் வைத்தனர்.

பல்லக்கிலிருந்து யமுனைத் துறைவர் இறங்கி அரசனையும், அரசியையும், அவையோரையும் வணங்கினார். கோலாகலர் "இந்தப் பையனா என்னை வெல்ல வந்திருப்பவன்? என்னை ஆளவந்தாரோ?" என்று கேட்க அரசி "ஆம், இவர் ஆள வந்தார்; உம்மை வென்று ஆளவந்தார்" என்றாள்.

கோலாகலர் தொடுத்த எளிய கடினமான வினாக்களுக்கும் யமுனைத் துறைவர் எளிதில் விடை கூறினார். எனவே, கோலாகலர், யமுனைத்துறைவரை "நீ என் கேள்விகளுக்குச் சரியாகவே பதில் சொன்னாய், நீ கேள்; நான் விடையளிக்கிறேன்" என்றார்.

"நான் மூன்று வாக்கியங்களை உங்கள் முன் வைப்பேன். நீங்கள் அவற்றை மறுக்க முடிந்தால் நான் உங்களிடம் தோல்வியை ஒப்புக் கொள்வேன்" என்றார் யமுனைத்துறைவர்.

"முதல் வாக்கியம் இது. உங்கள் தாய் மலடி அல்ல. முடிந்தால் இதை மறுத்துப் பேசுங்கள் என்றார்".

தன் தாய் மலடியாக இருந்தால் தான் பிறந்திருக்க முடியாது. ஆகையால் கோலாகலர் மௌனியானார்.

யமுனைத்துறைவர் இரண்டாவது வாக்கியத்தைப் பகர்ந்தார். “பாண்டிய அரசன் மிகவும் நீதிமான். இதை மறுத்துக் கூறுங்கள் அரசனை எப்படி நீதிமான் அல்லன் என்று கூறமுடியும். எனவே இப்போதும் பதில் கூற முடியாதவரானார். பின்னர் மூன்றாவது வாக்கியத்தை வெளியிட்டார். “நம் முன்னால் அமர்ந்திருக்கும் இந்தப் பேரரசி சாவித்திரியைப் போன்ற பதிவிரதை. இதை மறுத்துப் பேசும்” என்றார்.

சினம் கொண்ட கோலாகலர் “அடே பயலே! அரசன் நீதிமான் அல்லன் என்றும், அரசி பதிவிரதை அல்லன் என்றும் அரசனிடம் பரிவுள்ள எவனாவது சொல்வானா? என் வாயை நீ அடக்கிவிட்டாய் என்பது உண்மை. ஆனால் நான் தோற்றேன் என்று பொருளில்லை. நீ சொன்ன மூன்று வாக்கியங்களை நீயே மறுத்துப் பேசு. இல்லையென்றால் உன் உயிரை இழப்பாய்” என்றார்.

யமுனைத்துறைவர் “தயவு கூர்ந்து அமைதியாய் இருங்கள். என் வாக்கியங்களை ஒவ்வொன்றாக மறுத்துப் பேசுகிறேன்” என்றார்.

“என் முதல் வாக்கியத்துக்கு மறுப்பு இது. நமது சாத்திரங்களில் ஒரே மகவைப் பெற்றவள் மலடி. ஒரு மரம் தோப்பல்ல. நமது சாத்திரங்களின்படி ஒரே ஒரு பிள்ளையைப் பெற்றிருப்பதனால் நீங்கள் எவ்வளவு மதிப்புகளைப் பெற்றவராயினும் உங்கள் தாய் மலடி என்றே கருதப்படுவாள்” என்றார்.

“என் இரண்டாவது வாக்கியத்துக்கு மறுப்பு இது. நமது புனித நூல்களில் ‘ஓர் அரசன் தன் குடிமக்களை நன்கு காக்கும்பொழுது அவர்கள் புண்ணியத்தில் ஆறிலொரு பங்கும், நன்கு காக்காதபோது பாவத்தில் ஒரு பங்கும் பெறுகிறான் என்று கூறப்பட்டுள்ளது. கலியுகத்தில் அதர்மமே விஞ்சியிருக்கிறது. ஓர் அரசன் எவ்வளவு நல்ல ஆட்சியாளனாக இருந்தாலும், கலியின் வலிமையால் மக்கள் இயல்பிலேயே பாவம் செய்பவர்களாகி விடுகிறார்கள்; அரசனும் அவர்களின் பாவங்களில் ஆறிலொரு பங்கை ஏற்க நேரிடுகிறது. எனவே சாத்திரங்களின்படி பார்த்தால் அரசன் அநீதிமான் என்னும் பளுவையும் சுமக்க வேண்டியுள்ளது.”

“என் மூன்றாவது வாக்கியத்தின் மறுப்பு இது. அரசன் தன் செங்கோல் வலிமையால் அக்கினி, வாயு, சூரியன், சந்திரன், யமன், குருபரன், வருணன், இந்திரன் ஆகிய

தேவர்களின் அம்சம் கொண்டு விளங்குகிறான். ஆகவே, அரசி என்பவர் அரசன் என்னும் தனி மனிதனுக்கு மட்டுமே வாழ்க்கைப்பட்டவளல்லள். இந்த எட்டுத் திக்குப் பாலகர்களுக்கும் அவள் மனைவி ஆகிறாள். எனவே இத்தனை தேவர்களுடன் தொடர்புடைய அரசியைப் பதிவிரதை என்று எப்படிச் சொல்ல வியலும்.''

இப்பதில் கேட்ட அரசி, சிறுவனான யமுனைத்துறைவரை 'ஆளவந்தாரே, ஆளவந்தாரே' என அழைத்துத் தன் மடியில் அமர்த்திக் கொண்டாள். அரசன் கோலாகலரை இவரிடத்து ஒப்படைத்து அரசில் பாதியை அளிக்கிறேன்' என்று கூறி அரசியின் மடியிலிருந்து அவரைத் தூக்கி எடுத்துத் தன் அரியணைக்கு அருகிலேயே அமர்த்திக் கொண்டார். பாதி அரசைப் பெற்ற அவர் சிறுவராக இருந்தும் செம்மையாக ஆண்டார்.



## திருமங்கையின் சீடர்கள்

திருமங்கையாழ்வாரின் சீடர் நால்வர் அவருடன் நெடும்பயணம் தொடர்ந்தனர். அவர்களில் முதல்வன் தோலா வழக்கன் என்பவன். அவனுடன் வாதமிட்டு எவரும் வெற்றி பெற இயலாது. இரண்டாமவன் தாளூதுவான் என்பவன்; அவன் எத்தகைய கனமான பூட்டையும் சாவியில்லாமல் தன் வாயினால் ஊதியே திறந்துவிடுவான். மூன்றாமவன் நிழலிலொதுங்குவான் என்பவன். அவன் யாருடைய நிழலைத் தொட்டாலும் அவர்களால் பிறகு அசைய முடியாது. நான்காமவன் நீர் மேல் நடப்பான் என்பவன் அவன் தரையில் நடப்பது போலவே தண்ணீரின் மீதும் நடந்து செல்வான்.

திருமங்கைமன்னன் பல புனிதத்தலங்களைத் தரிசித்துத் தமது நான்கு சீடர்களுடன், காவிரிக்கு நடுவில் இருந்த தீவில் அமைந்த அரங்கநாதன் கோயில் வந்து சேர்ந்தார். அக்கோயில் சிறியதாய்ச் சீர் குலைந்த நிலையில் இருந்தது. அரங்கன் கோயிலின் இந்தப் பரிதாப நிலையைக் கண்ட மங்கைமன்னர் 'பெருமாளுக்குப் பெரிய கோயிலை உருவாக்க விழைந்தார். ஆனால் கையில் ஒரு காசில்லை. நாட்டின்

பல பகுதிகளிலுமுள்ள செல்வந்தர்களிடம் நிதி திரட்டத் தலைப்பட்டார். செல்வர் ஒருவனும் இவருக்கு ஒரு காசும் கொடுக்கவில்லை. இவரைத் திருடன் என்று கூறி இழிவு செய்தனர். ஆனால் பிறர் இழிவு செய்ததை அவர் பொருட்படுத்தவில்லை.

எனவே அச் செல்வர்களிடம் திருடி அந்தப் பணத்தைக் கோயில் கட்டவும், ஏழைகளுக்கு உணவும் உடையும் வழங்கவும் பயன்படுத்தவும் முடிவு செய்தார். தோலாவழக்கன் செல்வரை வாதத்தில் ஈடுபடுத்தி மறக்கச் செய்யும் வேளையில் செல்வத்தை எடுத்துக் கொள்ளை கொள்ள யோசனை கூறினான். தாளூதுவான் வாயினால் ஊதிப் பூட்டைத் திறக்கவும், நிழலிலொதுங்குவான் பிறர் நிழலைத் தொட்டு அசையும் சக்தியை இழக்கச் செய்வதாகவும், நீர்மேல் நடைப்பான் அகழி சூழ்ந்த கோட்டைகளில் புகுந்து நிதி சேர்க்கவும் உதவிட முன் வந்தனர்.

திருவரங்கத்தில் இவ்வாறு பெருஞ்செல்வம் சேர்த்துத் திறமை மிகச் சிறப்பினைக் கொண்டு உள் சுற்றுடன் கூடிய ஏழு திருச்சுற்றுகளை அறுபது ஆண்டுகளில் கட்டிமுடித்தபோது அவருக்கு எண்பது வயதாயிற்று. சில திருச்சுற்று முடிந்தபின் அரசர்கள் பொருள் வழங்கினர். சிற்பிகளுக்குத் தவறாமல் அன்பளிப்பு வழங்கினர்.

இவர் எளிமையான வாழ்க்கை வாழ்ந்தார். ஒவ்வொருநாளும் மாலையில் தாம் அன்றாடம் பிச்சை எடுத்து வந்த பொருள்களைக் கொண்டு தம் கையாலேயே சமைத்து உண்டார்.



## கொல்லிடமா? கொள்ளிடமா?

திருமங்கை ஏழு திருச்சுற்றுக் கொண்ட திருவரங்கம் கோயிலைக் கட்டி முடித்தார். இவர் கையில் ஒரு காசும் இல்லை. அப்போது களவில் இவருக்குக் கூட்டாளிகளாக இருந்த ஓராயிரம் பேர் வந்து இவரிடம் பணம் கேட்டு மிரட்டினர். அவர்களுக்கு எங்கிருந்து எப்படிப் பணம் கொடுப்பதெனத் தெரியவில்லை.

நீர்மேல் நடப்பானை ஒருபுறமாக அழைத்துச் சென்று, அவன் காதில் ஏதோ ஓதினார். நீர்மேல்நடப்பான் விரைவில்

சென்று காவிரியின் கரையில் ஒரு பெரிய படகை விடுவித்தான். அந்தப் படகில் இரண்டு மணிநேரம் இருந்துவிட்டு, நீர்மேல் நடப்பான் தன் ஆசானிடம் வந்து நின்றான். மங்கைமன்னன் ஒரு காசு மில்லாதவர் என்றும், இவரிடம் பணம் பெயராது எனவும் அறிந்து திருடர் கூட்டம் இவரைக் கொல்ல முடிவு செய்தது.

நீர்மேல்நடப்பான் திருடர்களிடம் வடகரையில் பெரும்புதையல் ஒன்று இருக்கிறது என்று சொல்லி அனைவரையும் படகில் ஏற்றினான். காவிரியில் பெரும் படகு மெதுவாக அசைந்து கொண்டிருந்தது. மற்றையச் சீடர்கள், மங்கைமன்னன் தென்கரையில் நின்று படகை உற்று நோக்கியவாறு இருந்தார். சிறிது நேரத்தில் படகு மறையத் தொடங்கியது.

திடீரென்று காவிரியின் நடுவிலிருந்து பயங்கர விபத்து ஓசை கேட்டது. மனிதர்கள் ஓலமும் கேட்டது சிறிது நேரத்தில் எல்லாம் அடங்கிவிட்டது. பின்னர் படகு தெரியவில்லை. நான்காவது சீடன் நீர்மேல்நடப்பான் நீர் மேல் அடி எடுத்து வந்தான்.

ஆயிரம் கள்வர்களை நீர்மேல் நடப்பான் கொன்ற இடமாகிய காவிரியின் வடகரை இப்பொழுதும் கொன்றஇடம் என்ற பொருளில் கொல்லிடம் (கொள்ளிடம்) என்றே வழங்குகிறது.



## சேற்றில் படுத்த சீடர்

நாதமுனிகளுக்கு அடுத்த வைணஆசாரியர் உய்யக் கொண்டான் ஆவார். இவருக்கு அடுத்தபடி ஆச்சாரிய நிலை வகித்தவர் மணக்கால் நம்பி. அவர் குருபக்தி மிகுந்தவர். தம் குருவான உய்யக் கொண்டானுக்கு அனைத்துப் பணிகளும் செய்து வந்தார்.

உய்யக் கொண்டாரின் பெண்கள் இருவர். இவர்களை தினமும் ஆற்றங்கரையிலிருந்து நீராடி வீடு திரும்புவர். ஒருநாள் அவ்வாறு அப்பெண்கள் இருவரும் நீராடி வீடு திரும்பும்போது அவர்கள் வரும் பாதை சேறாயிருந்தது. அவர்கள் சேறாயிருந்த பாதையில் செல்வதற்கு விருப்பமில்லாமல் எப்படிச் சேற்றைக் கடப்பது எனத் திகைத்து நின்றுவிட்டனர்.

அப்போது அங்கு வந்த மணக்கால் நம்பி தம் குருவின் பெண்கள் சேற்றில் கால் வைக்கத் தயங்கி நிற்பதைக் கண்டார். அவர் வழியில் சேற்றின் மீது படுத்துக் கொண்டு, அவர்களைத் தம் முதுகின்மீது கால் வைத்துச் சேற்றில் கால்படாமல் கடந்து செல்லும்படி செய்தார்.

குருவின் மீது அவர் கொண்ட பக்தியின் விளைவால் இவ்வாறு செய்தார்.



## தூதுவளைக் கீரை வழிவந்த ஆசார்யர்

ஆளவந்தார் நாதமுனிகளின் பேரர். அவர் அரசுப் பணிகளில் முனைந்து இருந்தமையால் வைதிகப் பணிகளைக் கவனிக்க அவருக்கு நேரமில்லை. மணக்கால் நம்பி தமக்குப் பின் ஆளவந்தாரையே ஆசாரிய பீடத்தில் இருத்த விரும்பினார். ஆனால், நம்பியால் ஆளவந்தாரைச் சந்திக்க இயலவில்லை. எப்படியாவது அவரைச் சந்திக்க விழைந்து அதற்கு ஓர் உபாயம் செய்தார்.

ஆளவந்தாருக்குத் தூதுவளைக் கீரை மிகவும் பிடிக்கும் எனக் கண்டறிந்து, தினமும் அக்கீரையைச் சமையற் கூடத்திற்கு நம்பி அனுப்பினார். தவறாமல் தொடர்ந்து ஆறுமாத காலம் அனுப்பினார். நம்பியனுப்பிய கீரையை விரும்பும் ஆளவந்தார் தினமும் உண்டாரேயன்றி, அதனை அனுப்பியவர் நம்பி என்பதும் தெரியாது. நம்பி கீரையை ஆறுமாத காலம் தொடர்ந்து அனுப்பிவிட்டு ஒருநாள் நிறுத்திவிட்டார்.

தூதுவளைக்கறி இல்லாமையால் சமையல்காரரைக் காரணம் கேட்டபோது, தினமும் கீரை கொடுத்து வந்தவர் அன்று தரவில்லை என்று கூறினார். அவ்வாறு அளித்து வந்தவர் மறுநாள் வந்தால் தம்மிடம் அழைத்து வரும்படி சமையற்காரரிடம் பணித்தார். மறுநாள் கீரை கொண்டு சென்றவரைச் சமையற்காரர் ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றார்.

ஆளவந்தார் நம்பியை வணங்கி "இத்தனை நாள் தூதுவளை கொண்டு வந்து அளித்தது எதற்காக? உமக்கு வேண்டியவற்றைச் சொன்னால் அளிக்கச் சித்தமாயிருக்கிறேன்" என்றார்.

நம்பி அவரிடம் "நமக்கு ஒன்றும் வேண்டாம். உம் முன்னோர்கள் தேடின பொருள் உள்ளது. அது உள்ள இடம் அறிவேன். அதை நீர் கைக் கொள்ளும் வரை யான் வந்து செல்ல ஒப்புதல் அளிக்க வேண்டும்" என்று கூறினார். ஆளவந்தாரும் அவ்வாறே அருளினார். நம்பி தினமும் வந்து கீதோபதேசம் செய்து பின்னர் சரம சுலோகத்தையும் உபதேசித்தார். பின்னர் அரங்கத்துப் பெருமாளிடம் அழைத்துச் சென்று அவர் திருவடி தொழச் செய்து "உங்கள் முன்னோர் தேடிவைத்த பெருஞ் செல்வம் இது, காணுவீர்" என்று காட்டினார்.

பரமானந்தத்தில் மூழ்கிப் பெரிய பெருமாளாம் அரங்கனைச் சேவித்து அங்கேயே எழுந்தருளிவிட்டார். பின்னர் வைணவ பரமாசாரியரானார்.



# செங்கண்மால் கொண்டு போனான்

விட்ணுசித்தரின் மகள் ஆண்டாள். இளவயது முதலே மால்வண்ணனை வழிபட்டு அவனைத் தவிர வேறு எவரையும் மணக்கப் போவதில்லை என்று கூறி வந்தாள். விட்ணுசித்தர் திருமாலைத் தியானித்தார். ஒருநாள் இரவில் பரந்தாமன் தோன்றி, "தங்கள் திருமகளை எனக்கு மணம் செய்விப்பது பற்றிச் சிறிதும் கலங்கித் தாமதம் செய்ய வேண்டாம்; ஏனெனில் ஆண்டாள் திருமகளே ஆவாள்" என்று அருளினார்.

அதே நாளில் திருவரங்கத்து அர்ச்சகர் கனவில் தோன்றி "நாளைக் காலையில் நீங்கள் திருமண விழாவிற்குரிய பொருள்களை எடுத்துக் கொண்டு திருவல்லிப்புத்தூர் விட்ணுசித்தர் திருமாளிகை சென்று அவர்தம் திருமகள் ஆண்டாளை அழகிய ஒப்பனையுடன் பல்லக்கில் இங்கே அழைத்து வருக" என்று திருமால் கட்டளையிட்டார்.

அவ்வாறே அர்ச்சகர் திருவல்லிபுத்தூர் சென்றார். எம்பெருமானை மணக்கப் பல்லக்கில் சென்ற அவள் பின்னே பலரும் சென்றனர். கருவறையினுள் சென்றதுமே, அழகிய மணவாளன் கரம் நீட்டி ஆண்டாளை அணைத்துக் கொண்டார். ஆண்டாள் நெஞ்சுருகக் கரைந்து அழகிய மணவாளனுடன் ஒன்றிக் கலந்தாள். பிறகு அவளை எவரும் காணவில்லை.

விட்ணு சித்தர் "ஒருமகள் தன்னை உடையேன்; உலகம் நிறைந்த புகழாய் திருமகள் போல வளர்ந்தேன்; செங்கண்மால்தான் கொண்டு போனான்" என்று புலம்பிப் பாடினார் எனக் கண்டோம். எம்பெருமான் "இன்றுமுதல் நீர் எம் மாமனார் ஆனீர். மீண்டும் திருவில்லிபுத்தூர் சென்று எம் தொண்டில் ஈடுபட்டு வாழ்வீராக. உம் மகள் என்றும் பிரியாமல் எம்முடனே இருப்பாள்" என்று திருவாய் மலர்ந்தார்.

மீண்டும் வில்லிபுத்தூருக்குத் திரும்பினார். அன்று முதல் விட்ணுசித்தர் என்ற பெயர் மாறிப் 'பெரியாழ்வார்' என்னும் பெயர் பெற்றார்.

*மங்களாசாசனத்தில் மற்றுமுள்ள ஆழ்வார்கள்*
*தங்களார்வத் தளவு தானன்றிப் – பொங்கும்*
*பரிவாலே வில்லிபுத்தூர்ப்பட்டார் பிரான் பெற்றார்*
*பெரியாழ்வார் என்னும் பெயர்*

என மணவாள மாமுனிகள் உரைத்தார்.

இருள்தரு மா ஞாலத்தில் எம்பெருமான் எழுந்தருள, தீயவர்களால் அவனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சி, மிக்க பிரிவினால் காப்பிட்டுத் திருப்பல்லாண்டு பாடியதால் மங்களாசாசனத்தில் மற்றைய ஆழ்வார்களை விடவும் அளவற்ற பற்றும் கொண்டதனால் பெரியாழ்வார் என்ற திருநாமம் பெற்றார் என்பர்.



## ஆண்டாள் அரங்கநாயகி ஆனாள்

ஆண்டாள் திருமகளின் மூன்று வடிவங்களில் பூதேவியின் அவதாரமாவாள். விட்ணுசித்தர் திருத்துழாய் வனத்தில் கண்டெடுத்து வளர்ந்து வந்த பெண். இப்பெண் சிறு வயது முதலே நாராயணன்பால் அன்பு கொண்டவர். பரம்பொருளாம் திருமாலுக்குச் சார்த்த வைத்துள்ள மாலையைத் தன் கழுத்தில் அணிந்து அழகு பார்த்து மீண்டும் அதை அங்கேயே வைத்துவிடுவாள்.

இவ்வாறு அவள் அணிவதைக் கண்ட விட்ணுசித்தர் ஒருநாள் இதைக் கண்டு கடிந்து கொண்டார். பெருமாளுக்கு அன்று அவரால் மாலை சூட்ட இயலாது போயிற்று. பெருமாள் கனவில்

தோன்றி அடியார் தொட்ட பொருள்களை மகிழ்வுடன் ஏற்றுக் கொள்வதாகவும், ஆண்டாள் மானிடப் பெண் அல்லள் என்றும் குறிப்பிட்டார்.

முதல்நாள் ஆண்டாள் சூடிக்களைந்த மாலை மறுநாளும் சிறிதும் வாடாமலிருக்கும் அற்புதம் நிகழ்ந்தது. புதுமாலைபோல் பழைய ஒளி வீசியது. அம்மாலையை எடுத்துப் பெருமாளுக்கு அணிவித்தார். பெருமானின் என்றுமில்லாப் பேரெழில் கண்டு மெய்மறந்து உள்ளம் மகிழ்ந்தார்.

வயது வந்த பின்பும் ஆண்டாள் குழந்தை மனத்தவளாக இருந்தாள். பரந்தாமனிடம் உள்ளம் பறி கொடுத்த பாவையாகவே இருந்தாள்.

சூடிக் கொடுத்த நாச்சியார், கோதை என்று ஆண்டாளை அழைப்பர். வேதாந்த தேசிகர் திவ்ய சூரிசரிதத்தில்

*ஆஷாடே பூர்வபல்குன்யாம் துலசீகாண னோத்பவாம்!*
*பாண்ட்யே விசலம்பராம் கோதாம வந்தே ஸ்ரீரங்கநாயகீம்!*

எனப்பாடியுள்ளார்.

"சொல்மாலை புனைவதில் வல்லவளாக பூதேவியின் அவதாரமாகப் பாண்டிய நாட்டில் திருவாடிப்பூரத்தில் தோன்றி அரங்கனின் தேவியாக வாழ்க்கை பெற்ற கோதை என்னும் ஆண்டாளைத் துதிக்கிறேன்" என்பது இதன் பொருள்.

கோமாதா எனில் வடமொழியில் இனிய மொழிகளை அளிப்பவள் (கோ–வாக்கு, தா– அளிப்பவள்); பூமித்தாயினால் உலகிற்கு அளிக்கப் பெற்றவள் (கோ–பூமி; தா–அளிக்கப் பெற்றவள்) மாலை சூட்டியவள் (கோ–மாலை, தா–சூட்டியவள்) என்று மூன்று வகையான பொருள் விளக்கம் அளிக்கலாம்.

ஆண்டாளைப் பொருத்தமட்டில் இம்மூன்றுமே பொருந்துகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. அரங்கனை மணந்ததால் ஆண்டாள் அரங்கநாயகி எனும் சிறப்புப் பெயர் பெற்றாள்.



# ஆளவந்தாரும் இளையாழ்வாரும்

காஞ்சியிலிருந்து இருவர் திருவரங்கம் வந்தனர். அவர்கள் ஆளவந்தாரிடம், இராமானுசர் வேதாந்தம் பயிலுவதையும், வேதங்களில் அத்வைதக் கருத்துக்களை மறுத்து, விசிட்டாத்வைதக் கருத்துகள் உரைப்பதையும் கூறினர்.

“நெருப்புச் சட்டியில் நெருப்பே போல அசத்துகளே மலிந்துள்ள இந்நிலவுலகில், அந்நெருப்புச் சட்டியில் தாமரை பூத்தது போல இப்படியும் ஒரு மாமனிதர் உண்டாவதே” என்று மகிழ்ந்து இளையாழ்வாரான இராமானுசரைக் காணத் திருக்கோவலூர் வழியாகக் காஞ்சி வந்தார்.

திருக்கச்சிநம்பிகள் ஆளவந்தாரை வணங்கினார். ஆளவந்தார் பெருமாளைத் தொழுது வலமாக வருகையில் கீழ்சுற்றில் கரிய மாணிக்கப் பெருமாளை வணங்கினார். அப்போது யாதவர் தம் சீடர்களுடன் வலமாக அவ்வழி வந்தார். அப்போது இளையாழ்வாரும் அவருடன் வந்தார்.

ஆளவந்தார், திருக்கச்சிநம்பியிடம் “இதில் இளையாழ்வார் யார்?” எனக் கேட்டார். அவர், “சிவந்து நெடுகி வலிய மேனியில் நீண்ட கைகளுடன் கூடியுள்ள இவர்தான்” என்று இளையாழ்வாரைக் காட்டினார்.

ஆளவந்தார் அவரைக் குளிர நோக்கி “எம் முதல்வன் இவன்” என அருள் பாலித்தார். பின்னர், தேவராசப் பெருமாள் சந்நிதி சென்று “இந்த இளையாழ்வானை நம் தரிசனம் (சமயம்) வளர்ப்பவராக ஆக்கி அடியேற்குத் தந்தருள வேண்டுமென்று சரண் புகுகின்றேன்” என்று முறையிட்டார்.

பின்னர் ஆளவந்தார் விடைபெற்றுத் திருவரங்கம் வந்தார்.



# சீதன வெள்ளாட்டி

பெரிய நம்பிகளின் மகள் அத்துழாய் எனும் பெயருடைய பெண் மணமாகி மாமியார் இல்லத்தில் இருந்தாள். அவள் மாமியாரிடம் ஒருநாள் தான் ஆற்றிலிருந்து நீர் கொண்டுவர வேலையாள் (துணை) வேண்டுமென்றாள். மாமியார் அதற்கு, “நீ உன் தகப்பனாரிடமிருந்து சீதன வெள்ளாட்டி (வேலைக்காரி)யை

அழைத்து வந்து வைத்துக் கொள்" என்று கூறிவிட்டாள். இவ்வாறு கூறியதை அத்துழாய் தன் தந்தை பெரியநம்பியிடம் தெரிவித்த போது அவர் "உன் அண்ணன் எம்பெருமானிடம் போய்க் கேள்" என அனுப்பிவிட்டார்.

எம்பெருமானாரிடம் துழாய் தெரிவிக்க அவர் முதலியாண்டானைத் துழாயின் மாமியார் வீடு சென்று வீட்டுப் பணிகளைச் செய்யப் பணித்தார். முதலியாண்டானும் அவ்வாறே வீட்டுப் பணியாளாய்ப் பணி செய்தார். அவர் பெருமை காட்டாது வேலையாளாய் இட்ட பணி செய்தார்.

ஒருநாள் அவ்வீட்டிற்கு வந்த சாத்திர விற்பன்னர்கள், சாத்திரங்களுக்குப் பொருள் விளக்கம் செய்து கொண்டு உரையாடிக் கொண்டிருந்தனர். ஆனால், அவர்கள் உள்ள பொருளை விட்டு வேறு பொருளைக் கூறிக் கொண்டு இருந்ததைப் பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்த முதலியாண்டான் கேட்டு, அவர்கள் கூறும் பொருள் விளக்கம் தவறு எனச் சரியான பொருள் விளக்கம் அளித்தார். பணியாளனுக்கு என்ன தெரியும் என்ற எண்ணம் அவர்களுக்கு ஆதலால் இழிவாயுரைத்தனர். அதைப் பொருட்படுத்தாமல் முன்பின் வாக்கியங்களைக் கூறி, அவர்கள் கூறிய கூற்று பொருந்தவில்லை என அவர் எடுத்துக் காட்டி உண்மைப் பொருளைக் கூறினார்.

அதன்பின் தாம் யார் என்று கூற அவர்கள் அவரை இப்போதே எம்பெருமானாரிடம் எழுந்தருள வேண்டும். என்றபோது, ஆசாரியார் கட்டளையின்றிப் போகமுடியாது, என்று பதில் கூறினார்.

உடனே அவ்வீட்டார் எம்பெருமானாரிடம் சென்று முறையிட்டபோது, எம்பெருமான் "நீங்கள் சீதனவெள்ளாட்டி வேண்டுமென்றீர். துறவியான என்னிடம் யார் இருப்பார்கள்? அதனால் தான் அவரை அனுப்பினேன். வேண்டாமென்றால் திருப்பியனுப்புங்கள் என்று கூற முதலியாண்டானைத் திருப்பி அனுப்பினர். முதலியாண்டான் தம் குரு மீது கொண்ட பக்திக்கு எடுத்துக் காட்டாகவும் இந்நிகழ்ச்சி அமைந்தது.



## பெருமாள் அருளிய ஆறு சொற்கள்

திருக்கச்சி நம்பிகள் தேவராசப் பெருமாளின் திருச்சன்னிதியில் பணியாற்றி வந்தவர் என்பதோடு பரம்பொருளின் பரம அன்பர். பெருமாள் அர்ச்சா (அதாவது கற்சிலை, செப்புச்சிலை) வடிவத்தில் இருந்தபோதிலும் இவருடன் நேருக்கு நேர் உரையாடினார் என்பது அனைவரும் அக்காலத்து அறிந்த ஒன்று. இராமானுசர் அந்தத் திருக்கச்சி நம்பிகளைச் சந்தித்தார். பெருமாளிடம் எதிர்காலத்திற்குரிய வழி யாது? என்று கேட்டுத் தமக்கு வழிகாட்ட வேண்டும் என அவரிடம் வேண்டினார்.

நம்பிகளும் அவ்வாறே பெருமாளிடம் கேட்கப் பெருமாள், நம்பிகள் வாயிலாக இராமானுசருக்கு ஆறு சொற்கள் அருளினார்.

அவை,

*'பரத்வமேநாம்; வேதமே தரிசனம்;*
*உபாயமும் பிருபத்தியே; அந்திமஸ்மிருதியும்*
*வேண்டா; சரீரத்தின் வழியே மோட்சம்;*
*பெரிய நம்பி திருவடிகளிலே ஆச்ரயிப்பது'*

என்பனவாகும்.

பெரிய நம்பியை ஆசானாகக் கொண்டு விசிட்டாத்து வைதத்தை நிலை நாட்டும் பொருட்டு இராமானுசர் திருவரங்கம் சென்றார். பெருமாளே, தம் பேரருளாளே இராமானுசர் வாழ்விற்கு அளித்த திருப்புமுனை இது.



## மனிதகானமா? தேவகானமா?

இராசேந்திர சோழன் அவையில் இரண்டு தேவதாசிகள் 'மனிதகானம் சிறந்ததா? தேவ கானம் சிறந்ததா?' என விவாதித்தனர். தேவகானம் எப்படி இருக்கும் என்பது தெரியாததால் மனிதகானம் சிறப்பிக்கப்பட்டது. வீரநாராயணபுரம் வந்து தேவகானம் பாடப் பாடியவரை நாதமுனிகள் கொண்டாடினார்.

நாதமுனிகள் தேவகானம் அறிந்தவர் ஆதலால் அதனைக் கொண்டாடினார் என்பதை அறிந்த அரசன் அவரை அழைத்து 100 தாளங்களை ஒரே சமயத்தில் தட்டச் செய்தான்.

100 தாளங்களும் இசைக்கப் பெற்றன. ஒரே சமயத்தில்

100 தாளங்களின் சப்தத்தின் எடையைச் சரியாகச் சொன்னார் நாதமுனிகள்.

அரசன் அவருடைய இசையை அளக்கும் திறன் கண்டு வியந்து பாராட்டி அவருக்கு வெகுமதிகள் அளிக்க முன் வந்தார். அரசரிடம் வெகுமதிகள் வேண்டாம் என நாதமுனிகள் மறுத்துவிட்டார். நாதமுனிகளின் இசைப் பெருமை, இசையறிவு இந்நிகழ்ச்சி வாயிலாக வெளிப்பட்டது.



# பட்டர் பிரான் கோதை

கருடாழ்வார் திருவல்லிப்புத்தூரில் பட்டர்பிரானாக அவதரித்தார். அவருடைய திருமகள் ஆண்டாளாகத் திருமகள் அவதரித்தாள். மதுரையை ஆண்ட வல்லபன் எனும் மன்னர் சமயப் பற்றுடையவராய்ப் பல சமயங்களைப் பற்றி ஆராய்ந்து வந்தார்.

அரசன் சமய ஞானிகளிடம் எது உண்மையில் மோட்சம் தரத்தக்கது என வினவினான். இவ்வினாவிற்குப் பலரும் பலவிதமாய்ப் பதில் கூறினர். எனவே, அனைத்துச் சமயப் பிரிவினரையும் அழைத்து மோட்சம் தரத்தக்க வழி எது என்று முடிவு செய்யும் போட்டியொன்று வைத்தான். அனைத்துச் சமயப் பிரிவினரையும் வாதிடச் சொல்லி மந்திரத்தால் செய்யப்பட்ட பொற்கிழியொன்றைக் கட்டுவித்தார்.

யார் தம் மதம் சிறந்தது என்று மெய்ப்பிக்கிறாரோ அப்போது பொற்கிழி தானே கீழே விழ வேண்டும் என ஏற்பாடு செய்தார். பலரும் வந்து வாதிட்டுத் தங்கள் சமயநெறியே மோட்சமருளுவது எனக் கூறிப் பார்த்தனர்.

விட்ணுசித்தரான பட்டர்பிரானைப் பெருமாள் சென்று வாதிடச் சொன்னார். அவரும் அவ்வாறே சென்று மோட்சத்தைப் பரதத்துவத்தைக் கொடுக்க வல்லது சிரீவைணவமே என்று மெய்ப்பித்தார். மேலே கட்டப்பட்ட பொற்கிழிதானே அவிழ்ந்து வீழ்ந்தது. பாண்டிய மன்னர் மகிழ்ந்து அவருக்குப் பட்டர் பிரான் என்ற பட்டத்தை அளித்தார். இப்பாடல் இதனைக் கூறி மெய்ப்பிக்கும்.

*"பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான்*
*வந்தாரென்று சண்டிய சங்கம் எடுத்தூத*
*வேண்டிய வேதங்கள் ஓதிவிரைந்து கிழி அறுத்தான்*
*பாதங்கள் யாமுடைய பற்று."*



## திருமாலையாண்டானும், எம்பெருமானாரும்

வைணவ சமயாசிரியரில் ஒருவரான ஆளவந்தாரின் சீடர் திருக்கோட்டியூர் நம்பி திருவரங்கம் எழுந்தருளி, ஆளவந்தாரின் மற்றொரு சீடர் திருமாலையாண்டானை அழைத்துக் கொண்டு எம்பெருமானார் இராமானுசரின் மடத்திற்கு வருகை புரிந்தார். நம்பியை எம்பெருமானார் வணங்கினார். நம்பி அவரிடம், திருமாலை யாண்டானிடத்துத் திருவாய் மொழிக்குப் பொருள் விளக்கம் கேட்கப் பணித்துவிட்டுத் திருக்கோட்டியூர் சென்றார்.

திருவாய் மொழிக்குத் திருமாலையாண்டான் பொருள் விளக்கம் அளித்து வரலானார். எம்பெருமானார் அதனை அக்கறையுடன் கேட்டு வந்தார். இடையிடையே திருமாலையாண்டான் ஆளவந்தார் சொல்லி வைத்த பொருளில் கூறாமல் வேறு பொருளைக் கூறினார். எம்பெருமானார் அதனை மறுத்துக் கூறவே திருமாலையாண்டான் திருவாய்மொழியைப் பொருள் விளக்கம் செய்வதை நிறுத்திவிட்டார்.

திருக்கோட்டியூரார் இச் செய்தி அறிந்து, திருமாலை யாண்டானிடம் திருவாய்மொழிப் பொருள் விளக்கம் நடை பெறுகிறதா? என வினவினார். எம்பெருமானார், ஆளவந்தார் அருளிச் செய்யாத பொருளைத் தம் விருப்பப்படி எடுத்துரைப்பதால் விளக்கம் அளிப்பதை நிறுத்திவிட்டதாகக் கூறினார். நம்பி அவரிடம், இராமானுசர் உம்மிடம் உரைத்தன, ஆளவந்தார் அருளி முன்னர் யாம் கேட்டதுண்டு என்று கூறி, திருவாய்மொழியை விட்ட இடத்திலிருந்து முடிக்க அருளினார். திருமாலை யாண்டானிடமும், "நீர் மேல் விழுந்தேனும் அப்பிரபந்தத்தை முடிக்க வேணும்" என்று கூறிவிட்டு நம்பிகள் திருக்கோட்டியூர் திரும்பினார்.

திருமாலையாண்டானும் தொடர்ந்தார். இருப்பினும் இராமானுசர் "ஆளவந்தார், இப்படிப் பொருள் விளக்கம் தாரார்" என்று கூறினார்.

திருமாலையாண்டான் "நீர் ஆளவந்தாரை ஒருநாளாவது நேரே காணாமல் 'இப்படி அருளிச் செய்யமாட்டார், என்று எப்படிச் சொல்கிறீர்' என்று கேட்டபோது, எம்பெருமானார் பதிலுரையாக "நான் ஆளவந்தாருக்கு ஏகலைவன்" என்றார். எம் பெருமானாரைத் திருமாலையாண்டான் வலம் வந்து வணங்கிய தோடல்லாமல், தம் மகன் சுந்தரத்தோளுடையானை எம் பெருமானாரின் சீடராக்கினார்.



# அருளாளப் பெருமான் எம்பெருமானார்

யஜ்ஞமூர்த்தி எனும் அறிஞர் அத்வைத சமயப் பிரிவினர். அவர் கங்கைக் கரையிலுள்ள அறிஞர்களை வென்று, இராமானுசருடன் திருவரங்கத்தில் சமய வாது புரிய உறுதி பூண்டார். எம்பெருமானாரைத் தம்முடன் வாதிட அழைத்தபோது அவரும் இசைந்தார். யஜ்ஞமூர்த்தியிடம் "நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்று வினவினார்.

யஜ்ஞமூர்த்தி, தாம் தோற்றால் எம்பெருமானுடைய, காலணிகளைச் சுமப்பதாகவும், தம் பெயரை மாற்றி எம்பெருமானார் பெயரை ஏற்றுக் கொள்வதோடு, இராமானுசரின் சமயத்திற்கு மாறுவதாகவும் உறுதி அளித்தார்.

இராமனுசரிடம், "நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்று அவர் கேட்க, இராமானுசர் "நான் தோற்பேனாகில் என்னுடைய நூல்களை நான் தொடுவதில்லை. உமக்குத் தோற்றேன் என்பேன்" என்று பதில் உறுதி மொழி கூறினார்.

பதினாறு நாள்கள் வாதம் நடைபெற்றது. இறுதியாகப் பதினேழாவது நாள் யஜ்ஞமூர்த்தி வெற்றி பெறும் சூழல் ஏற்படவே, எம்பெருமானார் மனக்கவலையுற்றுப் பெருமாளை வணங்கிக் கண்ணயர்ந்தார்.

கனவில் வந்த பெருமான் "உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிய மாயாவாத கண்டனத்தைச் சொல்லி வெற்றி கொள்வாய்" என்றார். மறுநாள் ஆளவந்தாரின் மாயாவாத கண்டன யுக்திகளை மனதில் ஆய்ந்து கொண்டு எழுந்தருளினார். என்ன அற்புதம் நேர்ந்ததோ, யஜ்ஞமூர்த்தி ஆளவந்தாரிடம்

*"பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான்*
*வந்தாரென்று சண்டிய சங்கம் எடுத்தூத*
*வேண்டிய வேதங்கள் ஓதிவிரைந்து கிழி அறுத்தான்*
*பாதங்கள் யாமுடைய பற்று."*



## திருமாலையாண்டானும், எம்பெருமானாரும்

வைணவ சமயாசிரியரில் ஒருவரான ஆளவந்தாரின் சீடர் திருக்கோட்டியூர் நம்பி திருவரங்கம் எழுந்தருளி, ஆளவந்தாரின் மற்றொரு சீடர் திருமாலையாண்டானை அழைத்துக் கொண்டு எம்பெருமானார் இராமானுசரின் மடத்திற்கு வருகை புரிந்தார். நம்பியை எம்பெருமானார் வணங்கினார். நம்பி அவரிடம், திருமாலை யாண்டானிடத்துத் திருவாய் மொழிக்குப் பொருள் விளக்கம் கேட்கப் பணித்துவிட்டுத் திருக்கோட்டியூர் சென்றார்.

திருவாய் மொழிக்குத் திருமாலையாண்டான் பொருள் விளக்கம் அளித்து வரலானார். எம்பெருமானார் அதனை அக்கறையுடன் கேட்டு வந்தார். இடையிடையே திருமாலையாண்டான் ஆளவந்தார் சொல்லி வைத்த பொருளில் கூறாமல் வேறு பொருளைக் கூறினார். எம்பெருமானார் அதனை மறுத்துக் கூறவே திருமாலையாண்டான் திருவாய்மொழியைப் பொருள் விளக்கம் செய்வதை நிறுத்திவிட்டார்.

திருக்கோட்டியூரார் இச் செய்தி அறிந்து, திருமாலை யாண்டானிடம் திருவாய்மொழிப் பொருள் விளக்கம் நடை பெறுகிறதா? என வினவினார். எம்பெருமானார், ஆளவந்தார் அருளிச் செய்யாத பொருளைத் தம் விருப்பப்படி எடுத்துரைப்பதால் விளக்கம் அளிப்பதை நிறுத்திவிட்டதாகக் கூறினார். நம்பி அவரிடம், இராமானுசர் உம்மிடம் உரைத்தன, ஆளவந்தார் அருளி முன்னர் யாம் கேட்டதுண்டு என்று கூறி, திருவாய்மொழியை விட்ட இடத்திலிருந்து முடிக்க அருளினார். திருமாலை யாண்டானிடமும், "நீர் மேல் விழுந்தேனும் அப்பிரபந்தத்தை முடிக்க வேணும்" என்று கூறிவிட்டு நம்பிகள் திருக்கோட்டியூர் திரும்பினார்.

திருமாலையாண்டானும் தொடர்ந்தார். இருப்பினும் இராமானுசர் "ஆளவந்தார், இப்படிப் பொருள் விளக்கம் தாரார்" என்று கூறினார்.

திருமாலையாண்டான் “நீர் ஆளவந்தாரை ஒருநாளாவது நேரே காணாமல் ‘இப்படி அருளிச் செய்யமாட்டார், என்று எப்படிச் சொல்கிறீர்’ என்று கேட்டபோது, எம்பெருமானார் பதிலுரையாக “நான் ஆளவந்தாருக்கு ஏகலைவன்” என்றார். எம் பெருமானாரைத் திருமாலையாண்டான் வலம் வந்து வணங்கிய தோடல்லாமல், தம் மகன் சுந்தரத்தோளுடையானை எம் பெருமானாரின் சீடராக்கினார்.



# அருளாளப் பெருமான் எம்பெருமானார்

யஜ்ஞமூர்த்தி எனும் அறிஞர் அத்வைத சமயப் பிரிவினர். அவர் கங்கைக் கரையிலுள்ள அறிஞர்களை வென்று, இராமானுசருடன் திருவரங்கத்தில் சமய வாது புரிய உறுதி பூண்டார். எம்பெருமானாரைத் தம்முடன் வாதிட அழைத்தபோது அவரும் இசைந்தார். யஜ்ஞமூர்த்தியிடம் “நீர் தோற்றால் என்ன செய்வீர்?” என்று வினவினார்.

யஜ்ஞமூர்த்தி, தாம் தோற்றால் எம்பெருமானுடைய, காலணிகளைச் சுமப்பதாகவும், தம் பெயரை மாற்றி எம்பெருமானார் பெயரை ஏற்றுக் கொள்வதோடு, இராமானுசரின் சமயத்திற்கு மாறுவதாகவும் உறுதி அளித்தார்.

இராமனுசரிடம், “நீர் தோற்றால் என்ன செய்வீர்?” என்று அவர் கேட்க, இராமானுசர் “நான் தோற்பேனாகில் என்னுடைய நூல்களை நான் தொடுவதில்லை. உமக்குத் தோற்றேன் என்பேன்” என்று பதில் உறுதி மொழி கூறினார்.

பதினாறு நாள்கள் வாதம் நடைபெற்றது. இறுதியாகப் பதினேழாவது நாள் யஜ்ஞமூர்த்தி வெற்றி பெறும் சூழல் ஏற்படவே, எம்பெருமானார் மனக்கவலையுற்றுப் பெருமாளை வணங்கிக் கண்ணயர்ந்தார்.

கனவில் வந்த பெருமான் “உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிய மாயாவாத கண்டனத்தைச் சொல்லி வெற்றி கொள்வாய்” என்றார். மறுநாள் ஆளவந்தாரின் மாயாவாத கண்டன யுக்திகளை மனதில் ஆய்ந்து கொண்டு எழுந்தருளினார். என்ன அற்புதம் நேர்ந்ததோ, யஜ்ஞமூர்த்தி ஆளவந்தாரிடம்

தோற்றேன் எனத் தொழுது வணங்கினார். அவருக்குப் பரப்பிரம்ம விளக்கம் அருளினார். அத்வைதத்தின் சிறுமை நிலையை எடுத்துக் காட்டினார். வழக்கமாக அத்வைதத்துறவிகள் கையிலிருக்கும், தம் ஏகதண்டத்தை யஜ்ஞமூர்த்தி தம் கையிலிருந்து முறித்து எறிந்தார்.

திரிதண்டம் காவி அணிந்து தம் பெயரை எம் பெருமானார் என்னும் பெயராகவும், பேரருளாளர் செய்த உதவிக்கு நினைவு கூர்வதாக “அருளாளப் பெருமான்’ எனும் பெயரை ஒன்று சேர்ந்து அருளாளப் பெருமான் எம் பெருமானார். என்று திருநாமம் சூட்டினார். பேரருளாளர் பெயர் தேவராசன் என்பதாலும் தேவராச முனி என்ற பெயரும் கொண்டார்.



## இராமானுசருக்கு இட்ட நஞ்சு

எம்பெருமானார் இராமானுசர் திருவரங்கன் ஆலயச் செல்வத்தைக் கண்காணித்து வந்தார். அப்போது அதில் தவறு செய்த கோயிற் பணியாளர்களைத் தண்டித்தார். அவ்வாறு தண்டிக்கப் பட்ட வர்களில் ஒருவரான பார்ப்பனன் ஒருவன் இராமானுசரை நஞ்சிட்டுக் கொல்ல முடிவு செய்தான்.

எம்பெருமானார் தினமும் ஏழு வீடுகளில் பிச்சைபெற்று உணவு உண்டு வந்தார் எனவே, அவரைக் கொல்ல நினைத்த பார்ப்பனன் தன் மனைவியிடம், அவர் பிச்சைக்கு வருகையில் உணவில் நஞ்சிட்டுப் பிச்சை போடும்போது இடும்படி வற்புறுத்தினார். முதலில் மறுத்த மனைவி இறுதியில் கணவன் கட்டளைக்கு வேறுவழியின்றிப் பணிந்தாலும் நஞ்சிட்ட உணவை இட்டுவிட்டுக் கணவனுக்குத் தெரியாமல், குறிப்பால் அதனை உண்ண வேண்டாமென எம்பெருமானாரைக் கும்பிட்டு உணர்த்தினாள். நஞ்சிட்ட உணவை உண்ணாது அதனை எம்பெருமானார் ஆற்றில் கரைத்துவிட்டு அதுமுதல் பிச்சை புகாது பட்டினி கிடந்தார்.

இதனையறிந்த திருக்கோட்டியூர் நம்பி எம்பெருமாளைக் காணத் திருவரங்கம் வந்தார். வழியில் காவிரி மணலில் தம் குருவான நம்பியைத் தரிசித்த எம்பெருமானார் சூடேறிக் கிடந்த மணலில் அவர் பாதங்களைப் பணிந்து கிடந்தார்.

சீடரான எம்பெருமானாரை எழும்படிச் சொல்லாது நெடுநேரம்

நம்பி வாளாவிருந்தார். அப்போது எம்பெருமானாரின் சீடரான கிடாம்பியாச்சான் என்பவர் எம்பெருமானாரை "கருமுகைப்பூவைக் கடும் வெயிலில் பொசுடுவார்கள் உண்டோ?" எனக் கூறித் தம் மேலே கிடத்திக் கொண்டார்.

நம்பிகளும் "உம்மைத் தேடுவதற்காகத்தான் நாமும் இப்படிச் செய்தோம்" எனக் கூறி இருவரையும் வாரி எடுத்துக் கிடாம்பியாச்சானை எம்பெருமானாருக்கு உணவு சமைத்துப் பரிமாறும் பணியளித்தார். எம்பெருமானாரையும் 'இனிப் பிச்சைக்குச் செல்ல வேண்டாம்' என்றார்.



# லட்சுமி அம்மாள் என்னும் தியாக உரு

இராமானுசர் தம் பயணத்தில் பருத்திக் கொல்லை என்ற எண்ணாயிரம் என்னும் ஊருக்கு வந்து சேர்ந்தார். அவ்வூரில் வாழ்ந்த யஜ்ஞேசர் வசதி படைத்தவர். வரதாசாரியர் ஏழை. யஜ்ஞேசரின் இல்லத்தில் தங்குவதாகச் செய்தி சொல்லி அனுப்பினார். இராமானுசரின் வரவேற்புக்கு வேண்டியவற்றைச் செய்வதில் யஜ்ஞேசர் மும்முரமாக இருந்தாரேயன்றி, செய்தி கொண்டு வந்த இரண்டு சீடர்களின் உணவளிக்கவோ களைப்பைப் போக்கவோ, கவனிக்கவோ இல்லை. இதைக் கண்டு வருந்திய அவர்கள் இராமானுசரிடம் நடந்ததைத் தெரிவித்தனர்.

இதனால் ஏழையான வரதாசாரியர் இல்லத்திற்கு விருந்தினராகச் செல்ல இராமானுசர் முடிவு செய்தார். இத் தகவலை முன்னதாக வரதாசாரியருக்குத் தெரிவிக்கவில்லை. ஏழையான அவர் பிச்சை பெற்றுப் பரமனை வழிபட்டு உண்பவர். அவருடைய மனைவி பெயர் லட்சுமி என்பது ஆகும். அவர் வீட்டுக் கொல்லையில் நிறையப்பருத்தி இருந்ததால் பருத்திக் கொல்லை இராமன் என்று அவரை அழைப்பார்.

பருத்திக் கொல்லை இராமன் இல்லத்திற்குச் சீடர்களுடன் இராமானுசர் விருந்தினராய் நுழைந்தபோது அவர் பிச்சைக்குப் போயிருந்தார். லட்சுமி அம்மையார் அப்பொழுதுதான் குளித்து, ஒரு கிழிந்த துண்டுடன் ஈரப்புடவையை உலர்த்திக் கொண்டிருந்தார். ஆசாரியரின் முன் வர இயலாத தன் நிலைமையைத் தெரிவிக்கக் கையைத் தட்டினாள். இராமானுசர் தம் தலையில் சுற்றும்

துணியை உள்ளே வீச அதை உடுக்கி வந்து வணங்கி, ஏழ்மை நிலையிலும் ஆசார்யருக்கும், சீடருக்கும் அமுது படைக்க எண்ணினாள். உள்ளே ஓர் அரிசி கூட இல்லை.

கற்பு எனும் சுதந்திரமான தர்மத்தைக் காட்டிலும், ஆசார்ய கைங்கர்யமாகிற பரம தர்மத்தைச் செய்வதுதான் சிறந்தது என்று துணிந்தாள். எனவே விருந்தினர்களை இளைப்பாறச் சொல்லிவிட்டு அவளது வீட்டிற்கு அருகில் இருந்த தம் அழகில் மயங்கிப் பலமுறை தூதுவிட்ட செட்டியார் வீட்டிற்குச் சென்றார்.

தனக்குள் ஒரு முடிவெடுத்தாள். எலும்பும், குருதியும் அழுக்கும் நிரம்பிய இந்த உடம்பை அதை விரும்பிய செட்டிக்குக் கொடுத்து நாம் ஏன் எம் ஆசாரியாருக்குத் தொண்டாற்றும் பேற்றைப் பெறலாகாது? திருமங்கை திருட்டுத் தொழில் புரிந்து தொண்டாற்றிய போது பரந்தாமன் 'எனக்காகச் செய்த பாவமும் புண்ணியமாகும், எனக்காகச் செய்யாத புண்ணியமும் பாவமாகும்' என்பதை

*'மன்னிமித்தம் க்ருதம் பாவமபி புண்யாயகல்பதே*
*மாம நாத்ருத்ய துக்ருதம் புண்யம் பாபாய கல்பதே*

என்று உரைக்கவில்லையா? எனவே செட்டியாரிடம் போய் உன் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன் என்று சொல்லி விருந்தினரை உபசரிக்க வேண்டியதைப் பெற்று வருவேன்'' என்று கூறிக் கொண்டாள். செட்டியார் வீட்டிற்குப் புறப்பட்டாள்.

புழக்கடை வழி சென்று, அவருடைய விருப்பத்தை நிறைவேற்றுவதாகவும், வீட்டுக்கு வந்து, அருள்புரிந்த ஆசாரியாருக்கும், சீடர்களுக்கும் விருந்து படைக்க வேண்டியவற்றை அனுப்பும்படி செட்டியாரிடம் சொல்ல அவரும் அவ்வாறே விருந்தினரை உபசரிக்கத் தேவையானவற்றை அனுப்பினார். லட்சுமி அம்மாள் அதைக் கொண்டு நல்ல விருந்து படைத்தார். வீட்டிற்கு வந்த வரதாசார்யர் தம் மனைவி விருந்திட்டது, வேண்டிய வனவற்றை எப்படிச் சேகரித்தாள் என்பதையெல்லாம் கேட்டுச் சினம் கொள்ளாது, மகிழ்ந்து தான் பாக்கியசாலி என்று மகிழ்ந்தார்.

அவளை இராமானுசரிடம் அழைத்துச் சென்று திருவடி பணிந்து ஒளிக்காமல் உண்மையை இராமானுசரிடம் நடந்ததைத் தெரிவித்தபோது அவரும் சீடர்களும் பெரு வியப்பு எய்தினார். இருவரும் பின் செட்டியார் இல்லம் சென்றனர். இராமானுசர்

அளித்த பிரசாதத்தைக் கொண்டு கொடுக்க லட்சுமி அம்மாள் உள்ளே சென்றார்.

கணவர் வெளியே நின்றார். பிரசாதத்தை உட்கொண்ட செட்டியார் இன்ப நாட்டம் முற்றிலும் துறந்து, லட்சுமி அம்மாளைத் தீண்ட எண்ணிய தம் தீய எண்ணத்தை மன்னிக்க வேண்டினார். குருவின் கமல பாதங்களைக் காட்டி அருள வேண்டினார். தம் பிழையுணர்ந்து நாச்சியார் திருவடிகளை வீழ்ந்து வணங்கினார். செட்டியார் இராமானுசரை வணங்கிச் சீடரானார். யஜ்ஞேசரிடம் அவருடைய பிழையை உணர்த்தினார்.



## திருச்சங்கணித்துறை என்ற பெயர்

ஆழ்வார் திருநகரி என்னும் திருத்தலம், திருச்சங்கணித்துறை என்னும் பெயர் பெற்ற வரலாறு இது.

வேடன் ஒருவன் விந்திய மலையில் ஆல மரத்தின் அடியில் எட்டுத் திக்கும் காவல் புரியும் காவலனாக ஆவதன் பொருட்டுத் தவம் மேற்கொண்டான். அவனிடம் நாரதர், அதைவிட மேலான நாராயணபதம் பெற வழி, காட்டுவதாகக் கூறினார். "சங்காகக் கடலில் பிறந்து தாமிரபரணி கடலில் கலக்கும் இடத்திலிருந்து ஒருகாத தூரம் உள்ள திருக்குருகூரில் ஏறி ஆதிநாதப் பெருமாளை 1000 ஆண்டுகள் சூழ வந்து அவன் அருள்வாய்க்கப் படுவாய்" என அவனிடம் வாழ்த்திச் சென்றார்.

இவ்வாறு, சங்கன் ஆயிரம் ஆண்டுகள் சூழ வந்தபோது சங்கனைத் திமிங்கலம் ஒன்று வந்து தடுத்தது. சங்கன் பொருட்டு மானிடன் ஒருவனைப் பெருமாள் தோற்றுவித்து அத் திமிங்கலத்தை விழுங்கச் செய்தார்.

சங்கன் வந்து ஆயிரம் ஆண்டுகள் கழியவே, சங்கனின் இடைவிடாத முயற்சியையும், பக்தி நெறியையும், தவத்தையும் கண்டு மகிழ்ந்த திருக்குருகூர்ப் பெருமாள் ஆதிநாதர் சங்கனுக்கும் அவன் உடனிருந்தவர்களுக்கும் கருடன் மேல் எழுந்தருளி அருள்பாலித்தார்.

இதனால் ஆழ்வார் திருநகரிக்குச் சங்கன் பெயரால் மற்றொரு பெயரும் வந்து சேர்ந்தது. 'திருச்சங்கணித்துறை' என்பதே ஆழ்வார் திருநகரியின் மற்றொரு பெயராய் அமைந்தது.



## பருத்திக் கொல்லை

பருத்திக் கொல்லை என்னும் ஊரில் சமணர்களும், வைணவர்களும் வாதிட்டனர். வாதிடுவதற்கு முன்னர் இருபிரிவினரும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். வாதில் தோற்றவர் கழுமரம் ஏறி உயிர்க் கொலை செய்து கொள்ளவேண்டும் எனும் உடன்பாடு இருபிரிவினருக்கும் இடையே நடைபெற்றது. இறுதியில் வாதில் சமணர் தோற்றனர். ஒப்பந்தத்தின்படி சமணர் தோற்றதால் கழுவேறவேண்டியவராயினர். எனவே, சமணர்களும் கழுவேறத் தாராகிவிட்டனர். கருணைக் கடலான உடைவர் அவர்களைக் கழு வேறுவதிலிருந்து விடுவித்து அத்தனை சமணர்களையும் அந்தணர்கள் ஆக்கினார். உடையவரின் இத்திருச் செயலின் விளைவால் எண்ணாயிரம் பேர் அன்று மறுவாழ்வு பெற்றனர்.

பருத்திக் கொல்லை என்னும் அவ்வூரும் எண்ணாயிரம் என்னும் பெயர் பெற்றது. அதன் பின்னர், இராமானுசர் எண்ணாயிரத்தில் அழகிய நரசிங்கப் பெருமாளுக்குக் கோயில் எழுப்பினார். பெருமாளுக்கு ஒரு கோவிலையும் ஆக்கிக் கொடுத்த உடையவரான இராமானுசருக்கும் பருத்திக் கொல்லையான எண்ணாயிரத்தில் கோவில் உள்ளது. நல்ல கருங்கல்லில் அதனை உருவாகியுள்ளனர். மழமழப்புடன் அது உலோகச் சிலை போல் உள்ளது.



## பெரிய திருமலை நம்பியின் படுக்கை

இராமானுசரின் தம்பி உறவான கோவிந்தர் பெரிய திருமலை நம்பிக்கு படுக்கையை உருவாக்கி அப்படுக்கையில் தாம் படுத்துக் கொண்டார். இதனால் வியப்பும் துயரமுமுற்ற இராமானுசர் இந்தச் செய்தியைப் பெரிய திருமலைநம்பிக்குத் தெரிவித்தார். நம்பி உடனே கோவிந்தரைக் கூப்பிட்டு, ''நீ என் படுக்கையில்

படுத்துக் கொள்கிறாயா? குருவின் படுக்கையில் படுத்துக் கொண்டவனுக்கு என்ன நேரும் என்பது தெரியுமா?'' என்று வினவினார்.

கோவிந்தர் அமைதியாக, ''தெரியும், குருவின் படுக்கையில் படுப்பவனுக்கு மீள முடியாத நரகமே கிடைக்கும்'' என்றார்.

''இதை அறிந்துமா இப்படி நடந்து கொள்கிறாய்'' என நம்பி கேட்டார்.

''தேவரீரின் படுக்கையில் அடியேன் படுப்பதற்குக் காரணம் அது தேவரீர்துயில் கொள்ள வசதியாக மெத்தென்று இருக்கிறதா? என்று பார்ப்பதுதான். அடியேன் நரகம் சென்றாலும், தேவரீருக்கும் சிறிது சுகமும் வசதியும் ஏற்பட்டால் அதுவே எனக்குச் சுவர்க்கம் கிடைத்தாற்போல'' என்றார் கோவிந்தன்.

கோவிந்தரின் இக் குரு பக்தியை கண்டு இராமானுசர் வியப்புற்றார். அவரிடம் மன்னிப்பு வேண்டினார்.



## வாளை உருவினார்

குலசேகராழ்வார் குலசேகரராய் விளங்கிய போது அரசப் பணியில் நாட்டமின்றி மாயோன் திருவிளையாடல் கதைகளைக் கேட்பதிலும், பாகவதர்களைப் புலவர்களை அன்புடன் வரவேற்று இராமாயணம், பாகவதம், பாரதம் கேட்பதிலும் ஆர்வமுடைய வராயிருந்தார். இராமனுடைய வடிவழகு, வீரச்செயல், நற்பண்புகளை அரண்மனைப் புலவர் வாயிலாகக் கேட்டு மகிழ்வடைவார்.

அரசருடைய திருமாலன்புக்கு ஏற்றவாறு அரண்மனைப் புலவர் இராமாயணம் கூறி வந்தார். ஒருநாள் அவர் வெளியூர் செல்ல நேரிட்டபோது தன் மகனைச் சொற்பொழிவு செய்ய அனுப்பினார். அவருடைய மகன் ஆரண்ய காண்டத்தில் சீதை, இராமலட்சுமணன் வனவாசம் செய்கையில், பல்லாயிரக்கணக்கான அரக்கர்களை எதிர்த்து, இராமபிரான் தன்னந்தனியாகவே போரிடும் நிகழ்ச்சியைச் சொல்லி வந்தார்.

இராமன் தான் ஒருவனாகவே அசுரர்களை எதிர்த்துப் போரிடுவதைக் கேட்டுக் கலங்கிய குலசேகரர் மிகுந்த ஆத்திரம் அடைந்தார். தன் வாளை உருவியவாறு படைகளைத் திரட்டிக்

கொண்டு அரக்கர்களை எதிர்த்துப் போரிட்டு வரும்படி அமைச்சர்களுக்கு ஆணையிட்டார்.

அரசனின் இந்த மனநிலை அறிந்த அமைச்சர்கள் முதலில் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தனர்.

பின்னர் ஒருவாறு மனம்மாறி, "இராமபிரான் அரக்கர்களைப் பூண்டோடு அழித்து வெற்றிவாகை சூடித் திரும்பினார்" என்று குலசேகரரிடம் கூறி அவரைத் தேற்றினார்.



## சங்காழியளித்த பெருமாள்

திருப்பதி சீனிவாசப் பெருமாள் சீனிவாசர் சைவ பரமானவர் எனச் சைவர் வாதிட்டனர். வைணவர்களோ அவர் வைணவ பரமானவரே என்று வாதிட்டனர். திருப்பதிப் பகுதியை ஆண்டு வந்த நாராயணன வனத்து யாதவராயன் இச்சர்ச்சையைத் தீர்த்து வைக்கும்படி உடையவர் இராமானுசரை வேண்டினார். இராமானுசர் இதற்குக் கீழ்க் கண்ட தீர்வை அளித்தார்.

"திருமால், சிவன் ஆகியோருக்குரிய ஆயுதங்களைச் சன்னிதிக்குள் வைத்துப் பூட்டிவிடுவது எனவும், மறுநாள் எந்த ஆயுதங்களை அம்மூர்த்தி ஏற்றுக் கொள்கிறாரோ அந்த ஆயுதங்களுக்குரிய மூர்த்தியாக அவர் ஏற்கப்பட வேண்டும்" இது இராமானுசர் அளித்த சமரசத் தீர்வு.

அவ்வாறே செய்துவிட்டு மறுநாள் கதவைத் திறந்து பார்த்தபோது திருவேங்கடமுடையான் சங்கு, சக்கரங்களுடன் காட்சியளித்தார். அதுமுதல் திருப்பதிப் பெருமாளுக்கு அப்பனுக்குச் சங்காழியளித்த பெருமாள் எனத் திருநாமம் ஏற்பட்டது.

இராமானுசரும் திருவேங்கடமுடையானுக்குச் சங்கு சக்கரங்கள் அளித்ததனால் அவரை வேங்கடேசப் பெருமாளின் மாமனார் என்பர். ஆசாரியருள் இராமானுசர் ஒருவருக்குத்தான் மலை மீது சந்நிதியுண்டு. பெருமாளுக்குப் பத்மாவதி தேவியின் உருவமைந்த பொன் ஆரத்தை இராமானுசர் அணிவித்தார். நெற்றியில் பச்சைக் கற்பூரம் அணிவித்தார்.



# கண்ணழகுடைய பொன்னாச்சி

பிள்ளையுறங்காவல்லிதாசர் என்பவர் உறையூர் சோழ மன்னரின் மெய்க் காப்பாளர். இவருடைய மனைவி பெயர் பொன்னாச்சியார் என்பவள். அவள் மிகுந்த கண்ணழகு படைத்தவள். அவளுடைய கண்ணழகைப் பிரிய மனமில்லாமல் ஊழியத்துக்குப் போகும் போதும் அழைத்துப் போவார் வில்லிதாசர்.

எம்பெருமானார் ஒரு சமயம் காவிரியில் நண்பகலில் சீடர்களுடன் இருக்கையில், உறங்காவில்லி அக்கடும் வெயிலில் தம் மனைவிக்கு வெயில் வாட்டாது இருத்தற்பொருட்டுக் குடைபிடித்ததைக் கண்டார். மனைவி நடக்கும் பாதையில் துணிகளை இட்டு அதன்மேல் நடந்துவரச் செய்ததையும் கண்டார்.

இதனைக் கண்ட எம்பெருமானார் தம் சீடர்களை அனுப்பி அவரைத் தம்மிடம் அழைத்துவரச் சொன்னார். வந்த அவரிடம் “இதென்ன நீர் செய்வது?” என்று கேட்டார். அவளுடைய கண்ணழகில் மயங்கியே அவ்வாறு செய்வதாகக் கூறினார் பிள்ளையுறங்காவில்லி.

எம்பெருமானார், “நீர் காணும் அவளுடைய கண் அழிந்திடக்கூடியது. அழியாத கண்ணைக் கண்டால் என்ன செய்வீர்?” என்று கேட்க அதற்குத் தாம் அடிமைப்படத் தயார்' என்றார் உறங்காவில்லி.

அவரை எம்பெருமானார் அழைத்துப்போய் அரங்கத்துப் பெரியபெருமாளைச் சேவிக்கச் செய்தார். பெருமாள் தம் செவ்வரியோடிய நீண்ட பரந்த பெரிய கண்ணழகு காட்டிட, அவ்வழகில் ஆழ்ந்து மயங்கிய தாசர் அவரைப் பிரியாதவரானார். அதன்பின் எம்பெருமானாரின் சீடராகி வாழ்ந்தார். எம்பெருமானார் நீராடப்போகும் போது அவருடைய திருக்கரம்பற்றி எழுந்தருள்வார். இதனால் பிறவியினால் உண்டான அகங்காரம் தொலைவதாக எம்பெருமானார் குறிப்பிட்டார்.



# புழுதியை எண்ண முடியுமா?

பராசரபட்டர் என்னும் வைணவ சமய அடியார் வீதியில் விளையாடிக் கொண்டு இருந்தார். அப்போது 'சர்வஜ்ஞபட்டர்

வந்தார்' என எக்காளம் ஊதிக் கொண்டு வித்வான் ஒருவர் வந்தார்.

இதனைக் கேட்ட பட்டர் "உடையவர் ஆழ்வார், அருளாளப் பெருமானாம் எம் பெருமானார் முதலான பெரியோர்கள் இருக்கிற இடத்தில் யாரடா சர்வஜ்ஞபட்டன் என எக்காளம் ஊதுவது" என எண்ணினார்.

எனவே, சர்வஜ்ஞபட்டரின் ஆணவத்தைக் கர்வத்தை அடக்க பராசரபட்டர் வயதில் இளையவராயினும் முடிவு செய்தார். தெருப் புழுதியை இரு கைகளிலும் அள்ளிக் கொண்டு சர்வஜ்ஞரிடம் சென்று "நீர் சர்வஜ்ஞப்பட்டரல்லவா? இது எத்தனை? சொல்லும்" என்று புழுதியைக் காட்டிக் கேட்டார்.

இதற்குப் பதில் சொல்ல முடியாமல் வெட்கித் தலை குனிந்தார் சர்வஜ்ஞபட்டர்.

உடனே பராசரபட்டர் "ஒரு பிடி மண் என்று சொல்லத் தெரியவில்லை. சர்வஜ்ஞபட்டம் வேறு எதற்கு?" என்று நகைத்துக் கூறினார்.

இது கேட்டு அவ்வித்வான் பட்டரை இன்னாரென்று அறிந்து "பறப்பதின் குட்டி தவழுமோ?" என்று சொல்லித் தம் பல்லக்கில் ஏற்றித் திருமாளிகையில் விட்டுச் சென்றார்.



## எம்மைப் பாடும், எம்மைப் பாடும்

மணிமாடக்கோயில் என்று புகழ்பெற்ற ஊர் திருநாங்கூர். சீர்காழிக்கு அருகில் உள்ள ஊர். இவ்வூரில் தை அமாவாசைக்கு மறுநாள் ஒரே சமயத்தில் 11 பெருமாள்களும் கருடன்மேல் எழுந்தருளி திருமங்கையாழ்வாரால் பாடப்பெற்று, அத்தமிழ்ப் பாசுரங்களுக்குப் பதிலாகத், தங்களுக்கு விண்ணவர் சாத்தி வழங்கிய பூமாலைகளை அவருக்கு அணிவித்துப் பெருமைப் படுத்தினர்.

இது எப்படி நிகழ்ந்தது?

திருமங்கை மன்னர்பிரான் தமிழ்ப் பாசுரங்களின் மீது அடங்காத ஆவல் கொண்டு மணிமாடக்கோயில் பத்ரிநாராயணன் அரிமேய விண்ணகரம் குடமாடு கூத்தன், வைகுந்த விண்ணகரம் குடமாடு கூத்தன் வண்புருடோத்தமம் புருடோத்தமன், செம்பொன்

கோயில் செம்பொன் அரங்கம், திருவெள்ளக்குளம் அண்ணன் பெருமாள், திருத்தெற்றியம் பலம் செங்கண்மால் ரெங்கநாதன், திருத்தேவனார்த் தொகை, தெய்வநாயகன், திருக்காவளம் பாடி கோபாலன், திருமணிக்கூடம் வரதராசன் திருப்பார்த்தல் பள்ளி பார்த்தசாரதி தாமரையாள் கோவன் ஆகிய பதினோரு பெருமாள்களும் திருமங்கையைத் தேடி வந்து "எம்மைப்பாடும், எம்மைப்பாடும்" என்று விண்ணப்பித்தனராம்.

அவ்வாறு விண்ணப்பித்த நாள் தை அமாவாசைக்கு மறுநாள். மணி மாடக்கோயிலில் நடந்தது. திருமங்கை மேலே குறிப்பிட்ட பதினோரு பெருமாள்களையும் அன்று பாடிப் பரவசமாயினர்.

ஒவ்வோர் ஆண்டும் தை அமாவாசைக்கு மறுநாள் திருமங்கை ஆழ்வார் பதினோரு பெருமாள்களையும் ஒவ்வொருவராகத் தமிழ்ப் பாக்களால் பாடிப் பக்திப் பரவசத்துடன் வலம் வந்து வணங்கப் பெருமாள்கள் தங்கள் மலர்மாலைகளை அவருக்கு அளிப்பர்.

பெருமாள்கள் 'ஆழ்வாரே பூமாலை கிடைக்கும் ஆனால் உமது பாமாலை எளிதில் கிடைக்குமோ?' என்று உயர்வாகப் போற்றினதன் விளைவே இவ்விழா.



## கடன்பட்ட வேங்கடவன்

அள்ளிக் கொடுக்கும் அண்ணலான திருப்பதிப் பெருமாள் வேங்கடவன் பக்தர்களிடம் கடன் பெறுவது; காணிக்கை பெறுவது ஏன்?

பெருமாளுக்கும் பத்மாவதித் தாயாருக்கும் திருமணம் நடைபெற்றது. தெய்வத் திருமணங்களிலே மிகவும் சிறப்பாக, கோலாகலமாக நடைபெற்ற திருமணம் அது. அவ்வாறு மிகமிகச் சிறப்பாக, நடத்திட, அத்திருமணத்தை நடத்திய பெருமாளே கடன் பட்டுவிட்டார்.

கடனை அடைக்க வேண்டுமே? உலகில் மிகப் பெரும் பணம் படைத்தவனாம் குபேரனிடம் கடன் பெற்றார். கடன் பெரிய கடனாகையால் தீரவில்லை. தன் அடியார்களிடம் காணிக்கை பெற்றுக் கடனைத் திருப்பியளிக்க முடிவு செய்தார். அதற்காக

ஏழுமலையைத் தேர்ந்தெடுத்தார்.

அந்த இடத்தில் அப்போது குபேரன் வீற்றிருந்தார். அவரிடம் பெருமாள் பக்தர்களிடம் காணிக்கை பெற அந்த இடத்தைக் கொடுக்கும்படி கேட்க அவரும் அந்த இடத்தைக் கொடுத்துவிட்டுத் தெப்பக்குளம் அருகே அமர்ந்துவிட்டார்.

குபேரனிடம் பட்ட கடன் நம் பெருமாளுக்கு இன்றும் தீரவில்லை.



## துலுக்க நாச்சியார்

கள்ளழகப் பெருமாள் வைகை ஆற்றில் இறங்கி அருள் பாலிக்கும் நாள் இரவில் வண்டியூரில் உள்ள பெருமாள் கோயிலில் பத்தி உலாவுதல் நடைபெறும்.

பத்தி உலாவுதலின் காட்சிகள் கண் கொள்ளாக் காட்சிகள். வைர வைடூரியங்களின் மேல் மத்தாப்புகளின் வண்ண ஒளி பளபளக்க, பட்டாச்சாரியர்கள் தோளில் பெருமாளை ஏற்றி ஊஞ்சலாடுவது போல் இடமும், வலமும் அசைத்துத் தூக்கி வருவர். இதுதான் அன்று இரவு வண்டியூரில் நடைபெறும் நிகழ்ச்சி.

கள்ளழகருக்கும் திருவரங்கத்துப் பெருமாளுக்கு உள்ளது போல் ஒரு துலுக்க நாச்சியாரைக் கள்ளழகர்பால் காதல் கொண்ட இசுலாமியப் பெண்ணை தங்கள் மனத்தில் உருவாக்கி விட்டனர். அன்று இரவு அவர் துலுக்க நாச்சியாருடன் இருப்பதாகக் கற்பனை வேறு.

ஆனால், உண்மையில் அன்று இரவு பெருமாள் கள்ளழகர் காட்சி தருவது பத்தி உலாவுதல் கோலத்தில் மட்டும்தான். அது மட்டுமல்ல. அக்கோயிலில் துலுக்க நாச்சியார் என்ற திருநாமத்துடன் தேவி எவரும் இலர். பிராட்டியாருக்குப் பெயரும் அவ்வாறு இல்லை.

இதற்கிடையில் ஆண்டுதோறும் 'கள்ளழகரைக் கைது செய்.

அடல்டரி சட்டத்தின் கீழ் கைது செய்' என்று பகுத்தறிவு இயக்கத்தவரின் சுவரொட்டிகள் வேறு தென்படும்.

இசுலாமியர் பலரும் வண்டியூரில் அன்று கூடியிருந்து கள்ளழகரைக் காண்பர். உண்மை எப்படியோ? சமய ஒற்றுமைக்கு இப்படி ஒரு நம்பிக்கை வழி வகுக்கிறது.



## மலையளவு குனிந்த பெருமாள்

திருப்பதி பகுதியை ஆண்ட அரசர் தான தர்மம் நிறையச் செய்து வந்தார். அந்தணர்கள் அவரிடம் இருந்து ஏராளமான பொன் பொருள் பெற்றனர். அரசருக்குப் பணத்தட்டுப்பாடு ஏற்பட அந்தணர்களே இருக்கும் பணத்தை எல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டுப் பணம் ஏதும் இல்லை என்றனர்.

அதனால் அரசருக்குச் சினம் ஏற்பட்டது. அந்தணர் அனைவரையும் கொன்று பணத்தை எடுத்துக் கொண்டார். அதில் ஒரே ஒரு கர்ப்பிணிப் பெண் மட்டும் தப்பி ஓடிச் சென்று சேரிப் பகுதியில் வாழ்ந்தார். அந்தணர்கள் இல்லாமையால் திருப்பதியில் வழிபாடு நின்றது.

போர் முடிந்த பின் திருப்பதிக்கு வியாசராயர் என்னும் தவசீலர் வந்தார். அவரிடம் அரசர் தாம் செய்த தவறுக்கு மன்னிப்பு வேண்டினார்.

அவர் திருப்பதி கோவிலை திறக்கச் செய்தார். தப்பி ஓடிய பெண்ணுக்குப் பிறந்த மகனை அழைத்து வரச் செய்தார்.

அவனோ சிறுவன். அவனுக்குப் பூசை செய்யத் தெரியாது. மந்திரம் தெரியாவிடினும் வழிபாடு நிகழ்த்தச் சொன்னார். அவனிடம் தயிர் அமுது கொடுத்து அனுப்பினார்கள்.

அவன் பெருமாள் முன் அமர்ந்து "வாங்கு தாத்தா" (குனி தாத்தா) என்றான். அச்சிறுவனின் பக்திக்கும், ஆணைக்கும் கட்டுப்பாடு ஏழுமலையான் குனிந்து தயிர் அமுதைப் பெற்றுக் கொண்டார்.

இதனால் பெருமாளுக்கு ''மலை அளவு குனிந்த பெருமாள்' என்று பெயராயிற்று.



## அனந்தாழ்வார்

அனந்தாழ்வார் என்ற திருமால் அடியார் திருப்பதியில் இராமானுச ஏரி என்னும் ஓர் ஏரியை வெட்டி, அருகில் நந்தவனமும் அமைந்தார். தினமும் மலர்களைப் பறித்து, மாலையாகக் கட்டி, இராமானுச ஏரியில் நீராடிவிட்டு மலையேறித் திருவேங்கடவனை வணங்கி மாலை சூட்டுவார்.

ஒருநாள் மலர்களைக் கொய்யும்போது, ஒரு பாம்பு அவரைக் கடித்துவிட்டது. அவர் கவலை கொள்ளவில்லை. வழக்கம் போலப் பூமாலை கட்டி, பெருமாளைத் தரிசிக்கச் சென்றார்.

பெருமாள் ''என்ன அனந்தாழ்வாரே மருந்து போட்டுக் கொண்டு படுத்திருப்பீர் என்றல்லவா எண்ணினேன்'' என்றார்.

அனந்தாழ்வார் பெருமாளிடம், ''பெருமாளே கடித்த பாம்பு சாதாரணப் பாம்பாக இருந்தால் இராமானுச ஏரியில் குளித்துவிட்டு உம்மைத் திருப்பதியில் வழிபடுவது; கடித்தது பாம்பாக இருந்தால் குளிக்கின்ற வேலைகூட என் வேலையில்லை. மற்றவர்கள் என்னைக் குளிப்பாட்டிக் கொண்டிருப்பார்கள். உம்மை வைகுண்டத்திலேயே வந்து தரிசிப்பது" என்று பதில் கூறினார்.



## கூரத்தாழ்வான்

வத்சாங்கமிச்ரர் எனும் இயற்பெயர் கொண்டவர் கூரம் என்ற ஊரில் தை மாதம் அச்த நட்சத்திரத்தில் அவதரித்தவர் கூரத்தாழ்வார். இராமானுசரை விட வயதில் மூத்தவராயினும் அவரால் ஈர்க்கப்பட்டுப் பக்தி செலுத்தியவர்.

கூரத்தாழ்வாருக்குச் சீடனாக விளங்கியவர் நாலூரான். தன் ஆசாரியனை விட்டு விட்டுச் சைவப் பற்றுக் கொண்ட

கிருமிகாந்த என்னும் சோழ அரசனுடன் சேர்ந்தான். இராமானுசரின் புகழைப் பொறுக்க மாட்டாத மன்னன் நாலூரான் உதவியோடு அவரைத் தன் மாளிகைக்கு வரவழைத்துத் தீர்த்துக் கட்ட முடிவு செய்தான்.

தன் உயிரைக் காவு கொடுத்துத் தன் ஆசார்யரைக் காப்பாற்றக் கூரத்தாழ்வார் முடிவு செய்தார். இராமானுசர் போல் வேடம் அணிந்து சோழர் சபைக்குச் சென்றார். வாதம் நடைபெற்றது.

வாதில் கூரத்தாழ்வாரை வெல்ல முடியாத மன்னன் 'சீவாத்பரதரம் நாச்தி' என்று கையெழுத்திட்டு ஒப்புதல் அறிக்கை அளிக்கும்படி வற்புறுத்தினான். இதற்குப் பொருள் சிவத்தைவிட மேலானது இல்லை என்பதாகும். சிவம் என்பதற்கு 'எடை நிறுத்தும் அளவு' என்னும் பொருளும் உண்டு.

மனம், வாழ்வு, கல்வி, அறிவு, பலம், உடல் ஆன்மா ஆகிய அனைத்தும் தன் ஆசார்யர் இராமானுசரின் திருவடிகளில் சரணடையச் செய்த கூரத்தாழ்வார் 'துரோணம் அச்தி தத: பர்ம்' என்று எழுதிக் கையெழுத்திட்டார். 'த்ரோணம்' என்பது பெரிய அளவு. சிவம் என்ற அளவை விடத் 'த்ரோணம்' பெரியது என்பதன் பொருள்.

இராமானுசர் எனக் கூரத்தாழ்வாரைத் தவறாகக் கருதிய அரசன், இராமானுசர் தன் சகோதரியைப் பிசாசின் பிடியிலிருந்து காப்பாற்றியதால் கண்களை மட்டும் வாங்கிவிட ஆணையிட்டார். கூரத்தாழ்வார் எழுத்தாணி கொண்டு தானாகவே தன் கண்களைக் குருடாக்கிக் கொண்டார்.

கூரத்தாழ்வார் கண்ணிழந்த செய்தி கேட்ட இராமானுசர் வேதனையில் வெதும்பினார். இருவரும் திருவரங்கத்தில் சந்தித்தனர். காஞ்சிபுரம் அத்திமலைப் பெருமாள் சன்னிதியில் வழிபாடு செய்து கண் வேண்டித் துதி செய்ய இராமானுசர் நியமனம் செய்தார்.

கூரத்தாழ்வார் காஞ்சி சென்று 102 சுலோகங்கள் கொண்ட சிரீவரதராசச்தவம் என்ற துதியை அருளினார். எம்பெருமான் உடன் இருந்தார்.

பெருமாள் வழிபட்டுக் கண் பார்வை பெற்றார். கூரத்தாழ்வாரை இராமானுசர் தம் நூற்றந்தாதியில்

*மொழியைக் கடக்கும் பெரும் புகழான வஞ்சமுக்குறும்பால்*
*குழியைக் கடக்கும் கூரத்தாழ்வார் சரண் கூடிய பின்*
*பழியைக் கடத்தும் இராமானுசர் புகழ் பாடியில்லா*
*வழியைக் கடத்தல் எனக் கூறியதும் வருத்தமன்றோ*

என்று கூறினார்.

கூரத்தாழ்வார் பாடியவை சிரிச்தவம், சிரிவைகுண்ட ச்தவம், ஆதிமானுச் சத்வம், சிரிசுந்தர பாகுச்தவம், சிரிவரதராசச்தவம் ஆகியன. இவை பஞ்சத்தவங்கள் என்று புகழ் பெற்றன.



# திருப்பதி

கலியுகத்தின் தொடக்கத்தில் தான் பெருமாள் திருமலையில் எழுந்தருளி வேங்கடமலையில் முடிகொண்டு பக்தரட்சகனாக விளங்குகிறார். திருப்பதி என்றால் (திரு+பதி) லட்சுமிவாசம் செய்யும் இடமாகும். பெருமாள் திருப்பதியில் எழுந்தருளக் காரணம் தாயாரே ஆவார்.

ஒருமுறை பிருகு மகரிசி மூன்று உலோகங்களுக்கும் சென்று யார் சாந்தமிகுந்தவர் என்று சோதிக்க முயன்றார். பிரம்மலோகம், கைலாயம் முதலிய இடங்களுக்குச் சென்றார். அங்கு அவருக்கு வரவேற்புச் சரியாக இல்லை. அங்கு இருந்து வைகுண்டம் புகுந்தார்.

அங்குத் திருமால் ஆதிசேடன் மேல் அமைதியாகச் சயனித்துக் காட்சியளித்தார். அவர் தன்னை அலட்சியப்படுத்தினார் என்று எண்ணிய பிருகுமுனிவர் திருமாலின் இடது மார்பில் தன் கால் தீண்டச் செய்தார். திருமால் சிரித்துக் கொண்டே பிருகுவின் பாதத்தில் உள்ள கண்ணைத் தன் கையால் அமுக்கி மூடிவிட்டார். அவரும் திருமாலின் புனிதத் தீண்டலால் ஞானம் அடைந்து வைகுண்டபதியை வணங்கி மன்னிப்பு வேண்டி விடை பெற்றார்.

தான் வாசம் செய்யும் திருமாலின் இடப் பாகத்தைப் பிருகு முனி உதைத்ததால் மனம் நொந்தார் தேவி. கோபம் கொண்டு தன் பதி இதை அனுமதித்திருக்கக் கூடாது என்றும் தனக்கு ஏற்பட்ட இழிவைத் தன் கணவர் பொருட்படுத்திக் கொள்ளவில்லை என எண்ணிக் கொண்டு ஆத்திரமாக வைகுண்டத்தை விட்டுத் திருமகள் வெளியேறினார்.

வைகுண்டம் விட்டு அகன்ற திருமகள் பூலோகம் வந்து திருப்பதி அருகே உள்ள கொல்லாபுரம் வந்து அங்கு ஒரு தாமரையில் ஒரு பெண் குழந்தையாகத் தோன்றினாள். அங்கு வந்த ஆகாசராசா, அக்குழந்தையின் அழகில் மனதைப் பறி கொடுத்தார். அக்குழந்தைக்குப் பத்மாவதி அதாவது தாமரையில் உதித்தவள் எனும் பொருளில் பெயர் கொடுத்தார். பத்மாவதி பருவமெய்தி மணாளனை எதிர் நோக்கியிருந்த வேளையில் திருமால் நாரதர் வேண்டுகோளின்படி பூலோகம் வந்தார்.

ஆதிசேடனை முதலில் தாம் வரும்முன் அனுப்பினார். அவர் திருப்பதி வந்து மலையாகக் கிடந்தார். பகவானுக்குப் படுக்கை விரித்தார். திருமலை ஆதிசேடனின்மலை. அகோபிலம் அவர் உடல், சிரிசைலம் அவருடைய காலாகும். மூன்றும் சேர்ந்தது தான் ஆதிசேடன் உருவம்.

கருடபுராணத்தின் படி வைகுண்டத்தின் ஒருபாகம் தான் திருமலை. கருடாழ்வார் அதை எடுத்து வந்து திருப்பதியில் நிறுவினார். அது தங்கமலை ‘கனகாத்ரி’ என்று பெயர்.

திருமலை ஆதிசேடனின் ஏழுதலைகள் விருடபாத்ரி (விருட பாசுரனை வென்றது) நாராயணாத்ரி (நாராயண முனிவர் தவம் செய்தது) அரசனாத்திரி (ஆஞ்சநேயர் பிறந்தது) கருடாத்ரி (கருடன் தங்கியது) சேடாத்ரி (ஆதிசேடன் உருவம்) வெங்கடாத்ரி (பாவம் போக்கும் மலை) வேதாத்ரி (வேதரூபம்) என்னும் பெயர்கள் உண்டாயிற்று.

ஆதிசங்கரர் திருமலை வந்தபோது அங்கு ஒரு பக்தன் அவருக்கு எதிரில் எரிந்து போய், பிறகு நல்ல ஒளியோடு கூடிய உருவம் அடைந்தான். அவனிடம் “இது பாவத்தைப் போக்கும் மலை. வேங்கடம் என்றால் பாவத்தை நீக்குவது என்பது பொருள். இது வேங்கடமலை” என்று சொல்லி வாழ்த்தினார்.

நாராயணப் பெருமாள் இங்கு வந்தபோது அத்திருத்தலத்தில் ஏற்கெனவே ஆதிவராகப் பெருமான். பூதேவியுடன் வாசம் செய்து கொண்டிருந்தார். நாராயணன் அவரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அந்த மலையில் ஒரு புற்றில் தங்கினார்.

பிரம்மாவும், சிவபெருமானும் திருமாலின் லீலைகளைக் கண்டு ஆனந்திக்கத் திருமலை வந்தனர். இருவரும் பசு,

கன்று வடிவில் தினம் அங்குச் சென்று புற்றின் வழியாகப் புற்றினுள் பாலை அவர் பருகும் படி சொரிந்தனர்.

அவ்வழி வந்த ஆகாசராசர் பசுவைப் பார்த்து அதன் அழகில் மயங்கிப் பசு, கன்று இரண்டையும் தன் அரண்மனையில் வைத்துக் கொண்டான். அரசனின் பசுக்களுடன் இப்பசு மேயச் சென்று புற்றில் பால் சொரிந்தது. அரசன் அந்தப் புற்றைக் கலைக்க ஆணையிட்டான். உள்ளே திருமாலைக் கண்டான்.

பத்மாவதி இதைக் கேள்விப்பட்டு அங்கே வந்து புற்றிலிருந்த சீனிவாசனைக் கண்டு மையல் கொண்டார். பிரிந்தவர் கூடினர். கல்யாணபுரத்தில் மணவிழா நடைபெற்றது. திருப்பதியிலிருந்து 14 கல் தொலைவில் கல்யாண வெங்கடேசுவார் எழுந்தருளிக் காட்சியளிக்கிறார். வகுணமாலிகா எனும் பக்தை, முன் பிறவியில் யசோதை ஆவார். அங்குத் தவம் செய்தாள். அவரைத் தாயாராக ஏற்று அவர் மூலமாகவே சீனிவாசன் திருமணம் செய்து கொண்டார். யசோதைக்குக் கண்ணனின் மணக்கோலம் காணக் கிடைக்கவில்லையாகையால் இப்போது கிட்டியது.



# முருகப்பெருமானும் திருமாலும்

முருகப்பெருமாள் தாரகாசுர அசுரனை வதம் செய்த பின்பு தம் தந்தை சிவனிடம் தமக்கு ஏற்பட்ட பிரம்மஅத்தி தோசத்திற்கு விமோசனம் சொல்ல வேண்டினார். சிவபெருமான் திருமலையில் உள்ள புட்காணி தீர்த்தக் கரையில் இராம நாமத்தை உச்சரித்துத் தவமியற்றுவதே விமோசன வழி என்று காட்டினார். அதனால் தான் திருமலையில் முருகப்பெருமான் அமர்ந்து தவமியற்றிய புட்கர்ணி சுவாமிபுட்கர்ணி என்று பெயர் பெற்றது என்பர்.

முருகனுக்கு பாலன் என்று பெயர். திருமலையில் பெருமாளுக்குப் பாலாஜி என்று பெயர்.



# திருமாலைக் கண்டவர்கள்

திருப்பதி சீனிவாசப் பெருமாள் பல மகான்களுடன் நேரில் தோன்றி உறவாடியிருக்கிறார். ஆதிசங்கரர் திருப்பதியிலுள்ள மூர்த்தியை ஈசுவரனாகக் கண்டு வெங்கடேசுவரர் என்று அழைத்தார். திருமூலர் தாம் பாடிய பாட்டில்

*வெங்கடநாதனை வேதாந்தக் கூத்தனை*
*வேங்கடத்துள்ளே விளையாடும் நந்தியை*

என்று கூறினார்.

கபில தேவர்

*"வெங்கடத்து மேயானை மேவா உயிரெல்லாம்*
*வெங்கடத்து நோயால் விளித்து"*

என்கிறார்.

திருமாலுக்கு வில்வ அர்ச்சனை செய்யப்படுகிறது. ஏழுமலையான் வடிவத்தில் நாதாபரணம் மழு ஆகிய சிவச் சின்னங்களைக் காணலாம்.

1875இல் பெர்குசன் "It is a fair specimen worshipped as Siva" என்று கூறியுள்ளார். ஏ.எப். கோக்த என்பவர் 1880இல் வட ஆர்க்காடு மாவட்ட நூலில் 'Orginally no chank and chakram on the idol' என்று குறிப்பிட்டுள்ளார்.

பேயாழ்வார்

*"தாழ் சடையும் நீள் முடியும்*
*ஒண் மழுவும் சக்கரமும்*
*பொங்கரவும் பொன்னரனும் காணுமால்*
*சூழும் திரண்டரவி பாயும்*
*திருமலைமேல் எந்தைக்கு*
*ஈருருவம் ஒன்றாய்ச் சமைத்து"*

என்கிறார்

பொய்கையாழ்வார்

*"பொன்திருமேனி புரி சடையம் புண்ணிய*
*நின்றுலகம் தாய நெடுமாலும் என்றும்*
*இருவர் ஈரங்கத்தால் திரிவரேனும்*
*ஒருவருக்குள் ஒருவர் என்றுமுளன்"*

என்று அனுபவத்தைச் சொல்லுகிறார்

நம்மாழ்வார் திருமாலைப்பற்றி

*"ஆணுமல்லன் பெண்ணுமல்லன்*
*அலியுமல்லன் உளன் அல்லன்*
*இலன் அல்லன்"*

என்றார்.

விட்ணுசகசுர நாமத்தில் 'அநிர் தேசுயவுடடே நம" என்று வருகிறது. "யார் என்று சுட்டிக்காட்ட முடியாதவன்" என்பதுதான். சிவாய, பரமேசுவராய, ச்கந்தாய விட்ணுவேநம" என்று வருகிறது என்பர்.

அருணகிரிநாதர் திருப்புகழில்

*வேந்த குமார குக சேந்த மயூரா*
*வடவேங்கட மாமலையில் உறைவோனே*
*வேண்டிய போதடியர் வேண்டிய போதமது*
*வேண்ட வேறாததவு பெருமாளே"*

என்று குறிப்பிட்டார்.

முத்துச்சாமி தீட்சதர் 'சுப்ரமண்யேன ரட்சிதோகம்' எனும் கிருதியில் முருகனை வெங்கடேச நாம ரூபேண' என்று கூறுவது அவருக்கு முருகனாக அருளியதை இவ்வாறு காட்டுகிறது.

*கிருதயுகத்தில் ஸ்கந்தாய*
*திரேதாயுகத்தில் குமாராய*
*துவாபர யுகத்தில் சுப்ரமண்யாய*
*கலியுகத்தில் வெங்கடநாதாய*

இராமானுசர் திருப்பதி கோவில் நிருவாகத்தை மேற்கொண்டு சாத்திர விதிப்படி பூசை, வழிபாடு சீர்திருத்தம் மேற்கொண்டார். கோவிந்தா எனும் நாமத்தை முழங்கச் செய்தார்.



# குருவாயூர் ஸ்ரீமன் நாராயணமூர்த்தி

குருவாயூர் அப்பன் ஸ்ரீமன் நாராயணமூர்த்தியின் லீலைகளை நாரதபுராணத்தின் ஓர் உறுப்பான குருவாயூர் மகாத்மியம் விளக்குகிறது . ஜனமேஜயன் என்பவர் பரீட்சித் மகாராஜாவின் மகன். பரீட்சித் மகாராஜா நாகர் தலைவனால் கொலையுண்டார். இதற்குப் பழிவாங்க ஜனமேஜயன் ஒரு சர்ப்ப வேள்வி செய்தான். அதன் பயனாய் ஆயிரக்கணக்கான பாம்புகள் மடிந்தன. அவை ஜனமே ஜயனுக்குச் சாபமளித்ததால். அவனைத் தொழுநோய் பற்றியது. சிகிச்சை பல செய்தும் பலனில்லாததால் தற்கொலைக்கு அவன் முயன்றான்.

தாதரேய முனிவர் என்பவர் அரசன் ஜனமேஜயன் முன்தோன்றிக் குருவாயூர் சென்று வழிபடச் சொன்னார். குருவாயூர் இறைவன், இறைவனான நாராயணனுடைய அருள்வடிவினர். அவரே தம்மைத்தாமே வழிபட்டுக் கொண்ட வடிவம் அது என்று வரலாற்றைக் கூறினார்.

நாராயணர் தாம் வழிபட்ட அதனைப் பிரம்மாவிற்குப் பத்ம கல்பத்தின் தொடக்கத்தில் அளித்தார். பிரம்மா, வராக கல்பத்தின் தொடக்கத்தில் பிள்ளை வரம் வேண்டித்தம்மை நோக்கித் தவமிருந்த சுதபர் தம்பதிகளிடம் அதனைக் கொடுத்து வழிபடச் சொன்னார்.

அவ்வாறு வழிபட்டு வந்த அத்தம்பதிகளின்முன் திருமால் தோன்றினார். அவரிடம் அவர்கள் தங்களுக்குப் பிள்ளைச் செல்வம் வேண்டினர். மூன்று மறுபிறகளிலும் அவர்களுக்குத் தாமே மகனாகப் பிறப்பதாவும், மூன்று பிறவிகளிலும் அவ்விக்கிரகத்தை ஆராதிக்கும் பேறு பெறுவர் என்றும் திருமால் வாழ்த்தினார்.

அவ்வாறே முதல்பிறவியில் சுதபர் தம்பதியருக்குப் பிருசினி கர்ப்பன் என்னும் மகன் பிறந்தான். அடுத்த பிறவியில் இத்தம்பதியர் காச்யராகவும், அதிதியாகவும் ஆயினர். அவர்களுக்கு வாமனர் பிறந்தார். மூன்றாவது பிறவியில் அத்தம்பதியர் வசுதேவர் தேவகியாகவே, அவர்களுக்குக் கண்ணன் பிறந்தார். கண்ணன் ஒரு கோயில் கட்டி நாராயணரின் சிலையை வழிபட்டு வந்தார்,

கிருட்டிணாவதாரம் முடிந்து, பகவான் திருவைகுண்டம் திரும்பும் வேளையில் தம் சீடர் உத்தமரை அழைத்துத் தாம் பிரிந்து வைகுண்டம் செல்வதைச் சொன்னபோது, துயரத்தில் ஆழ்ந்த உத்தமர் "ஸ்ரீ கிருஷ்ண பகவான் இல்லாமல் கலியுகத்தில் பூலோக மாந்தர் இன்னல்களுக்கு ஆளாவார்களே, அதற்கு மாற்று இல்லையே" என்று மனம் கலங்கினார்.

கண்ணன் அவரைத்தேற்றி, இவ்விக்கிரகத்தில் தாம் வாழ்வதாகவும். விரைவில் துவாரகை வெள்ளத்தில் அழிந்து விடுமென்றும், அப்போது அதனைப் பாதுகாத்துத் தேவர்களின் குருவான பிருகசுபதியின் துணைக் கொண்டு தக்கதொரு தலத்தில் பிரதிட்டை செய்யும் படியும் கூறி மறைந்தார்.

கண்ணபிரான் குறிப்பிட்ட படியே எங்கும் வெள்ளம் பெருகிற்று. துவாரகைக்கு பிருகசுபதியும் அவர் சீடர் வாயுவும் விரைந்து அலைகளுக்கிடையே இருந்த பகவானின் சிலையை எடுத்துக் கொண்டு புறப்பட்டுப் போயினர். பரசுராமன் சிலையைத் தேடித்துவாரகைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தனர்.

துவாரகையில் கிருட்டிண பகவான் பூசித்து வந்த நாராயண மூர்த்தி சிலையைக் கொண்டு வந்து பிரதிட்டை செய்யும் படியும், அவ்வாறு செய்தால் வாதநோயால் பீடிக்கப்பட்டுச் சிகிச்சை பலனளிக்காதவர்களுக்கு இதனால் பயன் கிட்டும் என்றும் பரசுராமனிடம் நாரதர் கூறினார்.

பரசுராமன் குருவையும் வாயுவையும் சந்தித்தார். அப்போது அங்கு பரமசிவன், பார்வதியுடன் தங்கியிருந்தார், சிவபெருமான் அந்த இடம் திருமால் இருந்த இடம் என்று எடுத்துக் கூறி, ருத்ர கூபா கிணற்றிலிருந்து விக்ரகத்திற்கு அபிடேகம் செய்து குரு, வாயு இருவரிடமும் "நீங்கள் ஸ்ரீ கிருஷ்ணனை இங்குப் பிரதிட்டை செய்யுங்கள் உங்கள் பெயர்களால் இவ்வூர் குருவாயூர் என அழைக்கப்படும்" என்றார்.

ஜனமேஜயன் இந்த வரலாற்றைக் கேட்டுக் குருவாயூர் வந்து, திருக்குளத்தில் நீராடி, கண்ணபிரானை வழிபட்டு வந்தார். ஒருநாள் ஆலயத்தில் படுத்திருந்த போது, தன் உடல் மீது பகவானின் மலர்க்கரங்கள் படிவதை உணர்ந்தார். கண் விழித்தார். அற்புதம் ஒன்று நிகழ்ந்தது. தொழுநோய் மறைந்தது.

இவ்வாறு நோய் நீங்கிய ஜனமேஜயன் கண்ணீர் மல்க நாராயணமூர்த்தியை வேண்டியவாறே தன் அரசுக்குத் திரும்பினார்.



## பால பார்த்த சாரதி

சென்னை திருவல்லிக்கேணி பார்த்தசாரதியைப் போல மீசையுடன் இல்லாமல் பச்சிளம் பாலகனாகப் பார்த்தசாரதிப் பெருமான் குருவாயூருக்கு வடகிழக்கில் ஒரு கல் தொலைவில் திருக்கோயில் கொண்டிருக்கிறார்.

பார்த்தசாரதி இப்படிப் பச்சிளம் பாலகன் ஆனது எப்படி?

குருச்சேத்திரப் போர்க்களத்தில் கண்ணபிரான் அருச்சுனனுக்கு விசுவரூபம் காட்டியதை அறிந்த நாரதர் அந்த வடிவத்தைத் தாமும் காண விழைவதாகக் கண்ணனிடம் வேண்டினார்.

குருவாயூருக்குச் சென்று , இப்போது பார்த்தசாரதி கோயில் இருக்குமிடத்தில் அமர்ந்து தவமியற்றினால் காணலாம் என்று கண்ணன் கூற, நாரதரும் அவ்வாறு செய்ய நாரதருக்குப் பார்த்தசாரதியாகத் தரிசனம் அளித்தார். அங்கு விக்கிரகப் பிரதிட்டை செய்ய நாரதர் விழைந்தார்.

இதற்குரிய வேளை பல்லாண்டு கழித்து ஏற்பட்டது. குருவாயூரில் ஏகாதசியன்று ஆதிசங்கரருடன் வான் வெளியில் சென்று கொண்டிருந்த போது குருவாயூரப்பன் ஆலய சீவேலி நடைபெற்றதால் நாரதர் உடனே கீழே இறங்கி வழிபட வந்தார். ஆதிசங்கரர் வராமலே பின்தங்கிவிட்டவர், சீவேலி ஊர்வலத்தின் முன் மயக்க நிலையில் விழ வாத்திய முழக்கங்களும் சீவேலியும் நின்றன.

ஆலயத்தில் எழுந்தருளியுள்ள பகவதி , நாரதருக்கு முன்பு பார்த்தசாரதி தரிசனம் கொடுத்த தலத்திற்கு ஆதி சங்கரரை அழைத்துச் செல்லும் படி கூறினார். அங்குப் பார்த்த சாரதியின் தரிசனத்தைச் சங்கரரும் பெற்றார். பின்னர் நாரதர் கட்டளைப்படி சங்கரர் , கங்கை சென்று பார்த்தசாரதிப்பெருமாள் உருவத்தைப் பிரதிட்டை செய்து ஆலயம் எழுப்பிப் பூசை முறைகளை வகுத்தார்.



## நாராயண பட்டதிரியும் குருவாயூரப்பனும்

நாராயணீயம் என்னும் நூலை இயற்றியவர் நாராயண பட்டதிரி. அவர் இயற்றிய நாராயணீயம் நாராயண பட்டதிரியின் வாத நோயைக் குணப்படுத்தியது என்று கூறுவர். இதைப் பாராயணம் செய்தால் உடல் நோய்களிலிருந்து குணம் பெறலாம் என்பது அடியவர் நம்பிக்கை.

இந்நூலில் கிருஷ்ணாவதார லீலைகளை நெக்குருக, படித்தவர் மனம் உருக வருணித்துள்ளார். இவரை இராமாவதாரத்தில் லட்சுமணனாகவும், கிருட்டிணாவதாரத்தில் பலராமனாகவும் குறிப்பிடுகின்றனர். இவர் ஆதிசேடனே என்றும், ஒரு சமயம் ஓர் ஆலயத்தில் வேதம் ஓதுகையில் அவர்முகம் பாம்பினுடையது போல் தோற்றமளித்தது என்றும் கூறுவர்.

நாராயணீயத்தை நூறு தசங்களாகப் பிரித்து எழுதினார். பகவான் வியாசர் இயற்றிய ஸ்ரீமத் பாகவதத்தின் 18,000 சுலோகங்களாக மலர்ந்தன பட்டதிரியின் நாராயணீயத்தில்.

குருவாயூரப்பனே இவர் மூலம் தன் பெருமைகளைப் பாடிக் கொண்டார் என்றும் கூறுவர். பாகவதத்தில் உள்ள முதல் 9 ஸ்கந்தங்களில் வரும் செய்தியை நாராயணீயத்தில் முதல் 36 தசங்களாக எழுதியிருக்கிறார். கிருட்டிணாவதாரம் தசமஸ்கந்தத்தில் வருகிறது.

கிருட்டிண பகவானின் வடிவழகைக் கண்ணாரக் கண்டு, கண்டதை அப்படியே தலைமுதல் பாதம்வரை வருணித்து நாராயணீயத்தை முடித்திருக்கிறார்.

ஒவ்வோர் அடியையும் குருவாயூரப்பன் கவனமாகக் கேட்டுத் தலையை அசைத்து ஆமோதித்தாராம். ஒவ்வோர் நிகழ்ச்சியையும் கூறியபின் பட்டதிரி "குருவயூரப்பா இவ்வாறு தானா?" என்று கேட்பாராம். "ஆமாம், ஆமாம்" என்று குருவாயூரப்பன் ஆமோதித்த பின்னரே அடுத்த வரிக்குச் செல்வாராம்.

நரசிம்மவதாரத்தை எப்படி வருணிப்பது எனப் பட்டதிரி சிந்தித்துக் கொண்டிருந்தபோது வாதிமாடத்திலுள்ள தூண் ஒன்றிலிருந்து நரசிம்மமூர்த்தி தோன்றி அங்கு நடந்து காட்டவே, தாம் கண்ட தோற்றத்தை அப்படியே படம் பிடித்தது போல் எழுதி விட்டாராம.

இது போலவே ராமாவதாரத்தில் சீதை அளித்த சூடாமணியை அனுமார் இராமபிரானிடம் தரும் கட்டத்தில் "மௌளி ரத்னம் ததௌ" அதாவது "சூடாமணியைக் கொடுத்தார்" என எழுதிவிட்டார்.

யாருக்கு? ராமபிரானிடம் கொடுத்தார் என்பது தமக்குத் தெரியும் என்றாலும் ராமா எனப் போட்டால் சந்தம் சரியாக இராது ஆகையால் யோசித்தாராம் ; அப்போது , குருவாயூரப்பன் கையை நீட்டி "சூடாமணியை என்னிடம் தான் கொடுத்தார்" என்றாராம். உடனே பட்டதிரி "தே" அதாவது "உனக்கு" என்று எழுதிச் சுலோகத்தை முடித்தாராம்.

சீதையைக் காட்டுக்கு இராமன் அனுப்பும் கட்டத்தை எழுதும் போது, பட்டதிரியால் , இராமனின் நியாய மற்ற அச்செயலை ஏற்க இயலவில்லை. "நீ இப்படி ஒரு அநீதி இழைக்கலாமா?" என்று கூவி விடுகிறார். உடனே குருவாயூரப்பன் " நான் செய்ய வில்லை, இராமன்தான் செய்தான்" என்றாராம்.

கண்ணன் தயிர்க் குடங்களை உடைத்த லீலையைச் சொல்லும் போது, "மத்தினால் உடைத்தார்" என்று பட்டதிரி எழுதிவிடுகிறார். வியாசமுனிவரோ பாகவதத்தில் குழவிக்கல்லால் தயிர்க்குடங்களை உடைத்ததாக எழுதியிருக்கிறார். இந்த முரண்பாடு ஏற்பட்டது குறித்துப் பட்டதிரி வருத்த மடைந்த போது குருவாயூரப்பன் "பட்டதிரி, கவலைப்படாதே. நான் மத்தினாலும், குழவியினாலும் தயிர்ப்பானைகளை உடைத்தேன்"" என்று கூறினாராம்.

நாராயண பட்டதிரிக்கு நாராயணீயத்தை இயற்றிய பின்னர் கர்வம் அதிகரித்து விட்டதாம். குருவாயூரப்பன் அவருக்குக் கருணை வழியில் கர்வத்தை அடக்கி வழி காட்டினாராம். எப்படி?

பகவதியின் தலைமுதல் பாதம் வரையிலான வர்ணனையைப் பட்டதிரி தொடங்கினார். ஆனால் உலகமாதா, பகவதியின் பாத வர்ணனைக்கு மேல் ஒருவரி கூட எழுதி முடிக்க இயலவில்லை. திரும்பத் திரும்பப் பாதங்கள்ளயே வருணித்துக் கொண்டு இருந்திருக்கிறார்.

அப்போதுதான் அவருக்குத் தம் திறமை ஒன்றுமில்லை, எல்லாம் பகவத் கிருபையால் நடைபெறுவன எனும் பேரறிவைகிட்டியது. இந்த எண்ணம், ஞானம் பிறந்ததும் மளமளவென்று எழுதி முடித்தார்.

பட்டதிரி நாராயணீயத்தை "ஆயுள் ஆரோக்கிய சௌக்கியம்" என்று முடிக்கிறார். இவர் எழுதிய "ஸ்ரீ பாத சப்ததி" என்னும் நூல் முக்கோவை என்றும் திருத்தலத்துத் துர்க்கா தேவியின் ஸ்ரீ பாத வர்ணனை கான் என்றும், முக்கோவை தலத்தில் தான் அவரை விமானம் ஏ
வைகுண்டத்துக்கு அழைத்துச் சென்றது என்றும் கூறுவர்.



## திருவரங்கத்தில் இராமானுசர்

இராமானுசரின் குருவாக விளங்கியவர் ஆளவந்தார். அவர் இராமானுசர் திருமடத்துத் தலைவரானார். ஆளவந்தாரின் மாணவர் பெரியநம்பி. பெரிய நம்பியின் நண்பராக விளங்கியவர் மாறனேரி நம்பி என்பவர். அவர் மகளும் தம் வீட்டில் உணவு சமைத்து அவருக்கு வழங்கி வந்தனர்.

சில நாளில் மாறனேரி நம்பி இறந்த போது பெரிய நம்பி இறுதிச் சடங்குகள் செய்தபோது, திருவரங்கத்து அந்தணர்கள் அவரைச் சாதி விலக்கம் செய்ததுடன், அவருடைய வீட்டுக்கு யாரும் செல்லாதபடி, வீட்டைச் சுற்றி முள்வேலி அடைத்தார்கள்.

அப்பொழுது திருவரங்கத்தில் தேர்த்திருவிழா வந்தது. தேர் பெரிய நம்பியின் வீட்டருகே வந்த போது பெரிய நம்பியின் மகள் அந்துழாய் வேலியை விலக்கிக் கொண்டு வீதிக்கு வந்தவள், தன் தந்தையின் மரியாதையை ஏற்றுக்கொண்டுதான் தேர் செல்ல வேண்டும் எனத் தேரை நகரவிடாமல் தேர்முன் படுத்துக் கொண்டாள்.

செய்தி இராமானுசருக்கு எட்டியது. தேர் நின்ற இடத்துக்கு வந்து விசாரித்தார். சடாயுவிற்கு இராமர் இறுதிக்கடன் நிகழ்த்தியதையும் விதுரருக்குத் தர்மர் இறுதிக் கடன் செய்ததையும் எடுத்துக் கூறியதுடன், அவள் தன் தந்தை செய்தது சரியே என்பதைக் கூறியபோது அவளுக்குப் பிராமணர்களைப் பதில் சொல்ல இராமானுசர் கூறினார். அவர்கள் பதில் சொல்ல முடியாமல் தலை குனிந்து நின்றனர். அதன்பின் இராமானுசர் எல்லோரும் ஓர்குலமே என்று அறிவுரை கூறினார்.



## திருக்குருகூர் மாறன்

திருவழுதி நாட்டின் மரபிலே போர்க்கரி என்னும் மன்னவர் பெரும் புகழோடு விளங்கினார். அந்நாளில் நாகர் கோவில் வட்டாரத்தில் உள்ள திருவண்பரிகாரம் எனும் (திருப்பதிகாரம்) நகரில் வாழ்ந்த திருவாழ்மார்பனின் மகளான உடையநங்கை காரியார் என்பவரை மணந்து களிப்போடு வாழ்ந்தார்.

திருக்குறுங்குடியிலே இருவரும் வாழ்ந்தனர். அவர்களுக்குப் பல்லாண்டுகள் மகப்பேறு வாய்க்கவில்லை. அவ்வூரில் கோவில்

கொண்டுள்ள இறைவன் நம்பி என்னும் பெருமாளை நம்பினர். வணங்கிவரங்கிடந்து மகப்பேறு அருள் வேண்டினார். இறைவன் நம்பியின் அருள்கிடைத்தது.

வைகாசி விசாகநாளிலே முழுநிலா வெள்ளியன்று ஆண்மகவு ஒன்று பிறந்தது. குழந்தையோ அழவில்லை, கண்திறக்கவில்லை, கைகால் அசைக்க வில்லை. ஆனால் உயிரோடு இருந்தது. தாய்ப்பால் பருகவில்லை ஆனால் வாட்டமடையவில்லை, ஒளியுடன் விளங்கியது. உலக இயற்கைக்கு மாறாக உயிர்ப்புற்று விளங்கியதால் மாறன் எனவும் காலிமாறன் எனவும் பெயர் சூட்டினர். அவர்தான் திருக்குருகூர் மாறன் சடகோபர், பராங்குசர், வகுளாபரணர் என்றும் பெயர் பெற்றார்.



## திருக்குடந்தைச் சாரங்கபாணி

பிருகுமுனிவர் ஒரு சமயம் வைகுந்தத்திற்குப் பரந்தாமனைச் சேவிக்க வந்தார். ஏதோ காரணத்தால் பரந்தாமன் முனிவரைக் கவனியாது பாராமுகமாக இருந்து விட்டார்.

இதனால் சினம் கொண்ட முனிவர் பரந்தாமனின் திருமார்பில் எட்டி உதைத்து விட்டார். பரந்தாமனோ சிறிதும் கவலைப்படாது முனிவரின் திருப்பாதங்களைத் தொட்டு வணங்கினாராம்.

ஆனால் பரந்தாமனின் இச்செயல் எம்பெருமானின் திருமார்பில் உறையும் இலக்குமிக்குப் பிடிக்கவில்லை. சினங்கொள்கிறார். இதனால் பிணக்குற்று வைகுந்தத்தை விட்டுப் பூவுலகம் வருகின்றார் தேவி. வந்தவர் கொல்லாபுரம் என்னும் இடத்தில் தங்கி விடுகிறார்.

பெரிய பிராட்டியாரைத் தேடிக் கொண்டு பூவுலகம் வருகின்றார் பரந்தாமன். வந்தவர் பத்மாவதியைத் திருமணம் செய்து கொண்டு திருப்பதியில் சங்கு சக்கரதாரியாகச் சீனிவாசனாகத் தங்கியிருக்கிறார்.

இந்நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற போது இலக்குமிதேவிக்கு மேலும் சினம் பெருகிற்று. திருமாலை நேரில் கண்டு சண்டையிட வருகிறாள். திருப்பதி வந்து தேடுகிறாள். சீனிவாசனோ கும்பகோணம் வந்து அங்குக் குகையினுள் நுழைந்து கொண்டு விடுகிறார். இலக்குமி குடந்தைக்கும் தேடி வருகிறார். ஆனால் சீனிவாசன் அகப்படவில்லை.

குடந்தை நகரின் இயற்கை எழில் தாயாரின் மனத்தைக் கவர்கிறது. சினமும் தணிகிறது. இந்திருத்தலத்தில் (குடந்தையில்) எம்பெருமானுடன் இணைந்து வாழ எண்ணுகிறார்.

திருக்கோயிலருகில் திருக்குளத்தில் பொற்றாமரையில் கோமள வல்லியாகத் திருஅவதாரம் செய்கிறார். இறைவனை நோக்கித்தவம் செய்கிறார். பிருகுமுனிவர் ஹேமமுனிவராகப் பிறந்து, தந்தை நிலையில் கோமளவல்லியைப் பாதுகாக்கிறார். கோமளவல்லியை மணக்க வேண்டுகிறார்.

தந்தை நிலையிலிருந்த முனிவரின் வேண்டுகோளுக்கு இணங்கி இரதம் ஒன்றில் குடந்தைக்கு எழுந்தருளி, கோமளவல்லியை மணம் செய்து கொள்கிறார். சாரங்கபாணி எனும் பெயருடன் அரங்கநாதனைப் போலவே கிடந்த கோலத்தில் காட்சி தருகிறார்.



## கங்கையிற் புனிதம் ஆய காவிரி

இமயமலைச் சாரலில் கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய கன்னிகையர் விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது வானவீதியில் சென்ற காந்தருவன் இவர்கள் இருந்த திசைநோக்கித் தொழுது சென்றான்.

அவன் யாரைத்தொழுது வணங்கினான் என்பது குறித்து நீராடிய கன்னியர் தம்முள் பூசலிட்டனர். ஒவ்வொருவரும் தம்மையே அவன் தொழுதான் என்று வாதாடினர். மற்ற நதிக்கன்னியர் சலிப்புற்றுச் சென்று விட காவிரியும், கங்கையும் திருமாலிடம் சென்று தம் வழக்கினைத் தீர்க்குமாறு வேண்டினர்.

உடனே பெருமாள் புன்முறுவலுடன் கங்கையிடம் " நீ எவ்வகையில் உயர்ந்தவள்"? என்று வினவத்திருமால் திருவடியிலிருந்து தோன்றியதால் தான் உயர்ந்தவள் எனப் பதில் கூறினாள். அவர் அவன் கங்கையையே வணங்கியிருக்க வேண்டுமெனத் தீர்ப்பளித்தார்.

கோபம் கொண்ட காவிரி "கங்கையை விடப் புனிதமானவள்" என்னும் பெயர் பெற உறுதிபூண்டாள். தவமேற் கொண்டாள். திருமால் அவளுடைய தவத்தைப் பாராட்டி "நான் திருவரங்கத்தில் வந்து சயனித்துக் கொள்ள விருக்கிறேன். நீ கங்கைக்கும் மேற்பட்டவள் என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பாடுவார், என வரம் அளித்தாராம்.

திருமால் கூறியவாறு காவிரியிடையே நடுவில் தீவு தோன்றியது. அந்தத் தீவில் அரங்கனுடன் கூடிய விமானம் தோன்றியது. ஆற்றின் நடுவிலுள்ள இந்த அரங்கம் இயற்கை வளத்தாலும். இறையருளாலும் அரிய பொலிவுடன் திகழ்ந்தது. தொண்டரடி,

*"கங்கையிற் புனிதம் ஆய*
*காவிரி நடுவு பாட்டுப்*
*பொங்கு நீர் பரந்து பாயும்*
*பூம் பொழில் அரங்கம்"*

என்று பாராட்டுகின்றார்.



## *குடந்தையான கும்பகோணம் (குடமூக்கு)*

அமுதம், வேதங்கள், படைப்பின் வித்துக்கள் ஆகியவற்றை நான்முகன் ஒரு குடத்தில் சேர்த்து அக்குடத்தை மேருமலையின் உச்சியில் வைத்திருந்தார். பிரளயகாலத்தில் இக்குடத்தை வெள்ளம் அடித்துச் (சென்றது. அது மிதந்து தெற்கு நோக்கி வந்து குடமூக்கு எனும் கும்பகோணம் ஊரில் தங்கியது.

தேவர்களின் வேண்டுகோளின்படி சிவபிரான் அம்பினை எய்துத் திருக்குடத்தை உடைத்தார். குடத்திலிருந்த அமுதம் இரண்டு பிரிவாயிற்று. இரண்டு பொற்றாமரைக் குளங்களாக அமைந்து விட்டன. உடைந்த குடத்து ஓடுகளையும் அமிர்தத்தையும் சிவலிங்க மாக்கினார். கும்பத்தி லிருந்த பெருமான் கும்பேசர் என்ற பெயருடன் கோயில் கொண்டு விட்டார்.



## *திருவரங்கத்துக் கிளிமண்டப வரலாறு*

திருவரங்கத்திற்கு இராவணன் தம்பி விபீடணன் வந்தபோது அவன் கொண்டு வந்த அரங்க விமானத்தையும், அரங்கநாதனையும் காவிரி மணல் விழுங்கிவிட்டது .

தர்மவர்மன் என்னும் சோழ மன்னன் வேட்டைக்கு வந்த போது ஒரு கிளி அவன் காதில் அரங்க விமானமும்—அரங்கனும் புதையுண்டு கிடக்கும் இரகசியத்தைக் கூறியது.

அச்சோழமன்னன் காடு வெட்டி நிலம் திருத்தி அரங்க விமானத்தையும், அரங்கனையும் வெளிக் கொணர்ந்தான் என்பர்.

கோயில், கோபுரம், மண்டபம் முதலியன நிறுவி அரங்கனை எழுந்தருளச் செய்தான். கிளி செய்த உதவியின் பொருட்டுக்கிளி மண்டபம் ஒன்றைக் கட்டினான். தன் பெயரால் தர்மவர்மன் திருச்சுற்று ஒன்றை எழுப்பினான்.



## திருவல்லா ஸ்ரீ வல்லபர்

கேரள மாநிலத்துச் செங்கனூருக்கு வடக்கே ஏழுகல் தொலைவில் உள்ள திருவல்லா, திருமால்கோவில் திருமாலை ஸ்ரீ வல்லபர் என்று அழைக்கின்றனர்.

இந்த வல்லபர் துவாரகையில் இருந்து வந்தவர் என்று நம்புகின்றனர். துவாரகையில் கிருட்டிணருடைய நண்பரான சாத்யகிக்காகப் பிரதிட்டை செய்யப்பட்ட விக்கிரகம் இது என்று கூறுகின்றனர். பின் இது கருடனுக்கு அளிக்கப்பட்டதாம்.

ஆனால் கருடன் இந்த விக்கிரகத்தை நர்மதை நதியில் போட்டு விட்டார் எனவும், பல ஆண்டுகள் கழித்துக் கேரளத்தை ஆண்ட ஓர் அரசன் கனவில் வல்லபர் தோன்றித்தாம் இருக்கும் இடத்தைக் கூறவே, மன்னர் நர்மதை நதியிலிருந்து திருமாலை எடுத்து வரச் செய்து திருவல்லாவில் பிரதிட்டை செய்தார் எனவும் கூறுவர்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் துர்வாச முனிவர் பிரதிட்டை செய்ததாகவும் அவற்றை நைவேத்தியத்திற்குப் பயன்படுத்திய ஒரு வகையான வாழைப்பழமே இன்றும் பயன்படுகிறது. வேறு வகை வாழைப்பழங்களை அர்ச்சனைக்கு ஏற்பதில்லை. இதுமட்டுமல்ல இரவில் துர்வாசர் வாரம் ஒருமுறை வந்து பூசை செய்வதாகவும் நம்பப்படுகிறது. நள்ளிரவில் சங்கொலி, பூசை நடைபெறும் போன்ற அறிகுறிகள் தென்படுவதாகவும் கூறுகின்றனர்.



# மூன்று திருமேனிகள்

## தாம் உகந்த திருமேனி

திருப்பெரும்புதூர் ஆதிகேசவப்பெருமாள் கோயிலில் உள்ள இராமானுசர் திரு உருவத்திற்குத் "தாம் உகந்த திருமேனி" எனும் திருப்பெயர் உள்ளது.

இப்பெயர் ஏற்பட்ட வரலாறு இது.

இராமானுசர் பிறந்த திருவூர் திருப்பெரும்புதூர். இவர் பிறந்த ஊரில் அவருக்குச் சிலைவைக்க அடியவர்கள் விரும்பிச் சிற்பி ஒருவரைக் கொண்டு சிலை வடித்தனர்.

அதன் பின்னர் ஊர்ப் பெரியவர்கள் திருவரங்கம் சென்று, இராமானுசரைத் தரிசித்துச் சிலையின் கண் திறக்க அழைத்தனர். அவர்கள் தங்களுடன் அவர் திரு உருவை, திருமேனியை அவரிடம் காட்டிய போது அதனைக் கண்டு மகிழ்ந்தார். அவருக்கு வயது முதிர்ந்து விட்ட நிலையாகையால், திருவரங்கத்திலிருந்து, திருப்பெரும்புதூர் வர இயலாமையை தெரிவித்தார்.

இராமானுசர் அச்சிலையை அரவணைத்து ஆசீர்வதித்ததுடன், தம் தெய்வீக ஆற்றலையும் அச்சிலையினுள் செலுத்தினார். அச்சிலை இதனால் "தாம் உகந்த திருமேனி" எனப்பெயர் பெற்றது.

திருப்பெரும்புதூர் ஆதிகேசவப் பெருமாள் கோவிலில் தனிச் சந்நிதியில் அச்சிலை உள்ளது. அச்சந்நிதி "இராமானுசர் கோயில்" என்று பெயர் கொண்டுள்ளது.



## தமர் உகந்த திருமேனி

திருநாராயணபுரம் என்னும் மேல் கோட்டையில் இராமானுசரின் திரு உருவச்சிலை உள்ளது. இராமானுசருக்கு அவ்வூர் மக்கள் வைத்த சிலை இது அவருக்கு அவர்கள் சிலை அமைத்த போது 80 வயது முதிய வராக அவர் இருந்தார்.

இராமானுசர் சிலையைச் செய்தவர், இராமானுசர் திருநாராயணபுரத்

திருக்கோவிலை அடைந்த போது பணியாற்றியவராதலால் இராமானுசர் சிலையை மிக நன்றாக வடித்தெடுத்தார். இராமானுசர் கை கூப்பி எல்லோரிடமும் விடைபெறும் கோலத்தில் இத்திருஉரு, உள்ளது.

இச்சிலையை மக்கள் விரும்பி மகிழ்ந்து போற்றினர். மக்கள் விருப்பத்துடன் செய்த இச்சிலை "தமர் உகந்த திருமேனி" என்று பெயர் பெற்றது.



## தாமான திருமேனி

திருவரங்கத்து அரங்கநாதன் திருக்கோயிலில் உள்ள இராமானுசர் திரு உரு "தாமான திருமேனி" எனப்படுகிறது.

இராமானுசரின் சீடர்கள் அவருடைய அந்திமகாலத்தில் அவருக்கு உருவச் சிலை அமைக்க விரும்பினார்கள். அவரும் மனமுவந்து இசைவு கொடுத்தார். கல்லில் சிலை வடித்து முடியும் வரை அவர் உயிர் நிலைக்குமா? என்னும் நிலை. எனவே சுண்ணாம்பு கொண்டு மிக விரைவாகத் திரு உருவை அமைக்கத் தலைப்பட்டனர்.

பத்மாசனம் போட்டு இராமானுசர் அமர்ந்திருக்கும் கோலத்தில் அச்சிலை அமைந்தது . சிலை மீது இராமானுசரின் காவி உடையைப் போர்த்தினார்கள். இதனால் இச்சிலை இராமானுசரை நேரில் பார்ப்பது போல் தோற்றமளித்தது.

இச்சிலையைச் செய்து முடிக்க மூன்று நாளாயிற்று. சிலை முடிந்ததும் கோவிந்தர் எனும் சீடர் மடியில் தலைவைத்தும், இன்னொரு சீடர் வடுக நம்பியின் மடியில் கால் வைத்தும் இராமானுசர் மறைந்தார். இதனால் அவருடைய ஆன்மா இச்சிலையினுள் அடங்கிற்று என நம்புகின்றனர். "தாமான திருமேனி" என்று அச்சிலை போற்றப்படுகிறது.

திருவரங்கத்தில் நாலாவது பிரகாரத்தில் இராமானுசர் அடக்கம் செய்யப்பட்ட இடத்துக்கு மேலாக அவரது சிலை வைக்கப்பட்டது. ஆண்டுக்கு ஒருமுறை திருவரங்கப்பெருமாள் இக்கோவிலுக்கு எழுந்தருளுகிறார்.



## துழாய் தேவி

பாற்கடல் கடையப் பெற்றபோது அவற்றுடன் பெரிய பிராட்டியும், துளசி தேவியும் தோன்றினர். பெருமாள் பிராட்டியாரைத் தம் திருமார்பில் தரித்தார். துளசி தேவி தனக்கும் இடம் வேண்டினாள்.

இலக்குமி பன்னெடுங்காலம் தவமியற்றி அவ்விடத்தைப் பெற்றாள் என்பதை எடுத்துக் கூறிப் பெருமாள், துளசிச் செடி உருவில் மார்க்கண்டேயர் தவமியற்றும் வனத்தில் தங்கியிருக்கும் படியும், அப்போது நல்ல காலம் கிட்டும் என்றும் மொழிந்தார்.

அவ்வாறே துளசி, செடியுருவில் கும்பகோணம் அருகில் வாழ்ந்து வந்தாள். மிரு கண்டு வின் புதல்வரான மார்க்கண்டேயர் திருத்தலப் பயணம் மேற்கொண்டு துளசி தேவியாரின் காட்டிற்கு வந்து சேர்ந்தார். பூதேவியை மகளாகப் பெற்று இத்தலத்து எம்பெருமானை மணவாளனாகப் பெறல் வேண்டும் என்பது இவருடைய பேரவா. இவ்வவாவை நிறைவேற்றுதற் பொருட்டுக் கடுந்தவம் மேற்கொண்டார்.

பெருமாள் திருமகளிடம் மண்ணுலகில் தவம் புரியும் மார்க்கண்டேயருக்குத் திருத்துழாய்ச் செடிக்கருகில் இரண்டு வயதுடைய பெண் குழவியாய் கிடக்குமாறு கூற. அவ்வாறே திருமகளும் கிடக்க முனிவர் அக்குழந்தையை எடுத்துப் "பூமிபிராட்டி" எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார்.

முதியவர் வடிவத்தில் பெருமாள் வந்து முனிவரிடம் அவருடைய தம் வளர்ப்பு மகள் பூமி பிராட்டியை மணம் முடித்துத்தர வேண்டுகிறார். வயதுப் பொருத்த மின்மை கருதி மணம் முடித்தளிக்க முனிவர் உடன்படவில்லை. ஆனால் முதியவரோ தமக்கு மணம் முடித்து அளிக்காவிடில் முனிவரின் எதிரேயே உயிரைத்துறந்து விடுவதாகக் கூறுகிறார்.

முனிவர் தம் மகள் உணவு சமைக்கத் தெரியாதவள், உணவில் உப்பிடக் கூடத் தெரியாதவள் என்பதைக் கருதியாயினும் மணம் கொள்ளும் எண்ணத்தைக் கைவிடுமாறு வேண்டுகிறார்.

தம்மகளிடம் நிலைமையை எடுத்துக் கூறுகிறார். தான் கிழவரை மணக்க விரும்பாததையும், வற்புறுத்தினால் தானும் உயிரை விட்டு விடத்தயாராக இருப்பதையும் கூறினாள். முனிவர் எம்பெருமானைச் சரணடைந்து தம் துயர் நீக்க வேண்டுகிறார். கண்களை மூடி வேண்டுகிறார்.

கண் விழித்துப் பார்த்த போது கண் எதிரே எம்பெருமான் திருவரையில் ஒருகையும் கன்னிகாதானத்தை ஏற்கும் முறையில் ஒரு கையுமாக நின்றார். முனிவரும் தம் மகளை எம்பெருமானுக்கு மணம் புரிவித்தற்கு இசைந்தார். நான்முகன் வந்துதேவர்கள் புடை சூழ ஐப்பசித் திங்களில் திருமணத்தை நடத்தி வைத்தார்.

எம்பெருமான் தான் அத்தலத்தில் என்றும் இருக்கவேண்டும்; எல்லா நன்மைகளையும் அளிக்கவல்ல இத்திருத்தலம் மார்க்கண்டேயர் பெயரால் விளங்கவேண்டும்; உப்பின்றி எம்பெருமான் அமுது செய்யும் உணவு அடியார் கட்கு மிக்கச் சுவையுடையதாக இருக்க வேண்டும்; என முனிவர் வேண்டிய மூன்று வரங்களையும் அளித்தார். எம்பெருமான் விண்ணுலகிலிருந்து இத்தலத்தை விரும்பி ஏற்றபடியால் அவர் விருப்பப்படி இத்திருத்தலம் "திருவிண்ணகர்" என்றும் உப்பிலியப்பன் என்றும் பெயர் பெற்றது. துளசிவனம் இத்தலத்துக்கு வேறு பெயர். "விண்ணகருள் பொன்மலை" எனத் திருமங்கையாழ்வார் இதனை உருவகிக்கிறார்.



## ஒப்பிலியப்பன் கோவில் திருக்குளம்

**ஒப்பிலியப்பன் கோவிலின் உள்ளே வடபுறத்தில் உள்ளது "அஹோராத்திர புஷ்கரணி". இப்பெயர் ஏற்பட்டது எப்படி?**

தேவசர்மா என்னும் பரத்துவாசமுனிவர் ஒருவர் மரபில் தோன்றிய அந்தணன், திருமறைகளைக் கரை கண்டவன், ஒரு தவறைச் செய்தான். சோலையில் மலர் கொய்து கொண்டிருந்த ஜைமினி முனிவரின் புத்திரியைக் கட்டாயப் படுத்திப் புணர்ந்தான். அப்பெண்மணி தம் தந்தையின் காது கேட்கும்படி கதறினாள்

முனிவர் மிகச் சினந்து தன் புதல்வியைக் கெடுத்த அந்தணனைக் கிரௌஞ்சப் பறவையாகும் படி சபித்தார். தேவ சர்மா தான் செய்த குற்றத்தை மன்னித்துச் சாப விடுதலை வேண்டினார்.

முனிவர் இத்திருத்தலத்து பொய்கைக்கரையிலுள்ள மரக்கிளையில் தொங்கி நிற்கும் படியும் புயல் காற்று ஒன்றினால் அக்கிளை ஒடிந்து திருக்குளத்தில் விழும்போது அதன் புண்ணிய தீர்த்தம் அப்பறவையின் மீது பட்டுச் சாபம் நீங்கும் என்றும் கூறினார். இவ்வாறாக அந்தண இளைஞன் சாபம் நீங்கப் பெற்றான். புண்ணிய தீர்த்தங்களில் இரவு

வேளைகளில் நீராடக்கூடாது. அதற்கு மாற்றாக இரவில் நீராடிய கிரௌஞ்சப் பறவை சாப விமோசனம் பெற்றதால் திருக்குளம் "அஹோராத்திரபுட்கர்ணி" என்றும் பெயர் பெற்றது. இன்றும் இப்பெயரே விளங்குகிறது.



## பன்னிரண்டு ஆயிரம் சாளக்கிராமங்கள் தச்சர் உருவம்

திருவனந்தபுரம் பத்மநாப சுவாமியின் காலுக்குக் கீழே பரதமுனியின் சமாதி இருப்பதாக நம்பப்படுகிறது. 12 சாளகிராமங்கள் இருந்தாலே அது மகாக்ஷேத்திரம். ஆனால் பத்மநாபசுவாமி ஆலயத்தில் 12 ஆயிரம் சாலக்கிராமங்கள் உள்ளன. பத்மநாப சுவாமி திருக்கோவிலின் ராச கோபுரத்தில் 2000 சிற்பங்கள் தமிழ்ப்பண்பாட்டுடன் ஒத்துப் போகின்றன. இந்தக் கோவிலையொட்டிய பகுதியை சீலேவி புரா என்று குறிப்பிடுகின்றனர். இந்த சீவேலிபுரா 365 தூண்களை உடையது. வேறு எங்கும் இது போன்ற தூண்கள் இல்லை. இவை ஓர் ஆண்டின் 365 நாட்களை நினைவு படுத்துகின்றன. இந்த சீவேலிபுரா மண்டபத்தை 10,000 சிற்ப வல்லுநர்களையும், 100 யானைகளையும் பயன் படுத்தி ஆமோதத்தில் செய்து முடித்த ஆசாரிக்கு என்ன பரிசு வேண்டும் என அரசர் கேட்க, எனது இடது கண் கடவுளையும், வவது கண்மண்ணையும் பார்க்க அருள்புரிய வேண்டும் என்றாராம் தச்சர். அதன்படி அவருடைய உருவம், அவருடைய குடும்பத்தினர் உருவம் மண்டபத்தூண்களில் காணப்படுகிறது.



## முதன்மை பெற்ற வஞ்சுளவல்லி

திருநறையூர் என்ற திருத்தலத்தில் தாயார் வஞ்சுள வல்லிக்கே முதலிடம் முதன்மை நிலை. இது எப்படி?

திருநாரையூர் திருத்தலத்தில் தவம் செய்து வந்த மேதாவி என்னும் திரு நாமம் கொண்ட முனிவர் திருமகள் தனக்கு மகளாகப் பிறக்க வேண்டும் என்னும் பேரவாக் கொண்டிருந்தார்.

அம்முனிவர் விரும்பியவாறு முனிவரின் தவச்சாலை அருகில்

வஞ்சுளமரத்தடியில் ஒரு சிறு பெண்ணாகப் பிறந்தார். வஞ்சுளவல்லி என்னும் பெயரிட்டு வளர்த்தார். மங்கைப் பருவம் அடைந்த திருமகளை மணக்கப் பெருமாள் மனித உருவில் பூவுலகம் வந்தார்.

மேதாவி முனிவரின் சீடர்கள் பெருமாளையும் அவர் தாங்கிய ஐந்து உருவந்தாங்கி வந்தவர்களையும் அழைத்து வந்தனர். பெருமாள் உணவு அருந்திவிட்டுக் கைகழுவச் சென்ற பொழுது வஞ்சுளவல்லி தண்ணீர் கொண்டு வர. வாசுதேவப்பெருமாள் அவள் கையைப் பற்றினார். "அப்பா இவர் ஒருவர் செய்தது காண்" என்றாள். ஓடி வந்த முனிவர் தம் மகள் கையைப் பிடித்த நிலையில் மானுடர் வாசுதேவனைக் கண்டார்.

அவனது அடாத செயலைக் கண்டு சீற்றம் கொண்டு சாபம் கொடுக்க முனைந்தார். உண்மை நிலையையுணர்ந்து வாசுதேவன் சங்கு, சக்கரம் ஏந்தித் தன் மெய்க் கோலம் காட்டினார். முனிவரின் சீற்றம் மறைந்தது.

வஞ்சுளவல்லி–வாசுதேவன் திருமணம் நடைபெற்றது. வாசுதேவன் நாரையூர் நம்பியாகத் திருநறையூரில் நிற்கின்றார். மேதாவி முனிவர் தமக்குப் பிறப்பு–இறப்பின்மை, நறையூரில் நடைபெறும் நிகழ்வுகளில் முதன்மை என வரங்களை வேண்டிட வாசுதேவன் முனிவருக்கு அவற்றை அளித்தார். திருமணம் நடந்த நாள்முதலாகத் திருநறையூர் இறைவி பெரிய பிராட்டியின் பெயரால் "நாச்சியார் கோவில்" எனப் பெயர் பெற்றது.



## *சிவன் கைக் கபாலம் நீத்த ஊர்*

நான்முகன் ஐந்து தலைகளையுடையவனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குவதற்கு இடமாக இருக்கிறதென்று கருதி, நான்முகனின் ஐந்து தலைகளில் ஒன்றைச் சிவபிரான் கிள்ளிக் களைந்து விட்டார்.

பிரம்மனின் கபாலமான பிரம்மகபாலம் சிவன்கையில் ஒட்டிக் கொண்டது. இதனால் சிவன் கவலையுற்றார். தேவர்களும், முனிவர்களும் "இப்பாவம் தொலையப் பிச்சை எடுக்க வேண்டும். என்றைக்கு இக்கபாலம் நிறையுமோ அன்றே அது கையை விட்டு அகலும்" என்றனர்.

சிவன் பல தலங்களில் பிச்சையேற்றும் கபாலம் நிறையவில்லை. பின்னர் பத்ரிகாசிரமத்திலுள்ள நாராயணமூர்த்தி தம் திருமார்பு வியர்வை

நீரை எடுத்து இட்டதால் கபாலம் நிறைந்தது. பிரம்மனின் கபாலம் அகன்றது. இவ்வாறு கபாலம் நீங்கக் காரணமானவர் திருநாறையூர் நம்பிப் பெருமாள் ஆவார். இதனைப் பெரிய திருமொழி

*ஆறும் பிறையும் அரவமும்*
*அடம்பும் சடைமேல் அணிந்து உடலம்*
*நீறுபூசி ஏறு ஊரும்*
*இறையோன் சென்று குறையிரப்ப*
*மாறு ஒன்று இல்லா வாசநீர்.*
*வரை மார்பு அகலத்து அளித்துகந்தான்*
*நாறும் பொழில் சூழ்ந்து அழகு ஆய*
*நறையூர் நின்ற நம்பியே*

என்று பாடுகிறார்.



## *விளக்கம் அளித்த பொன்னாச்சி*

இராமானுசர் நாள்தோறும் காவிரியில் நீராடிவிட்டுத் திரும்புகையில் பிராமணர் அல்லாத வில்லிதாசர் எனும் மல்லர் தோளில் கைகளைப் போட்டுக் கொண்டு திரும்புவார். அந்த வில்லிதாசனிடம் இறைவன் குடிகொண்டதாக இராமானுசர் எடுத்துரைத்தார். அந்த வில்லிதாசரின் மனைவி பொன்னாச்சி ஞானம் நிறைந்தவள்.

இராமானுசரிடம் அவருடைய சீடர்கள் "ஆத்மாவிற்கும், பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பு என்ன?" எனக் கேட்டார்கள்.

பொன்னாச்சியின் பெருமையை உணரச் செய்யத் தம் சீடர்களைப் பொன்னாச்சியிடம் இக்கேள்வியைக் கேட்கும்படி பணித்தார்.

சீடர்கள் பொன்னாச்சியிடம் சென்று தங்கள் சந்தேகங்களைக் கேட்டார்கள். அவள் முடிந்திருந்த தன் கூந்தலை விரித்து விட்டாள். பின் நடுமுடியைத் தனியே எடுத்து காட்டி அதனை ஆத்மா என்று தட்டினாள். பின்பு மீண்டும் கூந்தலை அவித்தாள். அப்போது நடுமுடி உதிர்ந்தது. "இப்படித்தான், பரமாத்மாவால் கட்டப்பட்ட ஆத்மா உதிர்ந்து போகிறது" என விளக்கம் அளித்தாள்.



# இராமானுசருக்குப் பெருமாள் என்னும் திருநாமம்

திருமாலுக்கு பெருமாள் என்னும் பட்டப் பெயர் உள்ளது என்பதை அறிவோம். ஆனால், திருமால் அடியவர்களில் "பெருமாள்" என்று அழைத்துச் சிறப்பிக்கப்பெற்றவர் இராமானுசர். திருப்பதிப் பெருமானுக்கு இவர் சங்கும், சக்கரமும் வழங்கினார் அல்லவா? அதனால் இவரை "அப்பனுக்குச் சங்காழி அளித்த பெருமாள்" என்று அழைத்தனர். இதனால் எம்பெருமானார் அப்பனுக்கு அப்பன் ஆனார். பெரும் ஆள் என்பதே பெருமாள் என்று ஆயிற்று.

இராமானுசர் திருப்பதிக்குச் சென்று கொண்டிருந்த போது வழி தவறி விட, வயலில் ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்த தாழ்த்தப்பட்ட ஒருவர் அவருக்குத் திருப்பதி செல்லும் வழியைக் காட்டிய போது அவரைத் தெண்டனிட்டு இராமானுசர் வணங்கி நன்றி சொன்னார்.

அதைப் பார்த்த அவருடன் வந்த வைணவர்கள், "தாழ்த்தப்பட்ட குலத்தவன் ஒருவனுக்குத் தாங்கள் போய்த் தெண்டனிடலாமா?" என்று கேட்க அவர் சொன்ன பதில்.

"அவர் திருப்பதிக்குப் போகவழி காட்டினார். அவ்வழியான வைகுந்தத்திற்கு வழி காட்டியவர் உயர்ந்தவராதலால் அவரை வணங்கினேன்" என்றார்.

இராமானுசருக்குக் கிடைத்த பட்டப் பெயர் மட்டுமன்று இயற்பெயரும் இளையபெருமாளே. இளையாழ்வார் என்று திருமலை நம்பி பெயர் சூட்டினார். இராமானுசர் என்று பெயர் சூட்டியவர் காஞ்சிபுரத்துப் பெரிய நம்பி. இராமானுசர் என்றாலும் இளைய பெருமாள் என்றாலும் ஒன்றுதான். இராம + ஆநுஜன் + (தம்பி) = இராமன் தம்பி. இராமனால் உய்வு அடைந்தவர் இராமன்+உஜர் என்றும் பொருள் இலக்குவனின் கூறாக அவதரித்தவர் இராமானுசர் என்பது நம்பிக்கை.



# திருமலை நல்லான் சக்கரவர்த்தி

நல்லான் சக்கரவர்த்தி என்பவர் திருமலையில் வாழ்ந்த திருமாலின் அடியவர். நீல மலையின் அடிவாரத்தில் வாழ்ந்த வேடர்களைத் திருமால்

அடியார்களாக்கியவர். மனிதர்களிடையே வேற்றுமை பாராட்டாதவர். ஒரு முறை தாழ்த்தப்பட்ட ஒருவர் இறந்த போது அவருக்கு இறுதிச் சடங்குகள் செய்விக்க யாரும் இல்லாத போது நல்லான் சக்கரவர்த்தி அதனைத் தாமே முன் நின்று செய்வித்தார்.

அவ்வாறு செய்ததை அவர் வாழ்ந்த ஊரில் வாழ்ந்த பார்ப்பனர்கள் விரும்பவில்லை. இது தம்முடைய குல வழக்கங்கள், மரபுகளுக்கு எதிரானது எனக் கருதி அவரை ஒதுக்கி வைத்தனர்.

இந்த நல்லான் சக்கரவர்த்தியை இராமானுசர் "நல்லான், நாட்டுக்குப் பொல்லான், நமக்கு நல்லான்" என்று பாராட்டினார். அந்த நல்லானின் சீடர்கள் இராமானுசரைப் போற்றி அவருக்குத் தேன், தினைமாவு அளித்தார்கள் என்பதும் அதை ஏற்று அவர் உண்டு மகிழ்ந்தார் என்பதும் பிற செய்திகள்.



## இராமானுசர் கொண்டு வந்த செல்வப்பிள்ளை

இராமானுசரால் நிறுவப்பெற்ற மேல் கோட்டைத் திருத்தல வரலாறு. மேல் கோட்டை என்பது கன்னட மொழியில் மேல் கோட்டே எனப்படுகிறது. இத்திருத்தலத்திற்குத் திரு நாராயணபுரம் என்னும் திருப்பெயரும், யதுகிரி என்னும் பெயரும் உண்டு.

இத்திருத்தலத்துப் பெருமானின் திருநாமம் திரு நாராயணப் பெருமாள் என்பதாகும். இப்பெயரைச் சூட்டிய வரும் இராமானுசர் ஆவார். இத்திருக்கோயில் வைரமுடி சேவை புகழ்பெற்றது. இத்திருக்கோவிலிலுள்ளே தாழ்த்தப்பட்டவர் என்று ஒதுக்கப்பட்டவர்களை இராமானுசர் திருக்குலத்தார் எனத் தம்மோடு அழைத்துச் சென்று ஆலயப்பிரவேசத்தை செய்து வைத்த நிகழ்ச்சி நடைபெற்றது .

இந்தப் பெருமாள் புதரிலிருந்து கண்டெடுக்கப்பட்டவர் என்று கூறப்படுகிறது. இந்தப் பெருமாளின் உற்சவத்திருத் தோற்றம் இராமப்பிரியர் என்னும் திருநாமம் பெற்றது. மூலவர் சிலை கிடைத்தபோது உற்சவர் கிடைக்கவில்லை. உற்சவரான பெருமாளை, டெல்லியிலிருந்து வந்த இசுலாமியரை படையெடுப்பின் போது டெல்லி கொண்டு சென்று விட்டனர் என்னும் தகவல் கிடைத்தது.

எனவே டெல்லி சென்று இராமானுசர் சுல்தானைச் சந்தித்து இராமப்பிரியர் சிலையை அளிக்கும் படி வேண்ட, சுல்தானும் ஒரு சிலையைத் தேடி இவ்வளவு தொலைவு வந்திருக்கிறாரே என மூலையில் கிடந்த சிலைகளில் தேடி எடுத்துக் கொள்ளச் சொல்ல அவ்வாறே இராமப்பிரியரைக் கண்டு திருநாராயணபுரம் கொண்டு வந்தார்.

இந்த இராமப்பிரியருக்குச் செல்லப்பிள்ளை, சம்பத்குமார் ஆகிய திருப்பெயர்களும் உண்டு. இவருக்குத்தான் வைரமுடி சாற்றுதல் நடைபெறுகிறது. உற்சவரான போதிலும் இவருக்கென்று திரு நாராயணபுரத்தில் தனிச்சந்நிதி உள்ளது.

இராமானுசர் காலத்தில் டெல்லியில் இசுலாமியர் ஆட்சி ஏற்படவில்லை எனவும், மாளவமன்னன் ஜகத்தேவன் யதுகிரி எடுத்துச் சென்ற செல்வப்பிள்ளையை மாளவம் சென்று மீட்டு வந்தார் என்றும் வரலாற்றாசிரியர் மேலே கூறப்பட்ட கதையை மறுத்துக் கூறுவர்.



## இராமானுசர் இன்றும் இருக்குமிடம்

'திருவரங்கன் செல்வம் முற்றும் திருத்திவைத்தான்,' எனப் பெயர் பெற்ற அருளாளர் இராமானுசர் திருவாய்மொழியை எங்கும் பரப்பியவர். திருவரங்கக் கோவிலில் திருவரங்கத்து எம்மான் முன்னும், அரங்கன் உலா, தேர்வலம் ஆகியவற்றின் முன்னும் திருவாய் மொழி பாட வகை செய்தார். தமிழ்மறை எனப் போற்றப்படும் திருவாய் மொழியைக் கற்றவர் அவர்.

தம்முடைய மானசீகக் குருவான திருமடத்துத் தலைவரின் கட்டளையாகத் தமிழ் மறையாம் திருவாய் மொழியை நாடெங்கும் பரப்பிட, ஆளவந்தாரின் திருமகனாரான பெருமாள் அரையரிடம் திரு வாய் மொழியின் மறை பொருளையும், நாதமுனிகளின் பேரனான ஆளவந்தாரின் மாணவர் பெருமாள் அரையரிடம், திவ்யப்பிரபந்தத்தையும் பாடம் கேட்டார்.

திருவாய்மொழியினைப் பெற்ற தாய் நம்மாழ்வார் என்றால், அதனை வளர்த்த தாய் இராமானுசர் என்று கூறுவர்.

இன்றும் திருவாய்மொழி ஓதும் இடங்களில் இராமானுசர் உறைவதாக நம்பப்படுகிறது. நம்மாழ்வாரின் திருவடியை இராமானுசன் என்று அழைப்பர்.

யக்ஞமூர்த்திக்குத் தமிழ் கற்பித்துத் திருவாய்மொழி கற்பித்து அருளப் பெருமாள் என்று பெயர் மாற்றம் செய்வித்தவரும் இராமானுசரே.



## திருவனந்தபுரத்து அனந்தசயனப் பெருமாள்

திருமால் ஆலயச் சீர்திருத்தங்களைச் செய்தவர் இராமானுசர். ஆளவந்தாருக்குப் பின் திருவரங்க மடத்துத்தலைவராக ஆன இராமானுசர் அக்கோவில் நிருவாகத்தைச் சீர்திருத்திக் கோவில்நடை முறையை வகைப்படுத்தினார். இது போல் திருப்பதியிலும் இவரே செய்வித்தார்.

அதன்பின் நாடு முழுவதும் பயணம் செய்து தாம் தலப்பயணம் மேற்கொண்டு தாம் சென்ற ஊர்களில் எல்லாம் ஆலய நிருவாகத்தை அவர் வகைப்படுத்தி வந்தார்.

இவ்வாறு வருகையில் திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார். அங்கு ஆலயத்தில் பெருமாள் திருப்பணியில் ஈடுபட்டு வந்தவர்கள் நம்பூதிரிகள். அவர்கள் தங்கள் மரபுப்படி தங்கள் வழக்கப்படியே பெருமாளை, அனந்த சயனம் கொண்ட பெருமாளை ஆராதித்து வந்தனர்.

அவர்களுக்கோ, தங்கள் வழக்கங்களில் இராமானுசர் வந்தால் மாற்றம் ஏற்படுவதை ஏற்க விருப்பமில்லை. பெருமாளிடம் சென்று முறையிட்டு அவர்கள் தங்கள் விருப்பத்தை அறிவித்தனர்.

இராமானுசரும் தன் அடியவர். நம்பூதிரிகளும் அடியவர். என்ன செய்வது? பார்த்தார் பெருமாள்.

இருவர் மனமும் நோகக் கூடாது . எனவே இதற்கு மாற்றம் காணப் பெருமாள் ஒரு வழி செய்தார். தம் ஆதி சேடனை அழைத்தார். இராமானுசருக்கு மயக்கம் ஏற்படுத்தி ஆதிசேடன் மூலமாக இராமானுசரைத் திருவனந்தபுரத்திலிருந்து தூக்கி வெளியே கொண்டு வேறோர் திருத்தலத்தில் விட்டு விடச் செய்தார்.

பெருமாள் தம் வாகனமான சேஷவாகனத்தினையே அளித்தார் எனில் இராமானுசரின் சிறப்பு எத்தகையது என்பதைத் தெரிந்து கொள்ளலாம் என்பர். ஆதிசேடனே இராமானுசராகப் பிறந்தார் என்றும் கூறுவர்.



## கண் கலங்கிய இராமானுசர்

இராமானுசர் தம் 32 ஆம் வயதில் துறவு மேற்கொண்டார். அவருக்கு மகவு ஏதும் இல்லை. திருக்கச்சி நம்பி இராமானுசர் கையில் முக்கோல் அளித்து யதிராசர் அதாவது துறவிகளின் அரசர் என ஆக்கினார். அருளாளர் ஆக்கினார் என்பது வரலாறு. இராமானுசர் பிச்சைக்குச் செல்வதால் திருப்பாவை பாடிச்சென்றதால் திருப்பாவை ஜீயர் எனப்பட்டார். ஜீயர் என்றால் அடிகள் என்பது பொருள். துறவு பூண்ட இராமானுசர் ஆழ்வார் திருநகருக்கு வருகை புரிந்தார். ஆற்றில் நீராடச் சென்று நீராடிக் கரைக்கு வந்த போது, சலவைத் தொழிலாளர் வந்து அவரை வணங்கினார். வணங்கிய அவர் தம் நாலு பிள்ளைகளையும் "சடகோபா, காரிமாறா, வருளாபரணா, குருகூர்நம்பி" என்று பெயர் சொல்லிக் கூவி அழைத்தார்.

இராமானுசரிடம் அவர்களும் ஆசிபெற விழைந்தே அவர் தம் பிள்ளைகளைக் கூவி அழைத்தார்.

இராமானுசர் ஒருக்கணம் மெய்சிலிர்த்துப் போனார். அது மட்டு மல்லாது கண்கள் கலங்கின. உடன் வந்தவர்கள் கலக்கத்தின் காரணம் கேட்டனர்.

"இல்வடியவன் பெற்றபேறு யான் பெறவில்லையே. இல்லறத்தில் இருந்து, பிள்ளைச்செல்வங்களைப் பெற்று ஆழ்வாரின் அழகிய திருப்பெயரிட்டு அழைக்கக் கொடுத்து வைக்காதவனாகி விட்டேனே என்று தான் கலக்க மடைந்தேன்" என்று கூறினார்.

இறைவன் திருநாமத்தைக் கூறிப்பிள்ளைகளை அழைக்க வியலாத வராகி விட்டோமே என்ற ஏக்கம் உடையவரான, ஆண்டாளின் அண்ணனான இராமானுசரை "நம்கோவில் அண்ணலார்" என அழைத்தனர்.



## திருச்சேறை இராச கோபாலன் அமைத்துக் கொண்ட கோவில்

தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தவர் அழகிய மணவாளநாயக்கர். இவர் மன்னார்குடி இராசகோபாலன் திருக்கோயிலைக் கட்டமுனைந்தார்.

தஞ்சை மாவட்டத்தில் கருங்கல் கிடைக்காமையால் வடக்கிலிருந்து கல் கொணர்ந்தார். கல்வண்டிகள் திருச்சேறை வழியாக மன்னார்குடி சென்றன.

அழகிய மணவாள நாயக்கரின் அமைச்சர் நரசபூபாலன் திருச்சேறை எம்பெருமானிடம் ஈடுபாடு அதிகம் உடையவர். திருச்சேறை எம்பெருமானுக்குக் கோயில் கட்ட எண்ணினார். எனவே மன்னார்குடி செல்லும் கல் வண்டிகளிலிருந்து வண்டிக்கு ஒரு கல்லாகத் திருச்சேறையில் இறக்கும்படி கட்டளையிட்டார்.

யாரோ ஒருவர் மன்னனிடம் நரசபூபாலன் அரசுப்பணத்தைத் திருச்சேறை எம்பெருமானுக்குக் கோயில் கட்டுவதில் செலவு செய்வதாக வத்தி வைத்துவிட உண்மையை யறிய அழகிய மணவாளன் விழைந்தார்.

அரசன் சோதனைக்கு வருவதை அறிந்து இரவோடு இரவாக அரசனின் விருப்ப தெய்வமான இராச கோபாலன் கைங்கரியமே சிறிய அளவில் நடைபெறுவதாகக் கூறித் திருக்கோயிலைக் கட்டினார். அரசரும் மகிழ்ந்து திருக்கோயில் திருப்பணி நிறைவு பெறச் செலவு முழுமையும் அளித்தார். இறைவனே இவ்வாறு தனக்குக் கோயில் எழுப்பிக் கொண்டு விட்டார். திருச்சேறைக் கோவில் இவ்வாறு அமைந்த கோயிலாகும்.



## *திருச்சேறைப் பெருமானைத் தொழச்சென்றால் திருமங்கை தலைமேல் கால்படுமே?*

திருமங்கையாழ்வார் திருச்சேறைப் பெருமானை மங்களாசாசனம் செய்துள்ளார். எம்பெருமானுக்கு அடிமைப்படுவதைக் காட்டிலும் அவனுக்கு அடிமைகளான அடியார்க்கு அடிமைப்படுதல் சிறந்தது என்பது வைணவத் தத்துவம். திருமங்கை தம் பாசுரத்தில்,

*கண்சோர வெம் குருதி வந்து இழிய*
*வெம்தழல் போல் கூந்தலாளை*
*மண்சோரமுலை உண்டமாமதலாய்*
*வானவர் தம் கோவே என்று*
*விண்சேரும் இளம் திங்கள் அகடு உறிந்த*
*மணிமாடம்ம ல்கு செல்வத்*
*தண்சேறைஎம் பெருமான் தாள்தொழுவார்*

*காண்மின் – என் தலைமேலாலே*

என்று குறிப்பிடுகிறார்.

இதனுடைய பொருள்: பெருமானுடைய பரத்துவ சௌலப்பியங்களைப் போற்றி உருகும் அடியவர் எவரோ அவர்களே என் தலைமேல் வீற்றிருப்பர்.

பிள்ளையழகிய மணவாளரையர் என்பவர் ஒருவேலையின் பொருட்டுத் திருச்சேறை வழியாக ஓரிடத்திற்கு எழுந்தருள நேரிட்டது. அவர், திருச் சேறைப்பதியினுள் செல்லாமல் வயல் வழியே போய்க்கொண்டிருந்தார்.

அங்கு அவரைக் கண்ட அன்பர் ஒருவர், "வயல் வழியே போவானேன்? திருப்பதியினுள்ளே புகுந்து சாரநாதப் பெருமாளைச் சேவித்துப் போகலாகாதோ?" என்று வினவினார்.

அதற்கு அரையர் சமத்காரமாக ஒரு பதில் உரைத்தார். "இத்திருப்பதி பற்றிய பாசுரம் பாடிய திருமங்கை" "தண் சேறை யெம்பெருமான் தாள் தொழுவார் காண்மின் என்– தலை மேலாலே" என்றார்.

எனவே, இப்பாசுரத்தின் படி திருச்சேறை எம் பெருமானைச் சேவிப்பது என்றால் திருமங்கையாழ்வார் திரு முடியில் ஏறவேண்டியதாகும். அது பெரும் அபசாரம். எனவே தான் திருச்சேறைக்குள் போகாமல் கரையோரமே போகிறேன்" என்றாராம்.



# திருக்கொடித்தானம் பெருமாள்

திருவல்லா கோட்டயம் பாதையில் இருக்கும் சங்கணாச் சேரியிலிருந்து இரண்டு கல் தொலைவில் திரும்பிச் சென்றால் திருக்கொடித்தானம் பெருமாளைச் சேவிக்கலாம்.

சங்கரமடம் என்னும் இடத்தில் அந்தணர் ஒருவர் ஏகாதசிகளில் விரதமிருந்து மறுநாள் துவாதசியன்று பிராமணர் ஒருவருக்கு உணவளிப்பார். அதன்பின்னரே விரதத்தை முடித்துக்கொள்வார். ஒரு துவாதசியின் போது அந்தணர் யாருமே கிடைக்கவில்லை. துகளாசுரன் என்னும் அசுரனுக்கு அஞ்சி யாருமே நடமாட வில்லை.

விரதம் இருந்த அந்தணர் விரதம் முடிக்க இயலாமல் தவித்தார். பார்த்தார் பெருமாள். தன்பக்தர் துயரடைய விடுவாரா? பிராமணர் போல் வேடமிட்டு திருக்கொடித்தானம் குளத்தில் குளித்துத் தன் சக்கரத்தால் துகளாசுரனை வெட்டி வீழ்த்தினார்.

பின்னர் அந்தனர் இல்லம் சென்று கமுகு மரத்தின் பாளையில் அளிக்கப்பட்ட உப்பு மாங்காயையும் சோற்றையும் உண்டார். பின் ஆலயம் வந்து கிழக்குப்பக்கம் திரும்பி நின்று கொண்டார். அதனால் திரும்பி நின்ற வல்லபர், திருவல்லர் எனப் பெயர் பெற்றாராம்.

அசுரனை வெட்டினாரல்லவா? கைமுட்டுவிழுந்த இடம் முட்டாறு எனவும், கால் விழுந்த இடம் காலாறு என்றும் சக்கரத்தில் படிந்த குருதிக் கறையைக் கழுவிய இடம் சக்கரக் காலக்கடவு எனவும் வழங்கப்படலாயிற்று இவ்வாலயங்கள் கேரளத்தில் செங்கன்னூருக்கும் மாவேலிக்கரைக்கும் இடையில் உள்ளன. இன்றும் இக்கோயிலில் கமுகுப்பாளையில் உப்பு மாங்காயும், சோறுமே நைவேத்தியமாகின்றன.



## அனந்தசயனர்

திருவனந்தபுரம் அனந்த பத்ம சுவாமி ஆலயம் தொடர்பான வரலாற்றுக் கதை இது. இக்கதை அனந்த சயன மகாத்மியம் எனும் நூலில் இடம்பெற்றுள்ளது.

ஒரு சமயம் திவாகர முனி என்னும் துளுதேசத்து அந்தணமுனிவர் கடுமையான தவத்தில் ஈடுபட்டிருந்தார். அப்போது அவர் முன்பு இரண்டு வயது நிரம்பிய சிறுவன் ஒருவன் தோன்றினான். அச்சிறுவன் கொள்ளை அழகுடன் விளங்கினான். அவனுடைய தெய்வீக அழகு முனிவரின் மனத்தை ஈர்த்தது.

தெய்வீகச் சிறுவன் என உணர்ந்த அவர், தம்முடனேயே தங்கி விடும்படி சிறுவனை வேண்டினார். அச்சிறுவனோ, தான் அதற்கு உடன்படுவதாயின் தன் நிபந்தனை ஒன்றுக்கு முனிவர் உடன்படல் வேண்டுமென்றான். எப்போதும் தன்னை அன்புடனும், மரியாதையுடனும் நடத்த வேண்டுமெனவும், அதில் தவறுதல் நேரில் அக்கணமே அவரிடமிருந்து பிரிவேன் என்பதும் அவன் விதித்த நிபந்தனை.

முனிவர் அவ்வாறே தவறாது அச்சிறுவனை வளர்த்துப் போற்றிய வேளையில் ஒரு நாள் முனிவர் பூசையில் ஆழ்ந்திருந்த போது சிறுவன் சாளக்கிராமத்தை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு விட்டான். இதைக் கண்ட முனிவர் சீற்றமடைந்து சிறுவனைக் கடிந்து கொண்டார். இவ்வாறு நிபந்தனையிலிருந்து தவறிவிட்டார். எனவே சிறுவன் அவரிடமிருந்து விலகிபபிரிந்து விட்டான்.

பிரியும் முன் 'நீவிர் விரும்பினால் என்னை அனந்தங்காட்டில் வந்து காணலாம்' எனச் சொல்லியபோது திருமாலே சிறுவன் வடிவத்தில் வந்ததை முனிவர் உணர்ந்தார்.

அதன்பின் ஊண், உறக்கமற்றவராய்ச் சிறுவனைத் தேடி அலைந்தார். ஒருநாள் சிறுவன் கடற்ரையில் ஓர் இலுப்பை மரத்தினுள் மறைவதைக் கண்டார். அடுத்த கணம் அம்மரம் கீழே சாய்ந்து ஸ்ரீ அனந்த பத்ம சுவாமியான பள்ளி கொண்ட பெருமாள் திரு உருவைக் கண்டார்.

கோவிலில் பத்மநாபசுவாமியின் சிலை முதலில் இலுப்பை மரத்தில் இருந்தது. நாளாவட்டத்தில் இது மாற்றப்பட்டுக் கல் சிலை நிறுவப்பட்டது. இதற்காக 1733 ஆம் ஆண்டு பலரணயகுணதேவா என்றும் மன்னன் பெரும்முயற்சி செய்து இமயமலை அடிவாரத்தில் உள்ள நேபாள நாட்டில் கந்தகி ஆற்றில் இருந்து கற்களை யானை மீது ஏற்றிக் கொண்டு வந்தான். 1739ல் பதினெட்டரை அடிநீளச்சிலை தார நல்லூர் பத்மநாபன் பரமேசுவர பூசாரியால் பிரதிட்டை செய்யப்பட்டது. ஐந்து தலை நாகம் மீது திருமால் அனந்தசயனத்தில் இருக்கும் காட்சி கண்கொள்ளாக்காட்சி வலது கையில் சிவலிங்கம். நாபியில் தாமரை அதன்மீது பிரம்மா இப்படி முக்கடவுளும் ஒரே இடத்தில்.

ஆனால் பெருமாளின் உடல் பத்மநாப சுவாமி திருத்தலத்திலும் முகம் தெற்கே எட்டுக்கல் தொலைவிலமைந்த திருவல்லம் திருத்தலத்திலும், திருப்பாதங்கள் வடமேற்கே பன்னிரண்டு கல் தொலைவில் உள்ள திருப்பாப்பூர் எனுமிடத்திலும் இருந்தனவாம். இதனைக் கண்டு முனிவர் திகைப்புற்றார்.

"இவ்வளவு பெரிய திருவுருவத்தைச் சுருக்கிக்கொண்டால் எளிதாகத் தரிசித்து வழிபாடு செய்ய இயலுமே" என வேண்டிக் கொள்ளவே, பெருமாள் முனிவரின் யோக தண்டத்தினுடைய நீளத்திற்கு மும்மடங்காக மட்டும் தம்மைச் சுருக்கிக் கொண்டாராம்.

அந்நாளிலிருந்து அந்தணர்கள் அங்குப் பூசை மேற்கொள்ளும் உரிமை பெற்றார்கள். முனிவரும் மரத்தாலான அவ்வுருவினை வழிபட்டு மகிழ்ந்தார்.



## வர்க்கலை சனார்த்தன மூர்த்தி

பாண்டிய மன்னன் ஒருவன் பிரும்ம இராட்சசனால் பீடிக்கப்பட்டான். அவன் பிரும்ம இராட்சசனின் பிடியிலிருந்து விலகிடப் பெருமாளை வணங்கி வர்க்கலை வந்தான். வர்க்கலை வந்தவுடன் பிரும்ம இராட்சசன் அவனை விட்டு அகன்றான்.

அன்று அவனுடைய கனவில் வர்க்கலையில் தாம் கடலில் மூழ்கிக் கிடப்பதை சனார்த்தனன் அறிவித்தார். பாற்கடலில் பள்ளி கொண்ட பரந்தாமன் அன்று அரபிக்கடலினுள் கடல் அரிப்பினால் மூழ்கியிருந்த சனார்த்தனரை எடுத்து வந்து மறுபடியும் பிரதிட்டை செய்து ஆலயம் எழுப்பினார்.

வர்க்கலை சனார்த்தனர் ஆலயத்தை எழுப்பிட நாரதமுனி காரணமாக இருந்தார் எனவும் கூறுவர்.

ஒரு சமயம் நாரதர் தம்புராவை மீட்டியவாறு மகிழ்வுடன் பாடிச் சென்றார். திருமால் நாரதரைப் பின் தொடர்ந்து சென்றார். பிரம்மலோகத்தினுள் நாரதர் நுழைந்தார். அருகே சற்றும் எதிர்பாராமல் நாரதர் பின் வந்த நாராயணமூர்த்தியைக் கண்டதால் பிரம்மா அவரை வணங்கினார்.

ஆனால், வணங்கி எழுந்து பார்த்த போது ஸ்ரீமந் நாராயணனைக் காணவில்லை. நாரதர் நின்று கொண்டிருந்தார். நாரதர் பிரம்மாவின் மகனாயிற்றே .

தந்தை மகனை வீழ்ந்து வணங்கி நிற்பது கண்டு நவப் பிரஜாதி பதிகள் கிண்டலாகச் சிரித்தனர். இதனால் பிரம்மா கடுமையான கோபம் கொண்டார். அவர்களை மண்ணுலகில் மனிதர்களாகப்பிறக்கச் சபித்தார். நாரதர் தம் தந்தையிடம் அவர்கள் பொருட்டுப் பேசிச் சமாதானம் செய்தார்.

நாரதர் தன் மரவுரியை வீசி எறிவதாகவும் அது மண்ணுலகில்

எங்கு போய் விழுகிறதோ, அங்குச் சென்று தவம் புரிந்து உய்யுமாறும் வழிகாட்டினார்.

அவ்வாறே நாரதரின் மரவுரி வர்க்கலை வந்து விழவே நவப் பிரஜாதிபதிகள் அங்கு வந்தனர். நாரதரின் மரவுரி விழுந்த இடம் வர்க்கலா என்றாகி வர்க்கலை என்று மாறியது.



## விருந்துண்ட சனார்த்தனன்

பிரம்மா வேள்வி ஒன்று நிகழ்த்தினார். அவ்வேள்வியின் பின் அனைவருக்கும் விருந்து அளித்தார். வேள்விக்கு எல்லாத் தெய்வங்களையும் அழைத்திருந்தார். அதுபோலவே திருமாலையும் அழைத்தார். இவர் அழைத்த வேளையில் திருமால் இராமாவதாரம் எடுத்திருந்தார். இராமவதாரத்தின் இறுதிநிலையாக இராவணப் போர் நடத்தி முடித்த கையோடு பெருமாள், இலங்கையிலிருந்து அவசரமாக வைகுந்தம் திரும்பிக் கொண்டிருந்தார். அதனால் பிரம்மாவின் வேள்வியில் கலந்து கொள்ள இயலவில்லை. திருமால் கலந்து கொள்ளாதது பிரம்மாவிற்கு மன வருத்தத்தை அளித்தது. பிரம்மாவின் மனவருத்தம் தீர்க்க வேண்டும் என விரும்பினார் திருமால்.

சனார்த்தனன் என்னும் திருப்பெயர் பூண்டு, அந்தண வடிவெடுத்தார். வர்க்கலைத் திருத்தலம் வந்தார். விருந்துண்டார். எனவே திருமால் விருந்துண்ட சிறப்புப் பெற்ற திருத்தலமாகவும் வர்க்கலை விளங்குகிறது.



## பாண்டவர் வழிபட்ட பெருமாள்

கோட்டயத்திற்கு மேற்கில் எட்டாவது கிலோ மீட்டரில் திருவார்ப்பு என்னும் திருத்தலத்தில் குடிகொண்ட சந்தான கோபால கிருட்டிணன் பஞ்ச பாண்டவர்கள் வழிபட்ட பெருமாள் ஆவார்.

மூன்றடி உயரமுள்ள அந்தப் பெருமாளைப் பஞ்ச பாண்டவர் மறைந்து வனவாசம் செய்தபோது, வழிபடுவதற்காகத் திருமால் அவர்களிடம்

வழங்கினார் என்று கூறுகின்றனர்.

சரி, பாண்டவர் வழிபட்ட பெருமாள் திருவார்ப்பு எனும் ஊர் வந்தது எப்படி?

திருமால் அவர்களிடம், அஞ்ஞாத வாசம் முடிந்தபின், அவர்கள் வழிபட்ட தம் விக்கிரகத்தை அட்சய பாத்திரத்தில் வைத்துக் கடலில் எறிந்து விடும்படி குறிப்பிட்டிருந்தாராம். அவர்களும் அவ்வாறே கடலில் எறிந்து விட்டனர். மடப்பள்ளி நம்பூதிரிபாட் என்பவர் படகில் செல்லுகையில் விக்கிரகம் கண்ணில் பட்டது. அதனை வீட்டிற்கு எடுத்து வர விரும்பினார் அவர். அப்போது அசரீரி ஒன்று "இந்த விக்கிரகம் நாளைக் காலை அதற்காக உருவாகிக் கொண்டிருக்கும் ஆலயத்தில் பிரதிட்டை செய்யப்பட இருக்கிறது" என்று கூறியது. எனவே நம்பூதிரி பேசாமல் திரும்பிவிட்டார்.

மறுநாள் அதிகாலை மூன்று மணிக்குச் சங்குமுழக்கம் கேட்டு ஆலயம் சென்றபோது சந்தான கோபால கிருட்டிணப் பெருமாள் தேவகணங்களால் பிரதிட்டை செய்யப்பட்டிருப்பதைக் கண்டு மெய் சிலிர்த்துப் போய் நைவேத்தியம் படைத்து வழிபட்டார்.

இன்றும் தினசரி மூன்று மணிக்கு இத்திருக் கோவிலில் அதிகாலை பூஜை நடைபெறுகிறது. அப்போது திருவார்ப்பு உஷா என்ற புகழ் பெற்ற பாயசம் படைக்கின்றனர்.



# சோற்றாணிக்கரைப் பெருமாள்

சோற்றாணிக்கரை பகவதி லட்சுமி நாராயணத் தத்துவமாவாள். கருவறையில் சிலா வடிவத்திற்கு உருவ அமைப்புக் கிடையாது. சிவப்பு வெட்டுக்கல்லைப் பகவதி யாகவும். அதன் வலப்புறம் உள்ள சிறிய கருங்கல்லைத் திருமாலாகவும் வழிபடுகின்றனர்.

இக்கருவறை உண்டானது எப்படி? சோற்றாணிக்கரைப் பகுதி பெருங்காடாக இருந்த காலத்தில், சிறிய குடில் ஒன்றில் கண்ணப்பன் என்னும் முதிய வேடர் தன் ஒரே மகளுடன் வசித்து வந்தார். அவர் ஒரு தீய பழக்கத்திற்கு அடிமையாகியிருந்தார். பசுக்களைத் திருடித் தினமும் பலி கொடுத்து வரும் பழக்கமே அது.

ஒரு நாள் இரண்டு பசுக்களைத் திருடி வரும்போது தன் குடிசைக் கருகில் வழி தவறி வந்த கன்றுக் குட்டியைப் பிடித்து மாட்டுக் கொட்டிலில் கட்டிவைத்தார். அவருடைய மகளுக்கு அக்கன்றின் மீது அன்பும் பற்றும் ஏற்பட்டது. ஒரு நாள் பசு கிடைக்காமல் போகவே, கன்றினைப் பலி கொடுக்க முடிவு செய்தார். மகள் மன்றாடித் தடுத்துப் பார்த்தாள். அவளால் தந்தையின் எண்ணத்தை மாற்ற முடியவில்லை. இறுதியில் அவள், "என்னைக் கொன்று விட்டுப் பிறகுக் கன்றைக் கொல்லுங்கள்" என்று தன் கழுத்தை நீட்டினாள். வேடன்திகைத்தார். இருப்பினும் கன்றைக் கொல்ல வாளை ஓங்கினார். அப்போது வேடனின் கையிலிருந்த வாள் நழுவியது. அவ்வாறு மனம் மாறிப் பலி தரும் வழக்கத்தை நிறுத்திக் கொண்டார். இருவரும் அதன்பின் கன்றுக் குட்டியைக் காத்து வருவாராயினர்.

ஒரு நாள் வேடன் கண்ட கனவில் மாட்டுக் கொட்டிலில் பசு ஒன்று படுத்துக் கொண்டிருப்பதையும், அதன் அருகில் ஆள் நிற்பதையும், சுற்றி முனிவர்கள் அவருக்குப் பூசை செய்வதையும் கண்டு விழித்துக் கொண்டு மாட்டுக் கொட்டிலுக்கு விரைந்தான். பசு அமைதியாகத்தரையில் படுத்திருக்கக் கண்டான்.

மறுநாள் காலை கண்ணப்பன் எழுந்து பசு மாட்டுக்குத் தீவனம் வைக்கச் சென்ற போது , அங்கே கட்டியிருந்த பசுவைக் காணாமல் திடுக்கிட்டான். ஆனால் அந்த மாடு கல்லாகி விட்டதைக் கண்டான். இதைப்பார்த்துப் பெருங்கூச்சல் போட்டான். முதல் நாள் இரவு கண்ட கனவையும் அதிகாலையில் கண்ட காட்சியையும் கண்ணீருக்கிடையே விவரித்தான் கண்ணப்பன். அப்போது வந்தவர்களுடன் முனிவர் ஒருவரும் வந்தார்.

அவர் கண்ணப்பனின் பாவங்கள் தொலைந்து பரிசுத்தனாகி விட்டதாகக் கூறினார். பசுவைக் காப்பாற்றியதால் புண்ணியம் கிடைத்தது என்றும், அந்தப் பசு மகாலட்சுமி என்றும், கனவில் காட்சி தந்தவர் பெருமாளே என்றும் கூறி லட்சுமி நாராயண மூர்த்தியை வழிபடும் படியும், அதனால் சகல நலன்களும் கிடைக்கும் என்றும் கூறினார். கண்ணப்பனுக்கு உண்மை நிலையை எடுத்து விளக்கியவர் பராசர முனிவர் என்றும் கூறுவர்.

கண்ணப்பனின் காலத்திற்குப்பின் கண்ணப்பன் வாழ்ந்த இடம் காடு ஆகி, லட்சுமி நாராயண மூர்த்தி சிலை வழிபாடின்றிப் போயிற்று.

ஆண்டுகள் பல கழிந்த பின் காட்டுக்குப் புல் வெட்டச் சென்ற பெண் ஒருத்தி புல்வெட்டும் கத்தியைப் பாறை ஒன்றில் தேய்க்க அதிலிருந்து

குருதி பெருகியது. நம்பூதிரி ஒருவரைஅங்கிருந்தவர்கள் சென்று அழைத்து வந்து பாறைக்குப் பூசை செய்த பின்னர், சோதிடர் ஒருவர் அப்பாறை பகவதி எனவும், அதைப்பகவதியாக வழிபடுவதோடு, அதைச் சரசவதி, லட்சுமி, துர்க்கையாக வழிபட வேண்டும் எனவும், அருகிலுள்ள சிறிய கல் திருமாலினுடையதுதான் என்றும் கூறினார்.



## திருப்பூணித்துறை சந்தான கோபால கிருட்டிண மூர்த்தி

திருப்பூணித்துறை என்னும் திருத்தலம் சோற்றாணிக் கரையிலிருந்து எர்ணாகுளம் செல்லும் வழியில் எட்டுக் கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இத்திருத்தலத்திற்குப் "பூர்ணஸ்ருதிபுரம்" எனும் பெயரும் உண்டு. ஒரு காலத்தில் சுற்றிலும் ஆலமரங்கள் சூழ்ந்திருந்ததால் "பிப்பலாரணியம்" என்னும் பெயரும் உண்டு. பூணி என்றால் சதுப்பு என்பது பொருள். ஒரு காலத்தில் சதுப்பு நிலமானதால் "பூணித்துறை" எனப் பெயர்பெற்றது எனவும் கூறுவர்.

வைகுண்டத்திலிருந்து சந்தான கோபால கிருட்டிணனின் திடம்பை அருச்சுணன் தன் அம்பறாத்துணியில் (பூணி) எடுத்து வந்ததால் "பூணித்துறை" என்னும் பெயர் தோன்றியது எனவும் கூறுவர். திருப்பூணித்துறை, திருப்புணித்துறையாக மருவியது என்பர்.

வைகுண்டத்திலிருந்து அருச்சுணன் இந்தப் பெருமாளைக் கொணர்ந்து வழிபடக்காரணம் என்ன?

முன்பு ஒரு காலத்தில் அங்கு வாழ்ந்த ஒரு பிராமணருக்கு அடுத்தடுத்து ஒன்பது குழந்தைகள் பிறந்து, அவை ஒவ்வொன்றாய் இறந்து விட்டன. அவர் கண்ணபிரானைத் தஞ்சமென அடைந்துத் தன் துயர் தீர்க்க வேண்டினார்.

அருகிலிருந்த அருச்சுணன் பத்தாவதாகப் பிறக்கும் சிசுவைக் காப்பாற்றுவதாக வாக்களித்து அதனை எமன் கவர்ந்து செல்லாமல் காத்தான். பின்னர் கண்ணபிரானோடு வைகுண்டம் சென்று திருமாலிடமிருந்து இறந்த குழந்தைகளை மீட்டுப் பிராமணரிடம் சேர்ப்பித்தான். அப்போது பெருமாள், கண்ணனுடைய சிறிய சிலையை அளித்தார். அதனை அடுத்து வந்த

குழந்தைகள் கிடைக்கக் காரணமாயிருந்த கண்ணன், குழந்தைப் பேறு இல்லாதவர்கள் வழிபடுவதற்காகச் சந்தான கோபாலகிருட்டிணனைப் பிரதிட்டை செய்தான்.

இவ்வாறு பிரதிட்டை செய்யத்தகுத்த இடம் எது வென்று கண்டு வரும்படி விநாயகப் பெருமாளை அனுப்பினர். இதுவே சிறந்த இடம் என விநாயகர் இங்கே குடிகொண்டு விட்டார்.

கணபதியைக் காணாததால் மாலும், அருச்சுனனும் அவரைத் தேடி வந்தனர். கணபதி அங்கே அமர்ந்திருப்பது கண்டு கோபம் அடைந்து அருச்சுனன், கணபதியைக் கிழே பிடித்துத் தள்ளினார். அதனால் கணபதி தெற்குப்புறம் நகர்ந்தார். தென் திசைநோக்கி எழுந்தருளினார். இதன் பின் அருச்சுணன் சந்தான கோபாலனை அங்குப் பிரதிட்டை செய்தார்.

அப்பகுதியில் நிறைய எள் செடிகள் இருந்தன. எள்ளை எடுத்துக் கசக்கி எண்ணெய் எடுத்துச் சுவாமிக்குத் திருவிளக்கும் ஏற்றியதாகக் கூறுகின்றார். அவ்வாறு அருச்சுணன் ஏற்றிய விளக்கே பெருமாள் முன் உள்ள தூங்கா விளக்காம். இந்த விளக்கில் ஒரு தட்டில் அருச்சுணன் எனவும், ஒருத்தட்டில் ராமய்யன் எனவும், மூன்றாவது தட்டில் கிருட்டிணன் எனவும் எழுதப்பட்டுள்ளது என்கின்றனர். இந்த விளக்கு மை பிரசாதமாகக் கருதப்படுகிறது. இந்தச் சந்தான கோபாலருக்குத் தேங்காய் மிகுந்த கேரளத்தில் நல்லெண்ணெய் விளக்கு ஏற்றுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தக் கோபால கிருட்டிணன் மூலவிக்கிரகம் பஞ்சலோகத்தால் ஆனது. இதன் கண் திறக்கப் பட வில்லை எனவும் கூறுகின்றனர். இது ஏன்?

மூல விக்கிரகம் முதலில் சரியாகச் சேரவில்லை எனவும், பிறகு அதை உருவாக்கிய மூசாரி எனப்படும் ஆசாரி பெருமாளிடம் வேண்டுதல் செய்து கொண்டார் எனவும் அதன் பின்னரே சரியாகச்சேர்ந்தது எனவும் கூறுகின்றனர். அப்போது மூசாரியும் விக்ரகத்துடனே ஐக்கியமாகி விட்டாராம். அதனால் விக்ரகத்தின் கண் திறக்கப்படாமல் போயிற்றாம்.

ஒவ்வோர் ஆண்டும் இந்த நாளை “மூசாரி உற்சவம்” எனக் கொண்டாடுகின்றனர். விக்கிரகம் செய்தது போக மீதியிருந்த உலோகத்தைக்கட்டி சுவாமியின் தோளில் தொங்க விட்டிருக்கிறார்கள். இந்தச் சந்தான கோபால கிருட்டிணன் பிரும்மா, திருமால், மகேசுவரன் ஆகிய மூவரும் ஒருங்கிணைந்த பூர்ண சக்தியாக எழுந்தருளியிருப்பதால்

"பூர்ணத்ர ஈசா" என்று அழைக்கின்றனர். இதனால் இங்கு கணபதிக்குத் தவிரத் திருமால் ஒருவரே இறைவனாக வழிபடப்படுவதால் வேறு தேவதைகளோ உபதேவதைகளோ கோயில் கொள்ள வில்லை.



## கொச்சியில் ஒரு வெங்கடாச்சலபதி

கொச்சி மட்டாஞ்சேரியில் தெற்கு சேர்வாய் என்னும் பகுதியில் திருமலைத்தேவர் எனப்படும் வெங்கடாச்சலபதிப் பெருமாள் கோயில் உள்ளது.

கொச்சிக்கு எப்படி வெங்கடாச்சலபதி வந்தார். இவர் கொச்சி வந்த வரலாறு இது. 1472ஆம் ஆண்டில் விசய நகரப் பேரரசர் சாளுவநரசிம்மர் திருப்பதியை அடுத்துள்ள சந்திர கிரியைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தார். திருப்பதி ஏழுமலையான் மீது மிகுந்த பக்தியுடையவர். தினமும் திருப்பதி சென்று திருமாலைத்தரிசித்து வந்தவராய் வயதாகிவிட்டபோது செல்ல வியலாமையால் தம்முடைய அரண்மனையிலே நிலையான ஆலயம் உருவாக்கினார். திருப்பதிப் பெருமாள் விக்ரகத்தையும் தாமே உருவாக்கிக் கொண்டார். அவருக்குப் பின் விசயநகர் எதிரிகளின் தாக்குதலுக்கு ஆளாயிற்று.

அப்போது அர்ச்சகரின் கனவில் பெருமாள் தோன்றி விசய நகரமே தீக்கிரையாக விருப்பதால். தன்னை எடுத்து அருகிலுள்ள காட்டிலுள்ள பாழுங்கிணற்றில் போட்டு விடப் பணித்தார். முப்பத்திரண்டு ஆண்டுகளுக்குப்பின், மத்துவமடத்தின் மடாதிபதியும், தலைவரும், இராகவேந்திரரின் குருவுமான, விஜயீந்த தீர்த்தரின் சீடரும் ஆன அருளாளர் சுதீந்திர தீர்த்த சுவாமிகள் ஹம்பிநகருக்கு வருகை புரிந்தபோது பெருமாள் அவர் கனவில் உதித்துத்தாம் இருக்குமிடத்தைக் காட்டித் தம்மை வழிபடப் பணித்தார். அவ்வாறே அவரும் செய்தார்.

ஹம்பியிலிருந்து புறப்பட்டுக் கடைசியில் கொச்சி வந்தபோது ஸ்ரீ மாலபாய் என்பவர் பெருமானைத் தங்களிடம் தந்து விடும்படி கேட்டார். அதற்கு சுவாமிகள் பெருமாளை முழுவதும் மறைக்கும் அளவிற்குத் தங்கத்தால் கனகாபிடேகம் செய்து அதன்பின் அந்தப் பொன்னைத் தம்மிடம் அளித்து விட்டுப் பெருமாளை எடுத்துச் செல்ல அருளினார். ஆனால் ஸ்ரீமாலபாயினால் விக்ரகம் முழுவதும் மறைக்கும் அளவுக்குப்

பொன் அபிடேகம் செய்ய இயலாது போயிற்று. பின் ஊர்மக்களும் கூடிப் பொன் வழங்கவே அபிடேகம் நடைபெற்றது.

வேங்கடாசலபதி இவ்வாறாகக் கொண்ட சாரதவத பிராமணர்களுக்குச் சொந்தமாகிக் கொச்சியில் திருமலைத் தேவர் ஆனார். கொச்சி அது முதல் கோ ஸ்ரீபுரம் என்றாயிற்று. கொச்சியில் டச்சுக்காரர்கள் ஆதிக்கம் ஏற்பட்ட வேளையில், 1790 இல் பதவிக்கு வந்த சக்தன் தம்புரான் என்னும் மன்னர் திருமலைத்தேவரின் சொத்துக்களைக் கவர முயன்றார். எனவே மகாஜனங்கள் எனப்பட்ட பெருமாளடியார்களான அந்தணர்கள் தொல்லையிலிருந்து விடுபடக் கொச்சியை விட்டு ஓடி ஆலப்புழை சென்றபோது திருமலைத்தேவரையும், அவர் அணிகலன்களையும் உடன் கொண்டு சென்றனர்.

ஆலப்புழையில் சுங்கம் எனுமிடத்தில் சிறிய அறை ஒன்றில் எழுந்தருளினார். 1806ல் சக்தன் தம்புரான் இறந்ததும் திருமலைத் தேவரைக் கொச்சிக்கு மீண்டும் கொண்டு செல்ல முயன்றனர். திருவிதாங்கூர் அரசுக்குத் திருமாலைப் பிரிய மனமில்லை. சிறிய கோயிலிலிருந்த திருமலைத் தேவரை 1852 இல் பெரிய கோயில் எடுப்பித்துப் பிரதிட்டை செய்தார். பெருமாளடியார்களான அந்தணர்கள் மிகுந்த மனத்துயர் கொண்டனர். திருமலைத் தேவரைக் கடத்தத் திட்டம் தீட்டிக் கருவறையிலிருந்து எடுத்து வந்து படகு மூலம் கொச்சி வந்து சேர்ந்து விட்டார்கள்.

இவ்வாறு திருமலைத் தேவரைக் கடத்தியது திருவாங்கூர் அரசுக்கு மானப் பிரச்சனை யாயிற்று. திருமாலைத் தங்களிடம் ஒப்படைக்குமாறு கொச்சி அரசுக்குத் தகவல் அனுப்பினார். இறுதியில் ஆங்கிலேய அரசின் சமாதானப்படி இறுதியில் கொங்கணிச் சமூகத்திற்கு உரியதாயிற்று.



## மாபலியாய் நின்று அருளும் பெருமாள்

மூன்றடி மண் கேட்டான் அந்த மாயவன் என்பதும், மூன்றாவது அடியினை மாபலிச்சக்ரவர்த்தியின் முடி மீது வைத்தார் என்பதையும் அறிவோம். அந்தப் பரந்தாமனைப் பார்க்க வேண்டுமானால் பரசுராமன் சேத்திரமான கேரளத்து திருக்காக்கரா செல்ல வேண்டும். அங்கு உள்ள பெருமாள் திருக்கோயிலுக்கு வாமனர் அம்பலம் என்று பெயர்.

இத்திருக்கோயிலில் திருமால் மாபலிக்கு விசுவரூபம் காட்டியருளிய திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார்.

திருமால் மாபலியின் தலையில் மூன்றாவது அடியை வைத்ததும் "நான் ஆண்டுக்கு ஒருமுறை உலக மக்களைச் சந்திக்க விரும்புகிறேன். அதற்கு வரம் அருள வேண்டும்" என்று கேட்டாராம். திருமகள் செல்வனும் இவ்வாறே வாக்களித்தார்.

அந்த நாளைத்தான் ஆவணி மாதம் திருவோணத்தன்று கேரளமக்கள் கொண்டாடுகின்றனர். அத்திருநாளைப்புத்தாடை உடுத்தி மகிழ்வுடன் கொண்டாடுகின்றனர் அதுவே திருவோணத் திருநாள்.



## வில்வமங்க சுவாமியாருக்குத் தோற்றமளித்த குருவாயூரப்பன்

கேரளத்து மக்களால் கொண்டாடப்படும் வில்வமங்கல சுவாமி என்பவர் குருவாயூரப்பனுக்குத் தெருக்காவு என்னும் திருத்தலத்தில் திருமாலுக்கு ஆலயம் எழுப்பிய வரலாறு இது .

வில்வ மங்கல சுவாமியார் கேரளத்தில் பல திருத்தலங்களுக்கும் எழுந்தருளியவர். அவர் தெருக்காவு (ஆறாட்டுப்புழைக்கு அருகில் உள்ளது) திருத்தலத்திற்கு வருகை புரிந்த போது நன்கு இருட்டிவிட்டது.

அப்போது தொலைவில் விளக்கொளி தென்படவே அதனை நோக்கி நடந்தார். அருகில் சென்றபோது சிறுவன் ஒருவன் கையில் தீப்பந்தங்களை வைத்துக்கொண்டு எதிரிலிருந்த மாமரத்தின் மீது வீசிக் கொண்டிருந்ததைக் கண்டார்.

"கையில் தீயை வைத்தா விளையாடுவது?" என அச்சிறுவனிடம் கேட்டார் சுவாமியார்.

பையன் அவரிடம் விதண்டாவாதமாக "தீ வைத்துக் கொண்டு விளையாடினால் உமக்கென்ன? உமக்கு என்ன அதனால்? உமக்கு என்ன வேண்டும். அதைச் சொல்லும்" என்றார்.

சிறுவனிடம்தனக்குத் தங்க இடம் வேண்டும் என்று வினவினார். அந்தப் பையன் அவரைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று ஓரிடத்தைக்

காட்டி, “இன்று இங்கு உறங்குங்கள். ஆனால் இடம் மாறியிருப்பதால் வழக்கமாக நீங்கள் செய்யும் பாராயணங்கள் ஒன்றையும் விட்டு விடாதீர்கள். நீங்கள் போற்றும் மந்திரங்களைக் கேட்பவர் உங்கள் அருகில் இருப்பதாகவே எண்ணிக் கொள்க” என்று கூறி மறைந்தான்.

சுவாமியாருக்கு ஆச்சரியம் அளவிட இயலாததாயிற்று. “யார் இச்சிறுவன். இவனுக்கு எப்படி நான் அனுதினமும் விஷ்ணு சகசுகர நாமம் பாராயணம் செய்வேன் என்பது தெரியும்?.” என்றெல்லாம் எண்ணியவாறே இரவில் படுத்து உறங்கி விட்டார்.

காலையில் அவர் கண்விழித்தெழுந்த போது தாம் படுத்திருந்தது ஒரு திருத்தலத்தில் என்பதை அறிந்ததுடன் தம்மை வழி நடத்தி அங்கு அழைத்து வந்த சிறுவன் குருவாயூரப்பன் என்பதையும் உணர்ந்தார்.

அங்கு ஒரு கோயிலை எழுப்பி நான்கு கரங்களுடைய திருமாலைப் பிரதிட்டை செய்தார் குருவாயூரப்பன் சிறுவனாக வந்து மாமரத்தின் தீபங்களை வீசியெறிந்த நாள், கார்த்திகை மாதம் குருவாயூர் ஏகாதசிக்கு மறுநாள். இதை நினைவு படுத்தும் வகையில் ஆலயத்தின் பக்கத்திலுள்ள மாமரத்தில் ஒவ்வோர் ஆண்டும் அத்தினத்தில் பெரியவர்களும் சிறுவர்களும் தீப்பந்தம் எறிந்து விளையாடுவர்.

இத்திருமாலுக்குப் *பால் பாயசம்* நைவேத்தியம் படைத்து வழிபட்டால் நினைத்த காரியம் நிச்சயம் நிறைவேறுமாம். அவர் குழந்தைப் பேற்றையும் அளிக்க வல்லவர் என்று கூறுகின்றனர்.



## *கூடல் மாணிக்கப் பெருமாள்*

கூடல் மாணிக்கம் என்ற ஊரின் இன்றைய பெயர் இரிஞ்ஞாலக்குடா. இவ்வூர் திருமாலைப் பரதாழ் வாராகப் போற்றுகின்றனர்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அடந்த காட்டுப் பகுதியாக இப்பகுதி இருந்தது. அங்கு வாழ்ந்த பலமுனிவர்களில் குலிபின் முனிவர் என்பவர் எல்லோருக்கம் மூத்தவராக விளங்கினார். ஓமக்குண்டலத்துப் புகை விண்ணை எட்டும் அளவிற்குக் கடுமையான யாகம் ஒன்றை முனிவர்கள் திருமாலின் பேற்றை வேண்டி நிகழ்த்தினர்.

பரந்தாமன் அவர்கள் எதிரில் தோன்றி வேண்டுவன கேட்ட போது தங்களுடன் தங்கிட வேண்ட அவ்வாறே திருமாலும் உடன்பட்டார்.

ஒரு நாள் இத்தலத்து மூர்த்தியின் நெற்றியிலிருந்து அசாதாரண ஒளி தோன்றியது. அப்பேரொளியின் பிறப்பிடம் அறிய, அதன் சிறப்பை உணர அரசிடமிருந்து விலையுயர்ந்த மாணிக்கக்கல் ஒன்றைக் கொணர்ந்து இவ்விரு ஒளியையும் ஒப்பிடுகையில் வைத்திருந்தவர் கையிலிருந்த மாணிக்கம் நடுவிலிருந்து விக்ரகத்துடன் கலந்து விட்டதால் கூடல் மாணிக்கம் ஆயிற்று என்பர்.

இன்று கூடல் மாணிக்கத்துள்ள மூல மூர்த்தி சிவனாகவும் தேவியாகவும் வழிபடப்பெறுகிறார். இது ஏன்? தளிப்பரம்பா ஊரைச் சேர்ந்த ஒருதவஞானி முன்னொரு காலத்தில் பக்திப் பயணம் மேற்கொண்டார். கேரளத்திலுள்ள முக்கிய ஆலயங்களுக்குச் சென்று அங்குள்ள சைதன்யன்களைத் தாம் கொண்டு சென்ற சங்கில் நிரப்பித் தம் ஊர் ஆலயத்து மூலமூர்த்தியுடன் இணைத்து விட அவாக் கொண்டார்.

அவர் இரிஞ்ஞாலக்குடா வந்தபோது கால் இடறிக்கீழே விழ, அவர் கையிலிருந்த சங்கு உடைய அப்போதே அவர்தேக்கிவைத்திருந்த அனைவர்களின் சக்தியும் ஒன்று திரண்டு இரிஞ்ஞாலக்குடாவின் மூர்த்தியோடு ஒருங்கிணைந்து விட்டன. இவ்வாறு சக்திகள் பல கூடியதால், சங்கமமானதால், இறைவன் சங்கமேசுவர் என்றும் கூடிய இடம் கூடல் மாணிக்கம் என்றும் ஆயிற்று.



## கவிஞர் பூந்தானமும் குருவாயூரப்பனும்

கேரளநாட்டுக் கவிஞர் பூந்தானத்தை அலட்சியமாகக் கருதிய அந்நாட்டு நாராயண பட்டதிரிக்குக் குருவாயூரப்பன் பாடம் புகட்டினார் என முன்னர்க் கண்டோம். பகவான் நிகழ்த்திய பூந்தானக் கவிஞர் தொடர்பான திருவிளையாடல் மற்றொன்று இது .

பகவான் குருவாயூரப்பன் ஒரு பிருமச்சாரிவடிவில் பட்டதிரி இல்லத்திற்குச் சென்றார். அப்போது பட்டதிரி நாராயணீயத்தைப் பாராயணம் செய்து கொண்டிருந்தார். மானுட வடிவில் இருந்த பகவான், முதலில் சுலோகத்தில் ஒருதவறும், இரண்டாவதில் இரண்டு தவறுகளும், மூன்றாவதில் மூன்று தவறுகளும் இருப்பதாகக் குறிப்பிட்டார். பின்னர்

இறைவன் திருவிளையாடலை உணர்ந்து பூந்தானத்திடம் அவருடைய நூலைக் குறைத்துப் பேசியதற்கு மன்னிப்பு வேண்டினார் என்றும் குறிப்பிடுகின்றனர்.

ஒரு சமயம் பூந்தானம் "அமரப்பிரபு" என உச்சரிப்பதற்குப் பதிலாக "மரப்பிரபு" என உச்சரித்ததைக் கேலியாகப் பட்டதிரி "பகவான் மரப்பிரபு இல்லை" எனக் கூறினராம். இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ குருவாயூரப்பன் "நான் அமரப்பிரபு, மரப்பிரபு மட்டுமல்ல, சர்வப்பிரபுவும் கூட" என்று பதில் கூறினாராம். இதைக் கேட்ட பட்டதிரி வாயடைத்துப் போனாராம்.

ஒரு நாள் குருவாயூர் ஆலயத்தில் பூந்தானம் சாப்பிட உட்கார்ந்த போது அவரை யாரோ ஒருவர் எழுப்பி அவமானப்படுத்திவிட்டார். அவர் மனம் வருந்தினார். அப்போது அவருடைய செவியில் குருவாயூரப்பனின் குரல் கேட்டது . குருவாயூரப்பன் அவரிடம், இனிமேல் தம் ஆலயத்திற்கு அவர் வரவேண்டுவதில்லை எனவும், தாமே அவர் இல்லம் வருவதாகவும் குறிப்பிட்டாராம். இதைச் செவியில் கேட்ட பூந்தானம் தம் இல்லம் சென்ற போது, அவருடைய இல்லத்தில் வடக்குப் பக்கத்தில் குருவாயூரப்பன் அவருக்குக் காட்சியளித்தாராம்.

அந்த இடத்திலே கவிஞர் கோயில் ஒன்று எழுப்பிக் குருவாயூரப்பனை வழிபட்டார். அந்தத்தலம் தான் இடதுபுறத்து அம்பலம் அல்லது வாமபுரம் சேத்திரம் என்று அழைக்கப் பெறுகிறது.



## வள்ளத்தோல் கவிஞரின் "ஆமோதிரம்"

கவிஞர் பூந்தானம் ஒரு சமயம் கோழிக்கோடு சாமுதிரி அரசரிட மிருந்து அன்பளிப்பாகப் பெற்ற பணத்துடன் குருவாயூருக்கு வந்து கொண்டிருந்தார். நல்ல இருட்டு வேளையாகிவிட்டது. திருடர்கள் சிலர் அவரைப் பின் தொடர்ந்தனர். பூந்தானம் குருவாயூரப்பனை மனதில் தியானித்தவாறு வந்து கொண்டிருந்தார்.

அப்போது சாமுதிரியின் படை வீரர்களுடன் வந்த தளபதி மங்காட்டச்சன் என்பவர் திருடர்களை அடித்துத் துரத்திவிட்டுப் பூந்தானத்தைப் பாதுகாத்தான். இதற்கு நன்றிக் கடனாகப் பூந்தானம் தன் மோதிரத்தை கழற்றி அத்தளபதிக்கு அன்பளிப்பாக வழங்கினார்.

மறு நாள் விடியற்காலை குருவாயூரப்பன் கோவில் மேல் சாந்தியின் கனவில் குருவாயூரப்பன் தோன்றினார். அப்போது அவர் மேல் சாந்தியிடம் தன் கைவிரல் மோதிரத்தைக் கழற்றிப் பூந்தானத்திற்கு அளிக்கும் படி கட்டளையிட்டார். மேல் சாந்தி அவ்வாறே செய்தார். மேல் சாந்தியிடம் அம்மோதிரம் பூந்தானத்தினுடையது என்று குருவாயூரப்பன் கனவில் கூறினார்.

குருவாயூரப்பனே தளபதி வடிவில் வந்து தன்னைக் காத்தவர் என்னும் உண்மை அப்போது பூந்தானத்திற்கு புரிந்தது.

ஒரு சமயம் பூந்தானத்திற்கு உதவியாகக் குருவாயூரப்பன் வந்தார். எப்படி? பூந்தானம் குருவாயூர்க் கோயிலில் உரை நிகழ்த்தியபோது ருக்மணி, கண்ணனுக்கு ஓர் ஓலை அனுப்பினார் என்று கூறினார்.

அப்போது கூட்டத்தில் ஒருவர் பாகவதத்தில் அவ்வாறு கூறப்படவில்லை என மறுத்துரைத்தார். அது மட்டுமல்லாது ருக்மணி, பிராமணர் ஒரு வரைத்தான் அனுப்பினார் என்று இருக்கிறது என்னும் தவறைச் சுட்டிக் காட்டினார். அதுதான் உண்மை.

தன் அடியவரைக் கைவிடாது காப்பவன் ஆயிற்றே அந்தப் பரந்தாமன். பூந்தானம் என்ன செய்வது? என்ன பதில் கூறுவது? என்று புரியாமல் விழித்த போது உடனே கோயிலிலிருந்து, குருவாயூரப்பன் பூந்தானத்திடம் "பிராமணன் அனுப்பினான் என்பது சரி, பிராமணன் என்கையில் கடிதம் கொடுக்கவில்லை என எங்காவது இருக்கிறதா? என்று கேள்" என்று பதிலைச் சொல்லிக் கொடுத்தாராம்.

பூந்தானம் தம் உலக வாழ்வை நீக்கவிருந்த முதல் நாள், குருவாயூரப்பன் அவருக்கு விமானம் எடுத்து வருவதாகக் கனவு கண்டார். மறுநாள் அவர் கண்ட கனவு பலித்தது. மறுநாள் வந்த பகவானுக்கு அறுசுவை விருந்து படைத்தார். வைகுண்டப் பயணம் மேற்கொண்டார்.



# குருவாயூரப்பனும் குரூர் அம்மாவும்

நாராயணபட்டதிரி, கவிஞர் பூந்தானம் போன்ற கண்ணன் பக்தியில் சிறந்தோங்கிய பெண்மணி புரையனூர் மனையைச் சேர்ந்த குரூர் அம்மா என்பவர். கணவனை இழந்த கிருஷ்ண பக்தையான அவரிடம் கண்ணன்

குழந்தையைப் போல் பழகியிருக்கிறான். நடுவில் மடத்து வில்வமங்கள சுவாமி என்பவரும் இவருடைய காலத்தில் வாழ்ந்திருக்கிறார். வில்வமங்கள சுவாமியும் கிருஷ்ண பக்தரே.

வில்வமங்கல சுவாமியின் பக்தியை விடக் குரூர் அம்மாவின் பக்தி பெரிது எனக் குருவாயூரப்பன் காட்டிய நிகழ்ச்சி ஒன்று கேரளத்தில் கூறப்படுகிறது.

குருவாயூர் ஆலயத்தில் நம்பூதிரி ஒருவர் வயிற்று வலியால் துடித்த போது, குரூர் அம்மாவிடம் நோயைப் பற்றிக் கூறினால் பலன் கிடைக்கும் என்று கூறவே குரூர் அம்மா "நாராயணா, குருவாயூரப்பா, கிருஷ்ணா என்று சுதாசர்வகாலமும் வாய்விட்டுக் கதறி கண்ணீர் பெருக்கினால் நோய் தீர்ந்து விடும்" என வழி காட்டினார் அந்த அம்மையார். இடையறாத நாம சங்கீர்த்தனம், நாம ஜெபத்தினால் மூன்றே ஆண்டுகளில் தீர்ந்து விட்டது.

குருவாயூரப்பன் நிகழ்த்திக் காட்டிய இந்த அற்புதத்தை வில்வமங்கலம் சுவாமியாரிடம் கூறிய போது, நான்கு பிறவிகளுக்குத் தொடர வேண்டிய நோய் ஒரே பிறவியில் தீர்ந்தது எப்படி என ஆச்சரியமடைந்தார்.

இதில் ஒரு பின்னணி உள்ளது. குருவாயூரப்பனிடம் அந்த நம்பூதிரி பொருட்டு வில்வமங்கல சாமியார். வேண்டியபோது, அவருடைய நோய் நான்கு பிறவிக்கு நீடிக்கும் எனக் குருவாயூரப்பன் கூற, அவ்வாறே வில்வமங்கலம் சுவாமியாரும், அந்த நம்பூதிரியிடம் கூறியிருந்தார். இப்போது தன் வாக்கைக் குருவாயூரப்பன் பொய்யாக்கி விட்டாரே, ஏன் அவ்வாறு செய்தார்? என்று அவரிடம் கேட்டார்.

குருவாயூரப்பன் தாம் சொன்னது பொய் இல்லை என்றும், நம்பூதிரியின் நோய்க் காரணத்தையே வில்வ மங்கலம் சுவாமியார் கேட்டதாகவும், குரூர் அம்மாவோ அந்த நோயிலிருந்து விடுபடும் வழியைச் சொல்லிக் கொடுத்தாள் எனவும், தன் நாமங்களை உள்ளன்போடு உச்சரித்தால் பலன் கிட்டும் என்றும் அவர் கூறியதை மெய்ப்பித்தேன் என்றும் பகவான் பதில் கூறினாராம்.



## கை கொடுக்கும் ஆஞ்சநேயர்

கேரள மாநிலத்துள்ள இரிஞ்சாலக் குடா திருத்தலத்தில் பரதாழ்வார், தம் சகோதரர் இராமபிரானின் வருகைக்காகக் காத்திருக்கிறார். ஏன் அவ்வாறு பரதாழ்வார் காத்திருக்கிறார் என்பதற்காகக் கூறப்படும் காரணம் இது. அவரிடம் ஆஞ்சநேயர் "ஸ்ரீ இராமபிரான் வந்து கொண்டேயிருக்கிறார் நீ தீக்குளிக்க வேண்டாம்'' என்று கூறியது கேட்டுப்பரதன் உள்ளம் குளிர்ந்து காத்திருக்கிறாராம்.

இத்திருக்கோயில் மடப்பள்ளியில் ஆஞ்சநேயர் நித்திய வாசம் – அதாவது என்றென்றும் இருப்பதாக நம்பிக்கை உள்ளது. இதற்குச் சான்று வேண்டுமல்லவா?

இத்திருத்தலத்தில் இங்குள்ள மடப்பள்ளியில் எவ்வளவு பெரிய பாத்திரத்தில் இராமபிரானுக்கு நைவேத்தியம் தயாரானாலும் ஒருவரே அதை அடுப்பிலிருந்து இறக்கி வைக்கும் அதிசயம் நடக்கிறது. இறக்குபவருக்கு மறுபுறம் ஆஞ்சநேய மூர்த்தி இருந்து கை கொடுத்து பாத்திரத்தைக் கீழே இறக்கிவைக்க உதவுகிறார் என்பது நம்பிக்கை. இன்றும் கூட இந்த அதிசயம் இரிஞ்சாலக்குடாவில் நடைபெறுகிறது.



## அன்னபூரணி ஆசைப்பட்ட கிருட்டிணன்

திருச்சம்பரம் என்றும் ஊர் கேரளமாநிலத்தில் உள்ளது. திருச்சம்பரம் கிருட்டிணனையும், செருகுன்னு என்னுமிடத்து அன்னபூரணி ஆலயத்தையும் தொடர்பு படுத்தி ஒரு வேடிக்கையான கதை உள்ளது.

செருகுன்று அன்னபூரணி கிருட்டிண பகவான் மீது ஆசை கொண்டு விட்டாளாம். அதனால் அன்னபூரணியின் வேண்டு கோளுக்கிணங்கி கிருட்டிணன் தமது சொத்துக்களை யெல்லாம் ஒவ்வொன்றாக இழந்தாராம். நெல்வயல், தோப்புகள் செருகுன்று ஆலயத்திற்குச் சொந்த மாயினவாம்.

அன்னபூரணி, கண்ணன் இவ்வாறு செய்யலாமா, உறவு விட்டு விடச் செய்யலாமா என மனம் வருத்திக் கேட்டதால் விஷுப்பண்டிகையின் போது செருகுன்று ஆலயத்திற்கு வெகுமதிகள், சிறப்புக்கள் அனுப்பிவைப்பதாக வாக்களித்தாராம். அதனால் இன்றைக்கும் செருகுன்று

ஆலயத்திற்கு, இரண்டாம் நாள் விழாவின் போது திருச்சம்பரம் ஆலய யானைகளும் வெகுமதிகளும் அனுப்பிடப் பெறுகிறதாம்.



## மீன் குளத்துக் கண்ணன்

கேரள மாநிலத்துப் பையனூர் அருகில் 24 கிலோ மீட்டர் தொலைவில், பிலாத்ரா என்னமிடத்துக்கு அருகில் உள்ள மீன் குளம் கண்ணன் கோயில் எழில் மிக்கக் கண்ணனின் கோயில். இருகைகளிலும் வெண்ணெய் உருண்டைகளை ஏந்தியுள்ள அழகிய தோற்றம் உடையவர் இக்கண்ணன்.

இந்தக்கண்ணன் எப்படி வந்தார்? வில்வமங்கல சுவாமியார் யமுனைக் கரையில் தியானம் செய்யும் போது அவர் தியானத்தில் ஒளிமயமான நவநீத கிருட்டிணன் தோன்றக் கண்டார். ஆனால் அந்தப் பேரருளாளர் உரு மறைந்து விட்டது. கண்களைத் திறந்த போது அலைகளின் மீது கண்ணைப் பறிக்கும் போது ஒளியொன்று படர்ந்திருந்தது.

அதனால் ஈர்க்கப்படும் நதியில் மூழ்கி எழுந்தவரின் கைகளில் அழகான கண்ணனின் மூன்று உருவச்சிலை கிடைத்தன. கண்ணனின் எழில் வடிவில் மயங்கினார். கற்சிலையாக அதனைக் கருதாது கிருட்டிண பகவானே என எண்ணி மகிழ்ந்தார்.

பரசுராமத் தலத்திற்குத் தம்மைக் கொண்டு செல்ல அச்சிலைகள் வேண்டின. அவற்றை எடுத்து அவ்வாறே பையனூர் சுப்பிரமணிய தலத்திற்குச் சுமார் பத்து கல் வடகிழக்கில் ஓரிடத்தில் இயற்கையகைதியில் திளைத்த இடத்தில் கிருட்டிணனைப் பிரதிட்டை செய்தார். அந்தக் கிருட்டிணனே மீன் குளத்துக் கிருட்டிணன் ஆவார்.



## ''பசிக்கிறது'' என்ற பரந்தாமன்

கேரளத்தில் தொடுபுழா என்னுமிடத்திலுள்ள கிருட்டிணபகவான் தான் பசிக்கிறது என்று கேட்ட பரந்தாமன். பகவத் பாதாள்

ஆதிசங்கராச்சாரியாரின் நான்கு சீடர்களில் ஒருவரான தோடகாசாரியார் நிறுவிய மடத்து நம்பூதிரி சந்நியாசி ஒருவர் தொடுபுழா வந்து தங்கினார்.

அவர் ஆற்றங்கரையில் தியானத்தில் அமர்ந்திருந்த போது சுவாமி பாலகிருட்டிணனாக அவருக்குத் தரிசனம் தந்தார். சந்நியாசியைப் பார்த்துப் "பசிக்கிறது" என்றாராம், பாலகிருஷ்ணன்.

அப்போது முதல் நைவேத்தியம் படைப்பதற்காக வெண்கலத்திலாலான ஒரு பீடம் பயன்பட்டு வந்துள்ளது. இன்றும் அது கருவறையில் இருந்து வருகிறது. இத்திருக்கோயிலில் காலையில் கோயில் திறந்தவுடன் கீழ் சாந்தி நைவேத்தியத்துடன் கருவறையினுள் சென்று நைவேத்தியம் செய்த பின்தான் நிர்மால்ய தரிசனம் பக்தர்களுக்குக் கிட்டுகிறது. அதன் பின்னர்தான் அபிடேகம், பூசை, அர்ச்சனை முதலியன நடக்கின்றன. பசி என்ற பரந்தாமன் ஆதலால் முதலில் அவன் பசியைப் போக்கிப் பின் அபிடேகம் முதலியன செய்வதாக ஐதீகம்.



## *எங்கும் உன்னைத் தரிசிக்கலாம்*

திருப்பதியில் இராமானுச ஏரியை வெட்டி நந்தவனம் உருவாக்கினார் அனந்தாழ்வார் என்று பார்த்தோம். அந்த அனந்தாழ்வார் மலர்களைப் பறித்துப் பெருமாளுக்குச் சூட்டி மகிழுவார்.

ஒரு நாள் பாம்பு ஒன்று அவரைக் கடித்து விட்டது. அவர் கவலைப்படவில்லை. வழக்கம் போல மலர்களைத் தொடுத்து எடுத்துக் கொண்டு பெருமாளைச் சேவிக்கச் சென்றார்.

"என்ன அனந்தாழ்வாரே, பாம்புக் கடிக்கு மருந்து போட்டுக் கொள்ள வில்லையா?" எனப் பெருமாள் கேட்டாராம்.

அனந்தாழ்வாரோ, அமைதியாகப் பெருமாளே "கடித்த பாம்பு சாதாரண பாம்பாக இருந்தால் இராமானுச ஏரியில் குளித்துத் திருப்பதியில் தொழுவேன். கடித்த பாம்பு நஞ்சுள்ளதாக இருந்தால் வைகுண்டத்திலேயே வந்து தரிசிப்பேன்" என்றாராம்.



## கண் திறக்கப்படாத தாயார்

திருநாவாய் எனும் திருத்தலம் மலப்புரத்தில் திரூருக்கு அருகில் அமைந்திருக்கிறது. திரு மங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட இத்தலத்தினை 108 திவ்ய தேசங்களில் 96வது திவ்விய தேச மாகக் கூறுகின்றனர். இக்கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமாளின் திருநாமம் நவாமுகுந்தன் என்பதாகும். மலர்மங்கை நாச்சியார் என்பதும் சிறுதேவிநாச்சியார் என்பதும் தாயாரின் திருநாமங்கள்.

இந்தத் தாயாரின் கண்கள் சிற்பியினால் திறக்கப்படாமல் இன்றுவரை மூடியே உள்ளன.

சிலையைச் செதுக்கிய சிற்பி, தாயாரின் கண்ணைத் திறக்க மறந்து விட்டார். அன்றுபொழுது சாய்ந்த பின்னரே இதை உணர்ந்த அவர் தம் மனைவியிடம் "நாளைக் காலையில் தாயாரின் கண்ணைத்திறக்க வேண்டும்" என்று கோயிலில் வைத்துச் சொல்லிக் கொண்டிருந்தார்.

"எதற்குத் திறக்க வேண்டும்?" என்றும் குரல் கேட்டுத் திடுக்கிட்டுப் பார்த்தார். அவர் செய்த சிலை வடிவில் இருந்த தாயார் தான் இக்கேள்வியைக் கேட்டவர். எனவே கண் திறப்பதற்கு முன்னே சிலை உயிர் பெற்று விட்டதால் இனிமேல் கண் திறப்பு நிகழ்த்த வேண்டுவதில்லை என உணர்ந்து அப்படியே விட்டு விட்டார். இதனால் இன்றும் திருநாவாய் திவ்ய தேசத்தில் மலர்மங்கை நாச்சியாரின் கண்கள் திறக்கப்படாமலே உள்ளன.



## திருப்பதி கோவிலில் கடப்பாரை

திருப்பதி பெருமாளே திருக்கோவிலுக்குச் செல்பவர்கள் அங்கே ஓர் அதிசயத்தைக் காணாமல் வந்திருக்கக்கூடும். அடுத்தமுறை செல்லும்போது அவசியம் தவறாமல் பாருங்கள்.

திருப்பதி கோவில் கோபுர வாசலின் உள்ளே வடதிசைச்சுவரின் மேற்புரத்தில் கடப்பாரை ஒன்று பொருத்தப்பட்டுள்ளது.

இது எப்படி வந்தது? இராமானுஜரின் கட்டளைப்படி திருப்பதியில் நந்தவனம் ஒன்று அமைத்தார் திருமலை அனந்தாழ்வார். நாள்தோறும் அதில் பூப்பறித்து மாலை கட்டி, ஏழுமலையானுக்குச் சாத்தி வந்தார்.

இந்த நந்தவனத்துச்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்ற ஏரி ஒன்றைத் தாமே வெட்டினார். அவர் மண்ணை வெட்டி, வெட்டித் தோண்டிப்போட அவர் மனைவி கூடையில் அள்ளிப்போய்க் கொட்டினாராம். அவர் பயன்படுத்திய கடப்பாரைதான் இன்றும் அங்கே இருக்கிறது.



## நின்ற திருக்கோலத்தில் ஆதிசேடன்

திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் செல்லும் வழியில் உள்ள திருவைகுண்டத்தில் பெருமாள் ஆதிசேசன் குடை பிடிக்கப் பெருமாள் நின்ற திருக்கோலத்தில் இருப்பது தனிச்சிறப்பானதாகும்.

ஒரு சமயம் கால விதூஷகன் என்ற திருடன் தான் திருடிப்பொருட்களில் பாதியை திருவைகுண்டநாதனுக்குச் சமர்ப்பித்து வந்தான். ஒருமுறை அவன் அரண்மனையில் திருடி அகப்பட்டுக் கொள்ள பகவான் திருடன் உருக்கொண்டு அரசனிடம் சென்று தத்துவ உபதேசம் செய்தார். அரசனோ வந்திருப்பது மகாயோகி என்று நினைக்கப் பின்னர் அரசனுக்குப் பெருமாள் காட்சி கொடுத்துக் கள்ளர்பிரான் என்னும் திருநாமம் பெற்றார். இத்தலத்தில் மற்றுமொரு சிறப்பு சோமன் என்றும் அரக்கன் பிரம்மாவின் ஞானத்தைக் கைப்பற்றிக் கொள்ளப்பிரம்மா இவ்விடத்தில் தவம் செய்து மீண்டும் ஞானம்பெற்றார் என்பதும் வரலாறு.



## பத்மநாப சுவாமிகள்

திருமாலின் நாபியில் (வயிற்றில்) இருந்து பத்மம் (தாமரை) தோன்றி இருப்பதால் திருவனந்தபுரம் அனந்தபத்மநாபசுவாமிக்கு பத்மநாபர் என்று பெயர் வந்தது.

திருவனந்தபுரம் ஒரு காலத்தில் சியானந்தூராபுரி என்றும் பெயர் விளங்கியது. இதன்பொருள் மகிழ்ச்சியான நகரம் என்பதாகும்.

அனந்தபுரி, அனந்தசயனநகர், திருஅனந்தபுரி என்று மாறி இன்று திருவனந்தபுரமாக மாறிற்று.



## திருவெள்ளறையில் அதிசயம்

திருச்சி மாவட்டத்தில் துறையூர்ச்சாலையில் உள்ள வைணவத்தலம் திருவெள்ளறை. இவ்வூர்ப் புருடோத்தமன் திருக்கோவிலில் உள்ள எம்பெருமானார் மண்டபத்தில் ஒரு தூண் உள்ளது. அதன் முன்னே நின்று ஒலிஎழுப்பினால் அந்த ஒலியானது தூண் உள்ள திருச்சுற்றில் மூன்று முறை சுழன்று வந்து எதிரொலிக்கிறது. முன்பு இந்த இடத்திலிருந்து நாலாயிரத்திவ்வியப்பிரபந்தத்தைப் பாடுவார்கள் எனவும், அந்த ஒலி மூன்று முறை திருப்பிக் கேட்கும் எனவும் கூறுவர்.

அக்காலத்தியப் பொறியியல் நுட்பத்திறனுக்கு இது எடுத்துக்காட்டு ஆகும்.



## திருவனந்தபுரம் அதிசயங்கள்

திருவனந்தபுரம் அனந்தபத்பநாபசுவாமி கோயிலை ஒட்டி ஆஞ்சநேயர் சிலை வடிக்கப்பட்டுள்ளது. ஆஞ்சநேயர் சிலைக்கு ஒரு சிறப்பு உண்டு. ஆஞ்சநேயர் சிலையில் எப்போதும் வெண்ணை ஒட்டிக் கொண்டிருக்கும். எந்தச் சூழ்நிலையிலும் வெண்ணை உருகாது.

1934 ஆம் ஆண்டு கோவிலில் பயங்கர விபத்து ஏற்பட்டபோது கூட ஆஞ்நேயர் மீது இருந்த வெண்ணை உருகவில்லை. இந்த ஆஞ்சநேயர் சிலையில் சித்திரை மகாராசா காலத்தில் ஆஞ்சநேயரின் ஒருகால் வளரத்தொடங்கியது. இதற்காகக் கம்பிவேலி அகற்றப்பட்டது.

மற்றுமொரு அதிசயம் அனந்தபத்பநாப சுவாமி கோயிலில் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது. ஒருமுறை மன்னர் சுவாதித்திருநாளின் எதிரிகள் அவர் மீது யானையை ஏவி விட்டனர். பிளிறி வரும் யானையைக் கண்டு பக்தர்கள் அனைவரும் ஓடி ஔிய மன்னர் சுவாதி திருநாள் மட்டும் ஆடாமல், அசையாமல் யானையை எதிர்கொண்டார். அவர்பக்கத்தில் வந்ததும் யானை பணிந்து அவர்பாதத்தில் படுத்தது. அடிக்கடி சிங்கம் உறுமும் சப்தம் பத்மநாபர் கோவிலில் கேட்பதாகக் கூறுகின்றனர். கருவறைச் செங்கற்களின் இடையில் பால் கசியும் என்கின்றனர்.



## திருப்பூர் நகர் வீரராகவப் பெருமாள்

திருப்பூர் நகரில் வீரராகவப் பெருமாள் திருக்கோவில் உள்ளது.

இத்திருக்கோவிலில் பெருமாளுக்குப் பால் பாயசம் நைவேத்யம் செய்வார்கள். இதை வாங்கி ஐந்து குழந்தைகளுக்குக் கொடுத்து விட்டுப் பிறகு குழந்தைப்பேறு இல்லாத தம்பதியர் பால் பாயச பிரசாதத்தைச் சாப்பிடவேண்டும்.

இப்படி 12 மாதங்கள் திருவோண நாள்களில் வழிபாடு செய்து, பால் பாயாச பிரசாதத்தைச் சாப்பிட்டு வரக்குழந்தைப் பேறு இல்லாதவர்களுக்குக் குழந்தைப் பேறும் வாய்க்கும் என்று நம்பப்படுகிறது.



## சக்ர ராஜன்

நிகமாந்த மகா தேசிகன் "முத்கராயுதம் என்னும் ஆயுதத்தின் அதிட்டான தேவதையும், தனது எட்டுக்கரங்களில் முறையே சங்கு, சக்கரம், வில், கோடாரி, உலக்கை, மாவெட்டி, கதை, தாமரை முதலிய ஆயுதங்களை ஏந்தியவரும், மேல்நோக்கிய தீ யொத்த தலை முடி, தித்திபற்கள், மூன்று கண்கள், கனல் பறக்கும் விழிகள் உடையவராயும் உள்ள "சக்ரராஜனை" வணங்குகிறேன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

"பொன்னி மணி கொழிக்கும் பூக்குடந்தை" என்று சிறப்பிக்கிறார் ஆழ்வார். குடந்தையின் தென்கரையில் திருவாழி ஆழ்வார் எனப்படும் சக்ரபாணிக்கு ஆலயம் அமைந்துள்ளது.

ஒரு சமயம் உலகிற்குத் தீங்குபுரியும் அரக்கர்கள் பலர் பாதாள உலகில் ஒளிந்து கொண்டனர். சாரங்கபாணியான திருமால் தனது சக்கரப்படையைப் பயன்படுத்தினார். அது அரக்கர்களை மாய்த்து விட்டுக் குடந்தையில் காவிரியில் ஓரிடத்தில் பூமியைப் பிளந்து கொண்டு வெளிவந்தது. அது சக்கர தீர்த்த கட்டம் என்று அழைக்கப்படுகிறது.

அப்போது இங்குத்தவம் முடிந்து, யாகம் செய்து, யாக முடிவில் செய்யப்படும் அவப்ருதஸ்நானம் செய்ய எண்ணிப் பிரம்மா காவிரியில் இறங்கியபோது அவருடைய கைகளில் சக்ராயுதம் கிடைத்தது. உடனே பிரம்மதேவர் சக்ராயுதத்தின் ஒளி கண்டு அதனைப் பூசித்தார்.

சூரியன் சக்கரதேவதையின் ஒளி கண்டு போட்டியிட்டுத் தனது ஒளியைப் பெருக்கவே, சுதர்சன சக்கரம் பேரொளி ஒன்றை விடுத்தது. சூரிய ஒளியையும் தன்னுள் அடக்கிவிட்டது. சூரியன் ஒளியும் வலிமையும் குன்றினால் உலகில் இருள் சூழ்ந்தது.

சூரியனும், பிற தேவர்களும் திருமாலைச் சரண் அடைந்தனர். திருமால் சூரியனுக்கு சுதர்சன மந்திரத்தைத் தினமும் ஜபித்துத் தவமி யற்றும்படி கட்டளையிட்டார். அதன்படி சூரியபகவானும் வழிபட்டார். சூரியனுக்குச் சக்கரத்தாழ்வார் வைகாசி மாதம் பௌர்ணமி திதியில் காட்சியளித்தார். மனமிரங்கிய சக்ர்ராஜன் கதிரவனுக்கு மீண்டும் பூரணசக்தி அளித்தார். சூரியன் சக்கரதேவதைக்கு ஆலயம் அமைத்தார். சக்ர்ராஜாவுக்கு வில்வ அர்ச்சனை, முக்கண்களுடன் ருத்ராம்சமாக விளங்குவதால் செய்யப்படுகிறது.

கும்பகோணம் என்னும் திருக்குடந்தையில் காவிரியின் தென்கரையில் உள்ள சக்ரபாணியை வணங்கினால் கிடைக்காதது உலகில் எதுவுமே இல்லையாம்.

இங்கு ஏழு நாள்கள் தங்கி ஆலயத்தொண்டு செய்து வேண்டுபவர்களுக்குத் தண்டனை, சிறைவாசம், சர்ப்பதோஷம் அகலுமாம்.

சக்ர்ராஜாவைத்துளசி, நறுமண மலர்களால் வழிபட்டவர் பிறவிக் கடலைத்தாண்டுகிறார்.

சக்கரராஜாவுக்கு 49 நாள்கள் வழிபாடு செய்து ஏழு நாள்களுக்கு ஒருமுறை அங்கப்பிரதட்சணம் செய்பவருக்குத் தீராத நோய் தீருமாம்.

பாயாச நிவேதனம் செய்தால் நல்லபுதல்வன் பிறப்பானாம்.

பசும்பால், நெய், கோதுமை, ரவை, ஏலக்காய், சர்க்கரைக் கலவையால் செய்யப்பட்டு நிவேதம் செய்யப்படும் பாயசம் 6 மரக்கால் அளவு செய்து, பூர்ணிமையன்று சக்ர்ராஜாவிற்குப் படைத்தால் அவ்வாறு செய்பவன் கோடீசுவரனாகிறான்.

இத்தலத்தில் உள்ள சக்ரதீர்த்தத்தில் ஈமக்கடன்கள் செய்வதால் ஒருவன் தன் ஏழு கோத்திரங்களையும், நூற்றுக்கு மேற்பட்ட குலத்தையும் கரையேற்றுகிறான் என்றும், காசியை விட உயர்ந்தது என்றும் இங்கு மரணமடைபவர்கள் நல்ல உயர்ந்த கதியடைகிறார்கள் எனவும் குடந்தைத்தலபுராணம் குறிப்பிடுகிறது.

ஒரு சமயம் பாவணன் எனும் அந்தணன் வேதாரண்யத்தில் ஆசார சீலனாய் வாழ்ந்தான். அவனுடைய தந்தை இறந்தபின் அவனுடைய அஸ்தியை எடுத்துக்கொண்டு காசிக்குக் கிளம்பினான். உடன்ஒரு சீடனையும் அழைத்துக்கொண்டு கிளம்பினான். சீடனிடம் அஸ்திப்பாத்திரத்தில் எலும்புகள் உள்ளதைப் பாவணன் கூறவில்லை. வரும்வழியில் இருவரும் சக்ரதீர்த்தக்கரையில் இளைப்பாற்றினார்கள்.

பாவணன் காவிரியில் நீராடச்சென்ற போது சீடன் ஏதாவது தின்பண்டங்கள் மூட்டையில் உள்ளதா என்று குருவின் மூட்டைகளைச் சோதித்துப் பார்த்தான். அப்போது கலசத்தில் உள்ள அஸ்தி மலர்களாக மாறிஇருந்தது. விபரம் அறியாத சீடன் அதனை மூடிவைத்து விட்டான்.

நீண்ட பயணத்திற்குப் பின் இருவரும் காசியை அடைந்தனர். காசியில் அஸ்திக்கலசத்தில் சீடன் எலும்புகளைக்கண்டான். பாவணனிடம் சீடன் தான் குடந்தையில் கண்ட தாமரை மலர்கள் இங்கு எப்படி அஸ்தியாகமாறின என்று வியப்புடன் கேட்டான். இதைக்கேட்ட குரு மீண்டும் அஸ்தியைக் கும்பகோணம் கொண்டு வர எண்ணினார். ஆனால் கங்காபுத்ரர்கள் பாவணன் முன் தோன்றிக் காசிக்கு வந்த அஸ்தியை எடுத்துச்செல்லக் கூடாது என்று தடுத்தனர்.

அப்போது ஓர் அசரீரி கேட்டது.

"கங்காபுத்ரர்களே! பாவணனின் செயல்களைத்தடுக்காதீர்கள். மற்றதலங்களில் செய்த பாவம் காசியில் தீரும். ஆனால் கும்பகோணம் சக்கரதீர்த்தத்தை அலட்சியம் செய்த பாவம் பாவணனைச் சேரக்கூடாது. எனவே பாவணனைப் போக விடுங்கள்" என்றது.

கும்பகோணம் வந்தடைந்தும் அஸ்தி மீண்டும் தாமரை மலர்களாக மாறியதாம்.

சக்ரராஜாவின் முன்பு அரைநொடி நிற்பவர்களுக்கு உலகில் கிடைக்காதது எதுவுமில்லை என்று கூறுகின்றனர்.



## சந்திரனின் சாபம் தீர்த்தபெருமாள்

தலைச்சங்காடு என இந்நாளில் அழைக்கப்பெறும் தலைச்சங்க நாண்மதியம் எனும் ஊர், செம்பொன்னார் கோயிலிலிருந்து ஆறு கிலோ மீட்டர் மாயூரத்திலிருந்து ஆக்கூர் செல்லும் பேருந்தில் இத்திருத்தலம் செல்லலாம். தலைச்சங்காட்டிலிருந்து முக்கால் கிலோமீட்டர் வயல்களுமே அடைந்துள்ளது. சிலப்பதிகாரக் காலத்திலேயே இவ்வூர் தலைச்செங்காணம் எனப் பெயர் பெற்றது என்பர்.

நாண்மதியம் என்பது முழுமதியம் என்று பொருளாகும்.

*கண்ணார் கண்ணபுரம்*
*கடிகை கடி கமழும்*
*தண்ணார் தாமரை சூழ்*
*தலைச்சங்கமேல் திசையுள்*
*விண்ணோர் நாண் மதியை*
*விரிகின்ற வெம்சுடரைக்*
*கண்ணாரக் கண்டுகொண்டு*
*களிக்கின்ற திங்கென்று கொலோ*

எனத் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

பல ஆண்டுகள் உள்ளே செல்ல வியலாதபடி சுற்றிலும் சப்பாத்திக்கள்ளி முளைத்துக் கிடந்த வேளையில் வடுக நம்பி இராமானுசதாசர் என்பவர் திருப்பணி தொடங்க முடிவு செய்தார். அதனைத் தொடங்கும்முன் அவர் மறைய அவருடைய சீடர் சுந்தர இராமானுசதாசர் என்பார் திருப்பணி செய்வித்தார். நின்ற திருக்கோலத்தில் தலைச்சங்க நாச்சியார் எனும் செங்கமல வல்லித் தாயாருடன் சேவை சாதிக்கும் இப்பெருமாள் சந்திரனின் சாபந் தீர்த்தமையால் “சந்திர சாபஹரர்” என்னும் திருப்பெயர் பெற்றார். உற்சவர் வெண்சுடர்ப் பெருமாள் கருவறைக்கு வெளியே பூரணசந்திர மண்டலத்திலே எழுந்தருளியிருக்கிறார்.



## தில்லை நடராசர் திருநடனம் காணும் பெருமாள்

தில்லை எனப்படும் சிதம்பரத்தில் கோவிந்த ராசனாய்க் குடிகொண்ட பெருமாள் சித்திர கூடத்துச் செங்கண்மால் எனப்புகழ்ந்து

"தில்லைத் திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே" என்று பாடினார். திருமங்கையாழ்வார்.

அரங்கநாதனைப்போல் கோவிந்தராசனும் காலை நீட்டிப்படுத்துக்கொண்டுள்ளார். தில்லைவாழ் அந்தணரும், அடியவரும் தில்லைத் திருநடனம் புரியும் கூத்தனைச் சேவிப்பது போலக் கோவிந்தராசனையும் சேவிக்கின்றனர் என்பதனைத் திருமங்கையாழ்வார்.

*மூவாயிரநான் மறையாளர் நாளும்*
*முறையால் வணங்க அணங்காய சோதி*
*தேவனாதி தேவன் திகழ்கின்ற தில்லை*

எனவும்,

*குலசேகராழ்வார்,*
*தில்லைநகர்த் திருச்சித்ர கூடத்தன்னுள்*
*அந்தணர்கள் ஒருமூவாயிரவர் ஏத்த*

எனவும் பாடியுள்ளார்.

திருமங்கை ஆழ்வார் தம் பாசுரங்களில் இத்திருக்கோயில் பெருமாளை "வருகின்றான்" "வருவான்" எனத்தம் பாடலில் அருளிச் செய்துள்ளார்.

இதனால் திருமங்கையாழ்வார் பெருமாளைக் காணச் சித்திர கூடம் வந்தபோது பெருமாள் திருவீதி புறப்பட்டுச் சென்று இருக்கலாம் என்று கூறுகின்றனர்.

கோவிந்தன் என்னும் திருநாமம் பசுக்களைக் காத்தவர், உயிர்களை அடிமையாக உடையவன், கதிரவன் ஒளியில் தங்கியிருப்பவன், நான்மறையை நான் முகனுக்கு உபதேசித்தவர் முதலிய பொருள்களையுடையது என்பர்.

தில்லையிலுள்ள கோவிந்தராசர் சயனத்திருக்கோலத்தை வைணவ ஆழ்வார்கள் மட்டுமல்லாது, சைவப் பெரியார் மணிவாசகரும் திருக்கோவையில் குறிப்பிட்டுள்ளார்.

இரண்டாம் குலோத்துங்கன் கடலில் எறிந்துவிட, இராமானுசர் இந்தத் திருமேனியைக் கைப்பற்றிப் பிரதிட்டை செய்தான் என்பது வரலாறு.



## எங்குச்சென்று சேர்வது?

திருமங்கை யாழ்வார்,

“திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே” என்றார்.

இப்படிப் பலத்திருப்பதிகளையும் “சென்று சேருங்கள்-சென்றுசேருங்கள்” என்கிறார்.

இதனால் வைணவ அடியார் ஒருவருக்கு ஐயம் ஒன்று ஏற்பட்டது. அவர் மற்றோர் அடியாரிடம் “இப்படிப் பலஇடங்களுக்கும் சென்று சேரச் சொல்கிறாரே எந்தத் திருத்தலத்தில் சென்று சேர்வது?” என்று வினவினாராம்.

அதற்கு மற்றொருவர், “ஆழ்வார் திருவாயில் நுழைந்து புறப்பட்ட திருப்பதிகள் எல்லாம் நாம் நுழைந்து புறப்பட வேண்டியதுதான்” என்று பதில் கூறினாராம்.

“பதியே பரவித்தொழும் தொண்டர்” என்று குறிப்பிடுவதால் எம்பெருமான் உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் சென்று சேவிக்க வேண்டும் என்பது உட்கருத்து என்கிறார் தமிழறிஞர் ஒருவர்.



## பெருமாளின் நிறம் எது?

பெருமாளின் நிறம் எது என்று கேட்டால் நீலவண்ணம் என்று நாம் பகரக்கூடும்.

ஆனால் பெருமாளின் நிறம் இதுதான் என்று கூறவியலாமல் தத்தளிக்கிறார் திருமங்கையாழ்வார்.

திருமேனியின் நிறத்தை எமக்குக் காட்டக்கூடாதா? என்று வினவிய திருத்தலம் திரு இந்தளூர் ஆகும்.

இத்தலம் மயிலாடுதுறை புகைவண்டி நிலையத்திலிருந்து வடகிழக்கில் மூன்றுகல் தொலைவில்உள்ளது. காவிரியைத் தாண்டிச்சென்றால் மயிலாடுதுறையில் வடக்குமுனையில் காணலாம்.

திருமங்கை கேட்ட கேள்விகள் இவை. பெரிய திருமடலில் காணப்படுபவை.

"இத்தளூர் எம்பெருமானே, உமக்குப் பல வண்ணங்கள் உள்ளனவாகச் சாத்திரங்கள் கூறும். கிருதயுகத்தினர் சத்துவகுணமுடையாராய், தூய நிறத்தை உகப்பராய் இருந்தமையால் அவர்கட்காகப் பால் நிற வண்ணனானீர் ; திரேதயுகத்தில் செம்மை நிறங்கொண்டீர் ; துவாபரயுகத்தில் பசுமைநிறங்கொண்டீர் ; கலியுகத்தில் எந்த நிறங்கொண்டாலும் ஈடுபடுவாரின்மையால் இயற்கையான நீலநிறத்தைக் கொண்டீர். இப்போது சிலைவடிவில் எழுந்தருளியிருக்கும் நிறம் என்ன? இதோ காணும் இதுவே என் வண்ணம் என்று உம் வடிவைக் காட்டியருளும்.

ஏழுதலைமுறையாக வந்து அடிமை செய்யும் குடியிலே பிறந்த என்னிடம் இவ்வளவு யோசனை தகுமா? உம் திருமேனி சேவிக்கத்தகுந்தவனா? தகாதவனா? என்று உரசிப் பார்ப்பது சரியாமோ? திருமேனியைக் கண்ணில் காட்ட இவ்வாறு ஆலோசிக்கின்ற நீர் ஓர் ஆலோசனையும் பண்ணாமல் நஞ்சகத்தின்பால் முன்னே வந்து குடிகொண்டுவிட்டீரே? அதனை ஏன் செய்தீர்?

நெஞ்சில் புகுந்த நீவிர் கண்ணிலும் புகவேண்டும்; கண்ணில் புகாதது போல் நெஞ்சிலும் புகாதிருக்கவேண்டும். திருமேனியின் நிறத்தைச் சிறிதும் காட்டாமலிருக்கின்றீரே. நித்யசூரிகட்டுக்காட்சி கொடுக்கும் வடிவை இந்நிலத்து உள்ளவர்க்கும். முழுத்தோற்றம் காட்டவோ இங்கு எழுந்தருளியிருக்கின்றீர்? என்று கேட்கிறார்.

ஆனால் நிறங்காட்டாத இப்பெருமாள் மணம் மிக்கவர். அதனாலே பரிமளரங்கன், சுகந்தவனநாதன், அந்நியரங்கன், மருவினிய ரங்கன் என்னும் பெயர் பெற்றவர்.

திருமங்கையாழ்வாரால் "இந்தளூர் அந்தணன்" எனப் பெற்ற பெருமாளின் தாயார் பெயர் சந்திரசாபவிமோசனவல்லி.

*நாடுதும் வா நெஞ்சமே!*
*நாராயணன் பதிகள்*
*கூடுதும் வா மெய்யடியார்*
*கூட்டங்கள்— ஆடுதும்வா*
*வீதியிந்தனத் தகிலின்*
*ஆதியிந்த வூரான் அடி.*

❖❖❖

## நாராயணன் என்றால்

நாராங்களுக்கு அயறம் என்றபடி நாராயணன் எனும் சொல்லின் பொருள் நாரங்களாவன நித்திய வஸ்துக்களின் திரள் என்பர்.

நாராயணன் என்பது வடசொல். இதற்கு நாரணாம், அயநம், யஸ்ய, ஸ : நாராயண : என்றும் ஒருவகை இலக்கணம் கூறுவர்.

முதலாவது சொற் கூறுகள் "நாரங்களுக்கு ஆதாரமானவன் எவனோ அவன் நாராயணன்" எனவும், இரண்டாவது சொற்கூறுக்கு "எவன் நாரம் ஒவ்வொன்றிலும் முழுமையாய் இருப்பவனோ அவன் நாராயணன்" என்றும் பொருள் கூறுவர்.

நாரா என்பதிலுள்ள "ர" என்னும் சொல்லிற்கு அழிவுள்ளது எனப் பொருள் "ந" அதனை மறுக்கின்றது. நர என்னும் சொல் வடமொழி இலக்கணப்படி நார என்றாகிறது. இவ்விரண்டு சொற்களும் சேர்ந்து அழிவற்றது (நித்தியம்) என்னும் பொருளைத்தரும்.

நர என்பது அழிவற்ற பொருளையும் நார என்பது அழிவற்ற பொருள்களின் திறனையும் நாரா என்பது மேற்கூறிய திரள்பல என்பதையும் காட்டாமல் நிற்கும்.



## வண்ணபுரத்தாய் - கண்ணபுரத்தாய்

திருக்கண்ணபுரம் திருக்கோயிலுக்கு உள்ள சிறப்புகளில் ஒன்று இது.

நாம் திருக்கோயிலை வலம் வரும்போது திருக்கோயிலின் விமானம் நம் கண்ணில் படுவதில்லை.

மேலும் திருக்கண்ணபுரம் பெருமாளின் திருத்தேவியர்களுள் ஒருவர் மீன்பிடித்தொழில் செய்யும் வலைச்சியர் மரபினர்.

இதன் காரணமாகக் பரதவர்கட்கு இன்னும் சிறப்பு வழிபாடு அமைக்கப்பெறுகிறது. மாசிமகத்தின் போது அம்பெருமான் கடலுக்குச் செல்லும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது.

*வண்ணபுரத்தாய் என்மனம் புகுந்தாய் வைகுந்தம்*
*கண்ணபுரத்தாய் உன்கழல்*



## *திருஅழுந்தூர் உபரிசரவசு*

உபரி சரவசு என்னும் ஓர் அரசனிடம் இருந்த ஒரு தேர் வான வீதியில் உருண்டோடும் தன்மை உடையது.

ஒருமுறை தேவர்கட்கும் இருடிகட்கும் இடையில் வழக்கொன்று எழுந்தது. அவ்வழக்கில் ஒருதலைச்சார்பாக நீதி வழுவித் தீர்ப்புக் கூறினான் இம்மன்னன்.

முனிவர்கள் இதனால் கோபமுற்று வானவீதியில் உருண்டோடும் அவனுடையதேர் "மண்ணில் அழுந்தட்டும்" என்று சாபமிட்டனர். அவர்கள் இட்ட சாபம் பலித்தது.

ஒருமுறை அவன் வானவீதியில் சென்றபோது, திருமால் கோவில் இருந்த அவ்வூர்த் திருக்கோயிலுக்கு நேராக இவன் தேர் செல்ல நேர்ந்தது.

இதனைச் சிறிதும் பொறுக்க முடியாத பெரிய திருவடியாம் கருடாழ்வார் தம் மந்திர ஆற்றலால் தேரைக் கீழே இழுத்து மண்ணில் அழுந்தவைத்துவிட்டார்.

பின்னர் உபரிசரவசு திருமால் தேவரை வழிபட்டு வணங்கி மன்னிப்பும் பெற்றுத்தேரோடு திரும்பினார். தேர் பூமியில் அழுந்திய ஊராதலால் இவ்வூரும் திருஅழுந்தூர் என்னும் திருநாமம் பெற்றது. இத்திருத்தலத்தில் பெருமாள் குடிகொண்ட இடம் அஞ்சனக்குன்றமாகும். இங்குக்குடி கொண்ட பெருமாள் ஆமருவியப்பன். தாயார் திருநாமம் செங்கமலவல்லி. திருமங்கையாழ்வார் ஒருவரால் மட்டுமே பாடப்பெற்ற திருத்தலம் திரு அழுந்தூர். இத்திருத்தலம் விழுப்புரம்—கடலூர்—திருச்சி புகைவண்டிப்பாதையில் உள்ளது. திருஅழுந்தூருக்கு இரயில் நிலையம் உள்ளது. கம்பருக்கும் அவர்மனைவிக்கும் இங்குச்சிலை உண்டு. இன்று தேரழுந்தூர் எனும் திருநாமம் பெற்றுத் திகழ்கிறது.



## ஆமருவியப்பன் எனும் பெயர் பெற்ற கண்ணன்

கண்ணபெருமானாய் அவதரித்த கண்ணன் தேரழுந்தூரில் ஆமருவியப்பனாக மாறிய செய்திகள் இவை.

கண்ணன் பிருந்தாவன எல்லையில் தன் தோழர்களுடன் ஆநிரைகளை மேய்த்துக் கொண்டிருந்தான்.

ஒருநாள் அவ்வழியாக வந்த நான்முகன் ஆநிரைகளைத் திருவழுந்தூருக்கு ஓட்டி வந்து விடுகிறார். இதை அறிந்த கண்ணன் புதிதாக ஓர் ஆநிரையையே ஓட்டி வந்ததால் நான்முகனும் தன் பிழையை உணர்கின்றான்.

நான்முகன் வேண்டுகோளின்படியே திருவழுந்தூர் சென்ற கண்ணன் பசுநிரையைக் காக்கும் கோவலனாக ஆமருவி அப்பனாய் நின்று விடுகிறான்.

கருவறையில் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கும் இக்கண்ணபிரானின் உற்சவர் திருமேனியின் பின்புறம் பசு ஒன்று நின்று கொண்டிருக்கிறது. இத்திருத்தலம் கம்பன் பிறந்த ஊராதலால், இராமகாதை பாடிய கம்பனுக்கு, இராமன் பிறந்த பங்குனிப்புனர்வசு நாளில் கண்ணனை இராமனாக அலங்கரித்துத் திருவுலாக்காட்சி தரச்செய்வர். மூலவர் பத்தடி உயரமானவர்.

*தேன் அமரும் பொழில் தழுவும் எழில்கொள்வீதி*
*செழுமாட மாளிகைகள் கூடம் தோறும்*
*ஆன சொல் சீர் மறையாளர் பயிலும் செல்வத்து*
*அணி அழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே*

எனப் போற்றுவார் ஆழ்வார்.



# கூடையிலே குறத்திகள் முத்துக்கள் அள்ளும் ஊர்

"பொன்னி திரையுந்து நாங்கூர்" என்று ஆழ்வார்களால் புகழப்பெற்ற ஊர் திருநாங்கூர் சீர்காழியிலிருந்து தென்கிழக்கில் எட்டுக்கல் தொலைவில் உள்ள திருத்தலம் இது.

திருநாங்கூர்த் திருப்பதிகள் எனப் பதினோரு திருப்பதிகளைக் குறிப்பிடுவர். இவைஎல்லாம் திருநாங்கூரைச் சுற்றியமைந்தவை. இதில் மூன்று திருப்பதிகள் திருநாங்கூரிலேயே உள்ளவையாகும்.

திருநாங்கூரில் வாழ்ந்த வைதிக அந்தணர்கள் கார்கபத்தியம், ஆகவநீயம், தட்சிணாக்கினி எனும் முத்தீக்களை வளர்த்து, இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களை ஓதிப் பிரம்ம வேள்வி, வேத வேள்வி, பூதவேள்வி, பித்ருவேள்வி, மநுஷ்யவேள்வி ஆகிய ஐம்பெரும் வேள்விகளை நிகழ்த்தி, சிட்சை, வியாகரணம், சந்தத, நிருக்தம், சோதிடம், கல்பம் ஆகிய ஆறு அங்கங்களையும் பயின்று, ஏழு தரங்களையும் அறிந்து வாழ்ந்தவர்களாம்.

அல்லும் பகலும் அந்தணர்கள் மறையோதிக் கொண்டே இருப்பர். அவர்கள் வீட்டு மகளிரும் விடாமல் காதில் பட்ட உறைப்பின் மிகுதியால் வேத வாக்கியங்களைவிடாமல் சொல்லுவர். அவர்கள் வளர்க்கிற கிளிகள் கூட அவர்கள் சொல்வதைக் கேட்டுக் கேட்டு மறைபாடுமாம்.

திருநாங்கூரில் குறத்திகள் விளையாட்டாகக் கிடைக்கின்ற நல்முத்துக்களைக் கூடை கூடையாகக் கொண்டு நாழி நெல்லுக்கு நாங்கூரில் வீடுகளில் பண்டமாற்றுச் செய்வார்களாம்.

இதில் ஒரு சுவையான வரலாற்றுச் செய்தியை திருமங்கை ஆழ்வார் கூறுகிறார். திருநாங்கூராரிடத்து முத்துக்கள் ஏராளமாக இருப்பதால், அவர்கள் குறத்திகளிடம் முத்துக்கள் வேண்டாமென்று சொன்னாலும், அவர்கள் வற்புறுத்துவார்கள் போலும். குறத்திகளைப்பார்த்தவுடன் கதவை யடைத்துக்கொள்வார்களாம். வேண்டாமென்று தள்ளினாலும் நாழி நெல்லுக்கு நானாழிமுத்துக் கொள்ளுங்கள் என்று குறத்தியர் வலுக்கட்டாயமாகக் கெஞ்சித்தள்ளுவார்களாம்.



## "நீயாள வளையாள மாட்டோம்"

திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்களில் "நீயாள வளையாளமாட்டோமே" என்று வரும் பாசுரவரிகள் பற்றிய செய்தி இது.

அம்மங்கியம்மாள் என்பவர் வைணவ ஆசிரியர். அவர் நோயால் துன்புற்றிருந்தார். நஞ்சீயரும் நம் பிள்ளையும் அவரைக் கண்டு விசாரிக்க எழுந்தருளியிருந்தார்கள்.

அப்போது அம்மங்கியம்மாள் மிகவும் மனம் நொந்து இருந்ததால் அவரிடம், "சுவாமி, தேவரீர் சாமானிய மனிதரன்றே; எவ்வளவோ பகவத் பாகவத கைங்கரியங்கள் பண்ணியிருக்கின்றீர் ; குணாநுபவத்தாலல்லது போது போக்கியறியீர்; இப்படிப்பட்டவரான உம்மையும் எம்பெருமான் மற்றவர்களைப்போலவே இப்படித்துன்புறுத்துகின்றானே!" என்றாராம்.

அதற்கு அவர் "நீயாள வளையாள மாட்டோமே" என்பதல்லவா, திருமங்கை பாசுரம் என்று குறிப்பிட்டாராம்.

இப்பாசுரம் பெருமாளிடம் தன் ஆற்றாமையைச் சொல்லிக் கதறுவதாக அமைந்துள்ளது.

இப்பாசுரம் கூறும் செய்தி இது.

"நீ ஆளவளையாள மாட்டோமே"; உன்னுடைய ஆளுகையில் அடங்கியிருப்பவர்க்குக் கையில் வளை தங்கியிருக்கும் வாய்ப்பு இல்லை. விட்டுப் பிரியாமல் கூடியிருக்குங்காலத்தில், மகிழ்ச்சிப்பெருக்கினால் உடம்பு பெருத்து வளைகையில் தங்காது போய்விடும். அதாவது உடைந்து போய்விடும். உன்னைப் பிரிந்து இருக்கும் காலத்தில் உடல் இளைத்துக் கையிலிருந்து வளை கழன்று போய்விடும். ஆகையால் ஒரு போதும் வளையல் கையில் இருக்காது.

இதைக் கூறி எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட்டால் துன்பப்படத்தான் வேண்டும் என்று கூறினாராம்.

இவ்வாறான பதில் கேட்டு, நஞ்சீயர் மகிழ்ச்சி அடைந்தாராம்.



# நஞ்சீயரும் திருவாய்மொழியும்

நஞ்சீயர் நோய்வாய்ப்பட்டு இருந்தார். அவருடைய சீடர்களில் ஒருவரான பெற்றி என்பவர் அவருடன் உரையாடினார். அப்போது அவர் "இப்போது சுவாமிக்கு என்ன திருவுள்ளம்?" என்றும் கேட்டார். அதற்குப் பெரிய திருமொழிப் பாசுரமான

*தாவிரிய மலருழக்கித்*
*துணையோடும் பிரியாதே*
*பூவிரிய மதிநுகரும்*
*பொறி வரிய சிறுவண்டே!*
*தீவிரிய மறை வளர்க்கும்*
*புகழாளர் திருவாலி*
*ஏவரி வஞ்சிலையானுக்கு*
*என் நிலைமை உரையாயே*

என்னும் பாசுரத்தைக் கேட்கவும், பெருமாள் எழுந்தருளப் பின்னும் "முன்னும் சுற்றும் வந்து சேவிக்கவும் விருப்பமாயுள்ளது" என்று அருளிச் செய்தார்.

உடனே வரந்தரும் எம்பெருமாளரையர் என்பவரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து இத்திருமொழியைச் சேவிக்கச் சொல்லினார்.

நான்காம் பாசுரத்தில்,

*தானாக நினையானேன்*
*தன்னினைந்து நைவேற்கு ஓர்*
*மீனாய கொடி நெடுவேள்*
*வலி செய்ய மெலிவேனோ?*

என்னும் பாசுரவரிகளைப் பாடுகையில், நோவு ஏற்படுவதற்கு முன்பே வந்து உதவாமற்போனாலும், ஏற்பட்ட நோயைப்போக்குவதற்காவது வந்தால் ஆகாதோ?" என்று கூறிவருந்தினாராம்.

இப்பாசுரங்களில் பரகாலநாயகி வண்டைநோக்கிப் பேசுகின்றாள் என்பது குறிப்பிடத்தக்கது.



## பாஞ்சராத்ரம்

பிரும்மாவிற்குப் பரப்பிரம்மமான நாராயணர் ஐந்து ராத்ரிகளின் கூறிய சாத்திரம் பாஞ்சராத்ரம். இதில்தான் பிரும்மோத்சவம் விளக்கப்பட்டுள்ளது. திருவரங்கம் கோயிலில் பாஞ்சராத்ர முறைப்படியே வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. வேதம், வைணவம், திவ்யதேசம், பாஞ்சராத்ரம் ஆகிய அனைத்திற்கும் தலைநகர் திருவரங்கமாகும். திருவரங்கத்தில் வைசாக முறைப்படி வழிபாடு நடந்ததாகக் கூறுவர்.

பாஞ்ராத்ரம் கற்று தீட்டை பெற்று யாரும் அர்ச்சகராகலாம். சாதிப்பாகுபாடுஇல்லை. திருவரங்கம், உறையூர், காஞ்சி, மன்னார்குடி ஆகியன பாஞ்சராத்ர வழிபாட்டுத் தலங்கள்.



## தேனீக்களான முனிவர்கள்

திருவாரூருக்கு மேற்கே குடந்தை செல்லும் வழியில் எட்டுக்கல் தொலைவில் உள்ள திருத்தலம் திருக்கண்ணமங்கை. இத்தலத்துப் பெருமாளின் பெயர் பத்தராவிப் பெருமாள். தாயார் பெயர் அபிடேகவல்லித்தாயார். தாயார் தனிச்சந்நிதி கொண்டுள்ளார்.

அங்கு ஓர் அதிசயம். ஒரு பெரிய தேன்கூடு உள்ளது. இது எத்துனை ஆண்டுக்காலமாக உள்ளது என்று கணிக்க முடியாதநிலை.

கணமங்கைப் பெருமாளைப்பிரிய மனமில்லாத முனிவர்கள் தேவீயாகப் பிறக்கவரம் கேட்டனர். அவ்வாறே வரம் அளித்தார் பெருமாள். அவர்கள் நாள்தோறும் பத்ராவிப்பெருமாளையும், அபிடேகவல்லித்தாயாரையும், சுற்றிச் சுற்றி வட்டமிட்டு ஒலி எழுப்பித்துதிக்கின்றார்கள் என்பது நம்பிக்கை.

இத்தேன் கூட்டில் தேனீக்களாக முனிவர்கள் வாழ்கிறார்கள் என்பது அடியவர் நம்பிக்கை ஆதலால் நாள்தோறும் தேன்கூட்டிற்குப் பூசை நடைபெறுகிறது.

*பெரும் புறக் கடலை, அடல் ஏற்றினை*
*பெண்ணை ஆணை, எண்இல் முனிவர்க்கு அருள்*
*தரும் தவத்தை, முத்தின்திறள் கோவையை*
*பத்தர் ஆவியை, நித்திலத் தொத்தினை*
*கரும்பினை, அவரை அடியேன் மனத்து*

*ஆசையை, அமுதம் பொதிஇன் தவைக்*
*கரும்பினை, தனியை சென்று நாடி*
*கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே.*



## அன்ன பிரும்மா

திருப்பதியில் வாழும் பெருமாள் "கனகபிரும்மா" ஆவார்.

பாண்டரிபுரத்துப் பரந்தாமன் "நாதப்பிரும்மா" ஆவார்.

உடுபியில் கோயில்கொண்ட கோகுலவாசன் "அன்னபிரும்மா" ஆவார்.

இதனால் தினமும் பசித்து வரும் மக்களுக்கு மதிய வேளையில் உடுப்பிபாலகிருஷ்ணன் உணவளிக்கிறார்.

"உடு" என்றால் நட்சத்திரம் பா எனில் தலைவன். கண்ணன் நட்சத்திரங்களில் தலைவன் ஆதலால் உடுபி.

உடுபா எனில் நட்சத்திரங்களில் தலைவன். தலைவன் யார் எனில் சந்திரன்தான் அத்தலைவன் சந்திரன் உடுபியில் ஈசுவரன் அருள் பெற்றதால் உடுபி ஆயிற்று. உடுபா என்பது உடுபியாகவும், உடுப்பியாகவும் மாறிவிட்டது.

சந்திரன் ஒரு முறை தட்சப்பிரஜாபதியால் சபிக்கப்பெற்றுச் சாப விடுதலை பெறச் சிவபெருமானை நோக்கித் தவமிருந்ததன் பயனாய் ஈசுவரன் சந்திரனின் களங்கத்தைப் போக்கினார். ஈசுவரன் உடுபியில் சந்திர மௌலீசுவரர் என்னும் திருப்பெயருடன் உடுப்பிகிருஷ்ணனுக்கு எதிரிலே இருக்கிறார்.



## உடுப்பி பாலகிருஷ்ணன்

உடுபி பாலகிருஷ்ணன் கண்ணபிரானின் காதல் மனைவியான ருக்மிணி தேவி வழிபட்ட விக்ரகம்.

கண்ணனின் அன்னை தேவகி இளம் பருவத்தில் தன் மகள் ஆடியவிளையாட்டுகளையும், குறும்புச்செயல்களையும், மீண்டும் கண்டு மகிழ வேண்டும் என விரும்பினாள். அன்னையின் விருப்பத்தின்படி அந்தத் திருவிளையாடல்களை—சிறுபிள்ளைக் குறும்பு விளையாட்டை நடத்திக் காட்டினான்.

பாலகண்ணனாய்த் தன் கணவரின் விளையாடல்களை மறைவிலிருந்து பார்த்தாள் ருக்மணி. தன் வழிபாட்டிற்கு அப்படியொரு இளம்பிள்ளைக்கண்ணன் சிலை வேண்டும் எனப் பிரார்த்தித்தாள்.

எனவே கண்ணன் தேவலோகச் சிற்பி விசுவகர்மாவை அத்தகைய பாலகிருஷ்ணனைப் படைக்கச் சொன்னார். வலக்கையில் மத்தும் இடக்கையில் கயிறையும் வைத்துக்கொண்டு குறும்புச்சிரிப்பும் குறுகுறுத்த விழிபடைத்த பொலிவுமுகம் கொண்ட பாலகிருஷ்ணனைப் படைத்தளித்தார். ருக்மிணியிடம் அவள் வேண்டிய படி வழிபட அளித்தார். கிருஷ்ணாவதாரத்தின் இறுதியில் அருச்சுணன் இந்தச் சிலையைத் துவாரகையில் நந்தவனத்தில் ஒளித்து வைத்தான்.

மத்துவரின் காலத்தில் சௌராட்டிரா தேசத்திலிருந்து ஒரு பெரிய படகு புறப்பட்டது. அப்படகில் கோபிச்சந்தன உருண்டைகள் இருந்தன. அப்படகு உடுப்பிக்கு மூன்று கல் தொலைவில் உள்ள மால்பே என்ற இடத்தை நெருங்கியபோது, கடற்கரையில் இருந்த மத்துவர் அக்கப்பலில் இருந்த கோபிச்சந்தன உருண்டைகளின் சிறப்பை உணர்ந்தவர்.

அப்போது திடீரென்று புயல்வீச மத்வர் தம் தவ வலிமையால் புயலைத்தணித்தார். படகு உரிமையாளர் மத்வரிடம் அவருடைய உதவிக்கு நன்றியாகப் படகிலிருந்து இரண்டு கோபிச்சந்தன உருண்டைகளைப் பெற்றுக்கொள்ள வேண்டினார். அதில் இரண்டு பெரிய உருண்டைகளைப் பெற்றார்.

இரண்டு உருண்டைகளில் ஒன்றினை உடைத்தபோது அதில் ஸ்ரீ பலராமன் சிலையும், மற்றொன்றில் பாலகிருஷ்ணனின் உருவச்சிலையும் இருந்தன.

வடபண்டேச்வராவில் பலராமனைப் பிரதிஷ்டை செய்தார். பாலகிருஷ்ணனை உடுப்பியில் ஆலயம் எழுப்பிமுறைப்படி வழிபாடு செய்தார்.



## ஜன்னல் வழியே கண்ணன்

உடுப்பியில் உள்ள பாலகிருஷ்ணனை நேரில் தரிசித்து வழிபட முடியாது ஒன்பது துவாரங்கள் கொண்ட நவக்கிரகக் கண்டி எனப்படும் ஜன்னல் வழியாகவே தரிசிக்க வேண்டும். இன்றும் மாறாப்புதுமை இது.

ஸ்ரீமத்வர் எப்படிப்பாலகிருஷ்ணனைப் பூஜிக்க வேண்டும், என்ன என்ன அலங்காரம் செய்ய வேண்டும், என்ன என்ன நைவேத்தியம் என்பன எல்லாம் தாமே முறை வகுத்துள்ளார். ஒவ்வொரு நாளும் பாலகிருஷ்ணனைப் பூஜிக்கும் சீடரான சுவாமி ஒன்பது முறை குளித்து வழிபாடுகளைச் செய்கிறார்.



## திருமால் திருப்பெயர் விளக்கம்

| | | |
|---|---|---|
| அச்சுதன் | – | தன் நிலையினின்று வழுவாதவன் |
| கிருஷ்ணன் | – | கறுப்பு நிறமானவன். அழுக்கை நீக்குபவன் மும்மூர்த்தி சொரூபம், அடியார் துயர் களைபவன் |
| கேசவன் | – | அழகியமுடியுடையவன். கேசி எனும் அரக்கனை அழித்தவன் |
| கோவிந்தன் | – | ஜீவர்தனை அறிபவன் |
| மதுசூதனன் | – | மது எனும் அசுரனை அழித்தவன் |
| ஜனார்த்தனன் | – | மக்களால் துதிக்கப்படுபவன் |
| கரிசூதன் | – | எதிரிகளை அழிப்பவன் |
| வாசுதேவன் | – | வசுதேவன் மைந்தன், எல்லா உயிர்களிடத்திலும் இருப்பவன் |
| புருமடர்த்தன் | – | பரமபுருசன் |
| பகவான் | – | சற்குண சம்பண்ணன் |
| யோகேசவன் | – | யோகத்துக்குத்தாபவன் |
| விஷ்ணு | – | எங்கும் வியாபகமாயிருப்பவன் |
| ஜகந்நிவாசன் | – | உலகுக்கு இருப்பிடமானவன் |
| யாதவன் | – | மதுகுலத்தில் தோன்றியவன் |



## பரமபதம் அடைய

"எல்லா வைணவர்களையும் உங்கள் ஆசிரியரைப் போன்றே மதித்து மரியாதை செய்யுங்கள். ஆச்சாரியர்களின் அறிவுரைகளில் ஆழ்ந்த நம்பிக்கை கொள்ளுங்கள். அவர்களின் நூல்களைத் திரும்பத் திரும்பப் படியுங்கள்.

உலக இன்பத்துக்கு அடிமை ஆகாதீர்கள். அது இல்லை, இது இல்லை என்று கவலைப்படாதீர்கள். உங்களுக்கு என்ன கொடுக்க வேண்டும் என்பது பெருமாளுக்குத் தெரியும். அவருடைய திருவடிகளை முழுக்க முழுக்கச் சரணடைந்தால் நீங்கள் எல்லாம் பெறுவீர்கள்.

இறைவனுக்குத் தொண்டு செய்வது போலவே மக்களுக்கும் தொண்டு செய்யுங்கள். இறைவன் உயிர், மக்கள் அவன் உடல். எனவே, மக்கள் தொண்டே மகேசன் தொண்டு. அடியார்க்குப் பணி செய்வதே இறைவனை அடையும் வழி. பகவானையும் பாகவதர்களையும் ஒன்றாக மதியுங்கள். பாகவதர்களுக்குச் செய்யும் பணி பகவானுக்குச் செய்யும் பணியாகும்.

பிறந்த சாதியைக் கொண்டு யாரையும் உயர்ந்தவன் – தாழ்ந்தவன் என்று பிரிக்காதீர்கள். இறைவன் படைப்பில் எல்லா மக்களும் சமம் என்று மதியுங்கள். பாகவதர்கள் இடையே எந்தப் பாகுபாடும் காட்டாதீர்கள். சாதி கொண்டு உயர்வு–தாழ்வு பார்ப்பவர்கள் நரகம் புகுவார்கள். பாஷ்யம் பயின்று பார் எங்கும் பரப்புங்கள். அது முடியாதவர்கள் திவ்யப்பிரபந்தங்களை மக்களுக்குப் படித்துக் காட்டுங்கள். திருவாய் மொழியைத் தவறாது கோவில்களில் பாடுங்கள். திருப்பதிகளுக்குச் செல்லுங்கள். மக்களுக்கு வைணவர் களுக்குத் தொண்டு செய்யுங்கள். இதுவே பரமபாதம் அடையும் பாதை."

– **எம் பெருமானார் இராமானுஜர்**